# நானும் என் கவிதையும்

பதிப்பாசிரியர்

முனைவர் மு. வளர்மதி



International Institute of Tamil Studies

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# நானும் என் கவிதையும்

பதிப்பாசிரியர்
முனைவர் மு. வளர்மதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Naanum en kavithaiyum |
| Editor | : | Dr. M. Valarmathi<br>Research Assistant,<br>I.I.T.S. C.P.T. Campus,<br>Chennai - 600 113. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai 600 113. |
| Publication No | : | 348 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | December 1999 |
| Paper Used | : | 18.6 kg TNPL Super Printing |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 point |
| No. of Pages | : | xv + 166 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 40/- |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 4 Ph. 4984693 |
| Subject | : | Poets and their Experiences |

# முன்னுரை

கருத்தை விதையாகக் கொண்டது கவிதை; கற்பனையைக் களமாகக் கொண்டது கவிதை; கவிஞனின் உணர்வில் விளைவது கவிதை; வாழ்வில் முகிழ்ப்பது கவிதை எனக் கவிதைக்குரிய பண்பை பலவாறு எடுத்துரைக்கலாம். காலந்தோறும் கவிதைகள் புதுப்புது வடிவங்களில் இடம்பெற்று வருகின்றன. வாழ்க்கையைப் பற்றிய திறனாய்வே கவிதையின் அடிப்படையாக அமைகிறது. ஆகையால் கவிதையின் உள்ளடக்கம், உருவம் ஆகியன காலத்துக்குக் காலம் மாறுபட்டு விளங்குகின்றன. பண்டைக்காலந்தொட்டு உரிய இலக்கணக் கட்டுப்பாடுகளுடன் செய்யப்பட்டதையே 'செய்யுள்' என்று வழங்கினோம். இருபதாம் நூற்றாண்டில் உலகில் ஏற்பட்ட கவிதைக் கோட்பாடுகள் பற்றிய சிந்தனைகள் இந்த இலக்கண வரம்புகளைத் தளர்த்தின. இதனால் இன்று நாம் 'செய்யுள்' எனக் குறிப்பிடாமல் மரபுக் கவிதை, புதுக்கவிதை, குறுங்கவிதை எனக் குறிப்பிடுகிறோம்.

'சொற்கள் சிறப்பாகக் கோர்க்கப்படுவது உரைநடை, சிறந்த சொற்கள் சிறப்பாகக் கோர்க்கப்படுவது கவிதை' என்று கூறுகிறார் ஸேம்யல் காலெரிட்ஜ் என்ற அறிஞர். இது உரைநடைக்கும் கவிதைக்கும் உள்ள வேறுபாட்டை சுருக்கமாக விளக்குகிறது. ஆற்றல் வாய்ந்த உணர்ச்சிகளின் வெளிப்பாடுகள் உரைநடையாக அல்லாமல் கவிதையாக வெளிப்படுகின்றன. இந்தப் போக்கு கவிஞனுக்குக் கவிஞன் வேறுபடுகின்றன. கவிதைகளும் புதியனவாகப் பிறக்கின்றன; அதற்கேற்ப வடிவங்களும் அமைகின்றன.

"வெண்பாவிற் புகழேந்தி; பரணிக்கோர்
செயங்கொண்டான்; விருத்தமென்னும்
ஒண்பாவிற் குயர் கம்பன்; கோவையுலா
அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
வசைபாடக் காளமேகம்
பண்பாக உயர்சந்தம் படிக்காசு
அலாதொருவர் பகரொணாதே"

என்ற பழம் பாடல் பண்டைக் கவிகளின் சிறப்பை உணர்த்துகிறது. தமிழின் தொன்மை இலக்கியம் அனைத்தும் புலவர்கள் படைத்து வழங்கியவைதாம்.

உலகின் பெரும்பான்மை மொழிகளில் கவிஞர்களும் கவிதைகளும் பரவிக் கிடக்கிறார்கள். ஆனாலும் கவிஞன் யார்? எது கவிதை? என்ற விவாதங்கள் இன்றும் எழுவதுண்டு. நீண்ட நெடுங்காலமாக இருந்து வந்த கவிதைக்குரிய தனிப்பண்புகள், இலக்கணங்கள், கோட்பாடுகள், அழகியல் உணர்வுகள் பற்றிய சிந்தனைகள் அனைத்தும் 19ம் நூற்றாண்டின் அறிவியல், பொருளியல், அரசியல், உளவியல், தத்துவயியல் ஆகியவற்றில் ஏற்பட்ட வளர்ச்சியின் காரணமாக மாறத் தொடங்கின.

"புதிய பரிசோதனைகளைச் செய்துபார்க்க வேண்டும் என்ற உள்ளுணர்வு வளர்கிற மனிதனுக்கு இயல்பானது. மனிதன் - அப்பன் வெட்டிய கிணறு என்பதற்காக உப்புத் தண்ணீரையே குடித்துக் கொண்டிருக்கும் துருப்பிடித்த எண்ணங்களை மாற்றிச் சோதனைப் பயணங்களை மேற்கொண்டான். வசனகவிதை பிறந்துவிட்டது. இந்நூற்றாண்டின் இருபதுகளில் இத்தகைய புதிய அலைகள் இந்திய நாட்டின் ஏனைய இலக்கியக் கரைகளையும் தழுவின. சாயாவாத் (Chaayavad) இந்தியிலும், கலேயர் கம்பு (Galeyer Gampu) கன்னடத்திலும், இரவிக்ர மண்டல் (Ravikramandal) மராத்தியிலும், கல்லோல் (Kallol) வங்காளத்திலும், சாபூஜ் (Sabuj) ஒரியாவிலும் இலக்கியப் பரிசோதனையால் விளைந்த புதிய போக்குகளாகும்" என்று கவிஞர் மீரா குறிப்பிடுகிறார், இத்தகைய புதிய போக்குகளால் தத்துவங்களையும், நீதி நெறிகளையும் புகட்டுவது மட்டும் கவிதையின் வேலை அன்று; நிகழ்கால மக்கள் சமுதாயத்தின் குரலை எதிரொலிப்பதும் கவிதையின் கடமை என்ற உணர்வு தோன்றியது. கவிதையின் கருப்பொருள் உயர்ந்ததாகத் தான் இருக்க வேண்டும் என்ற சிந்தனை நொறுங்கத் தொடங்கியது. அன்றாட வாழ்வில் தட்டுப்படும் சாதாரண பொருள்களும், இழிந்த பொருள்களும் அழகானவை என்றும், அப்பொருள்களை அழகிய சொல்லோவியத்தால் அலங்கரிப்பதே மேலான கவிதை உத்தி (Grand Style of Poetry) என்ற கருத்து தோன்றியுள்ளது. ஏழை, குடிகாரன், தெருப் பிச்சைக்காரன், விபசாரி, அபலை என்று அதுவரை முகஞ்சுளித்து முகத்தை திருப்பிய சமூகத்தின் அவலங்கள் பலவும் கவிதையின் கருப்பொருளாக முடியும் என்பதை தங்கள் கவிதைகள் மூலம் கவிஞர்கள் நிறுவிக் காட்டினர்.

"கவிதைக்கு மிகவும் நெருக்கமானவை ஒரு துண்டு ரொட்டியும் ஒரு கலயம் கஞ்சிச் சோறும்" (பாப்லோ நெருடா) என்று கவிதையின் கருப்பொருள் எளிமையாக்கப்பட்டது. 19ஆம் நூற்றாண்டில் அமெரிக்க நாட்டு கவிஞன் வால்ட்விட்மன் (1819-1892), மரபான செய்யுளாக்கத்திலிருந்து விடுபட்டு தமது கவிதைகளைப் படைக்கத் தொடங்கினார். இந்தப் புதிய கவிதை அமைப்பு 'கட்டற்ற கவிதையாக' (Free verse) அறிமுகமானது.

பிரெஞ்சு நாட்டு கவிஞர்கள் பியர் சார்ல் போதலேர், (1821-1867), ஆர்தர்ரேம்போ (1854-1891), ஜெர்மன் நாட்டு கவிஞர்கள் ரெய்னர் மேரியா ரில்க் (1875-1926), பெர்டோல்ட் ப்ரெக்ட் (1898-1956), அமெரிக்க நாட்டு அறிஞர்கள் எஸ்ரா பவுண்ட் (1885-1972), டிஎஸ். எலியட் (1888-1965), ருசியப் பெண் கவிஞரான மெரீனா ஸ்வெட்டேவா (1892-1941), மக்கள் கவிஞர் விளாடிமிர் மாயகோவ்ஸ்கி (1893-1930), ஸ்பெயின் நாட்டு கவிஞர் ஃபெடரிகோ கார்சியா லார்கா (1898-1936), சிலி நாட்டு புரட்சிக் கவிஞர் பாப்லோ நெருடா போன்ற புகழ் பெற்ற புதுக்கவிஞர்கள் பழைய கவிதை இறுக்கத்தை உடைத்தவர்கள் என்பதை அவர்களின் வரலாறுகள் எடுத்துக் காட்டுகின்றன.

"சர்ரியலிசம், சிம்பலிசம் என்னும் இயக்கங்களின் ஊற்றுக் கண்ணாக விளங்கி, கலை கலைக்காகவே என்று குரல் கொடுத்த பிரெஞ்சுக் கவிஞன் **போதெலர்,** அவரின் அடிச்சுவட்டில் விடலைப் பருவக் கனவுகளை விதவிதமாய் வெளிப்படுத்தி உரைநடைக் கவிதை மூலம் பிரெஞ்சுக் கவிதையில் பெருந்தாக்கத்தை ஏற்படுத்திய **ரெம்போ,** இறுக்கமும் சுருக்கமும் கொண்ட கவிதைகளைத் தந்த ஜெர்மனியின் தலைசிறந்த ஆன்மிகக் கவிஞர் **மேரியா ரில்க்**, படிம இயக்கத்தைத் தோற்றுவித்து ஜப்பானிய ஹைகூ கவிதைகளை உலகறியச் செய்த **எஸ்ரா பவுண்ட்**, குறியீடும் அங்கதமும் அமைந்த கவிதைகளைப் படைத்தளித்து, 'பாழ்நிலம்' மூலம் நோபல் பரிசு பெற்ற மரபிலக்கியத் திறன் மிக்க **டி.எஸ். எலியட்**, எந்த இலக்கிய இயக்கத்திலும் தன்னை இணைத்துக் கொள்ளாமல் புதுக்கவிதையில் கிராமியப் பாடல் புனைவதில் புகழ்பெற்ற **ஸ்வெட்டேவா,** ருசியப் பொதுவுடைமை இயக்கத்தின் புரட்சி எரிமலை **மாயாகோவ்ஸ்கி,** மரபிலும் புதுமையிலும் நல்லதை அறுத்து நல்லதை விதைத்த ஸ்பெயின் நாட்டு கார்சியா லார்கா, மானுடம் பாடிய ஜெர்மனியின் மார்க்சியக் கவிஞன் **ப்ரெக்ட்,** அரசியல் வெளிப்பாடும் நடப்பியலும் அமைந்த புரட்சிக் கவிதைகளைப் படைத்துப்

பொதுவுடைமைச் சங்கநாதம் செய்த சிலியின் **பாப்லோ நெருடா** ('புகழ்ப்பெற்ற புதுக்கவிஞர்கள்' - முருகு சுந்தரம்) ஆகிய அனைவரும் கவிதை உலகைப் புதுப்பித்த புது உலகச் சிற்பிகள்.

கவிதை உலகின் பல்வேறு பரிணாமங்கள் திறனாய்வு செய்யப்பட்டன. கலை, இலக்கியத்தின் புதிய கோட்பாடுகள் கவிதை உலகில் புதிய திருப்பத்தை உருவாக்கின. "காலங் கடந்த படைப்புகளைப் போற்றிப் பாதுகாத்து வழிபடும், உயிரற்ற கலைப் பொருட்காட்சிச் சாலை நமக்குத் தேவையில்லை; தெருக்களிலும், வண்டிப் பாதைகளிலும், தொழிற் சாலைகளிலும், பணிமனைகளிலும், பாட்டாளிகளின் இல்லங்களிலும் காணப்படும் மனித உணர்வுகளின் உயிர்த் துடிப்பான தொழிற்கூடங்கள் தேவை" (மாயாகோவ்ஸ்கி) போன்ற கருத்தழுத்தம் மிக்கச் சிந்தனை மேட்டுக் குடியினரின் கலை கலைக்காகவே என்ற சிந்தனையை தகர்த்தது. கலையை விடுதலைக்குரிய ஒரு போர்க்கருவியாக மாற்றி அடிமைத் தளையில் சிக்கித் தவித்த ஏழைகளின் கையில் கொடுக்க விரும்பினான் மாயாகோவ்ஸ்கி. இதனால் பொதுவாக அதுவரை ஏற்றுக் கொள்ளப்பட்ட கவிதைக்குரிய 'ஜனரஞ்சகமான கட்டுமானங்கள்' யாவும் சரிந்தன. அவ்வாறே மாயாகோவ்ஸ்கி தனது கவிதைகளைப் படைத்துக் காட்டினார். அதனால் அவர் மக்கள் கவிஞரானார். இந்த மாற்றம் பலராலும் விரும்பி வரவேற்கப்பட்டது. யார் கவிஞன்? எது கவிதை? என்பதைப் பற்றிய கருத்தோட்டமும் மாறியது.

"உழவனின் மகன் கேட்டான்
அப்பா, கவிதை என்றால் என்ன?
விதைத்து அறுப்பது
என்றான் உழவன்

தையல்காரனின் மகன் கேட்டான்
அப்பா, கவிதை என்றால் என்ன?
கிழியாத வெதுவெதுப்பான ஆடைகளை தயாரிப்பது
என்றான் தையற்காரன்

தளபதியின் மகன் கேட்டான்
அப்பா, கவிதை என்றால் என்ன?
கொரில்லாவுக்கு எதிராக பூர்ஷ்வா வர்க்கத்தின்
இராணுவத்தை வழி நடத்தி செல்வது என்றான் தளபதி

கவிஞனின் மகன் கேட்டான்
அப்பா, கவிதை என்றால் என்ன?

எனக்குத் தெரியாது என்றான் கவிஞன்
ஆனால் கவிதைகளை எழுதுவது
கவிதை ஆகாது மகனே!"

என கிரேக்கத்தைச் சேர்ந்த '**கோஸ்டிஸ் பாப்ப கோங்லோஸ்**' என்ற கவிஞர், ஒரு நாட்டுப் பாடலாக வழங்கியிருக்கிறார். உழைப்புதான் கவிதை; உழைப்பின் கடமைதான் கவிதை என இக்கவிஞர் சிந்திக்கிறார்.

இவ்வாறு கவிதையைப் பற்றிய சிந்தனை கவிஞர்களுக்குள் வேறுபடுகிறது. தன்னுணர்ச்சிக் கவிதை (Lyric Poetry) யானாலும், அணி சார்ந்த கவிதையானாலும் கவிஞர்களின் உணர்வுகள் வெவ்வேறு விதமாக வெளிப்படுத்தப்படுகின்றன. வாழ்வியல் சூழலும், சமூகத்தின் தாக்கமும் ஏற்படுத்துகின்ற பாதிப்பும் கவிஞர்களின் கவிதை அணுகுமுறையில் மாற்றம் ஏற்படுத்துகின்றன.

ஒரு காலத்தில் சொல்லலங்கா[illegible]த்தன்மை போற்றப்பட்டது. பிறகு அந்தத் தன்மையிலிருந்து விடுபட்டு மனித நேயத்தை மையமாக்கிய கவிஞர்கள் போற்றப்பட்டனர். பழமையைப் பரிசீலிக்கும் போக்கும் வளர்ந்தது. இகத்தை மறந்து பரலோகத்தைப் பற்றிய கற்பனையில் மூழ்கி கவிதை படைக்கும் கவிஞர்கள்; பொய், களவு, பொறாமை, ஏமாற்று, விபச்சாரம், போலித்தனம், சுயநலம், சடங்கு சம்பிரதாயங்கள், வறுமை, தீண்டாமை, ஆண்-பெண் அடிமைத்தனம் ஆகிய அனைத்தும் நிறைந்த சமூகத்தை அப்படியே அதன் நிகழ்வுப் போக்கில் கவிதை படைக்கும் கவிஞர்கள்; தனிமனிதக் கவலைகள், உளவியல் உளைச்சல்கள், மகிழ்ச்சி ஆகிய அனைத்தையும் கவிதைகளாக்கி வழங்கும் கவிஞர்கள்; எந்த இயக்கத்தையும், எந்த இசத்தையும் சாராமல் கவிதை வழங்கும் கவிஞர்கள் எனக் கவிஞர்களின் உலகம் பரந்து, விரிந்த ஒன்றாகவே உள்ளது. இவர்கள் படைத்து வழங்கும் கவிதைகளுக்குள் மொழி, நிலம், பண்பாடு, இயற்கைக் கூறுகள் ஆகிய அனைத்தும் ஊடுருவி நிற்பது பொதுவானது. இவற்றின் காலப் பதிவுகளாக, வரலாறாக கவிதை பரிணமிக்கிறது.

ரோஜா மலரை இறைவனின் அருளாகப் பார்க்கும் ஒரு கவிஞனின் கவிதைப் பார்வைக்கும், ரோஜாவின் சிவப்பை பாட்டாளியின் குருதியாக, உழைப்பின் சின்னமாகக் காணும் கவிஞனின் கவிதைப் பார்வைக்கும் இடையே ஒரு நீண்ட இடைவெளி உண்டு. நீண்ட நெடுங்காலமாக இறைவனின் அருளாகத் தோன்றிய ஒன்று, பாட்டாளியின் குருதியாகப் பார்த்துப் படைக்கும் இந்த முரண்பாடு புதியனவாக அமைகின்றன.

திடீரென்று ஒரு நாளில் எவரும் கவிஞராகி விடுவதில்லை. அனுபவம், சூழல், பாதிப்பு, தவிப்பு, ஏக்கம் அனைத்தும் சேர்ந்தே ஒருவரை கவிஞராக்குகிறது. இந்தத் தொகுப்பில் இடம்பெற்ற கவிஞர்களின் அனுபவங்கள் இதை எடுத்துக் காட்டும்.

"கவிதை என்பது ஒரு படைப்பு. அது ஒரு பூவைப் போல் இயற்கையாக மலர வேண்டும். கண்ணீர்த் துளியைப் போல் உணர்ச்சிகளில், தானே சுரக்க வேண்டும். கவிதை மனித வாழ்க்கையைப் பற்றி, பிரபஞ்சத்தைப் பற்றிப் புது தரிசனங்களைத் தருவதாக இருக்க வேண்டும். கவித்துவத் தருணங்களில் மின்னலாய் உதிக்கும் வரிகளே இயற்கையான கவிதைகள். அவற்றை வடிவத்திற்காகச் சிதைக்காமல் அப்படியே தர வேண்டும் என்று முடிவு செய்தேன். மரபு யாப்பையும் மறுவுயிர்ப்புத் தந்து எழுப்ப வேண்டும் என்பது என் எண்ணம்" எனக் குறிப்பிடுகிறார் கவிஞர் அப்துல் ரகுமான்.

"கவிதை என்பது உள்ளுக்குள் ஊற்றெடுத்துப் பொங்கிக் கிளம்புகிற கங்கையின் புறப்பாடு.

எண்ணங்களாகிய சலவைக் கற்களில் எழுந்த தாஜ்மகாலை எழுத்துக் களத்துக்கு இழுத்து வருகிற வலை.

பேனா என்கிற தூண்டிலில் பிடிபடும் மீன்

ஆர்ப்பரித்துக் குமுறியெழும் சமுதாயத்தின் ஆயுதம்

என் கவிதைகள் இந்தச் சமூகத்தைப் பார்க்க உங்களுக்கு உதவும் ஜன்னல்கள்,

அந்த ஜன்னல்களின் மூலம்தான் பூமியும் என்னைப் புகைப்படமெடுத்துக் கொள்கிறது.

என் கவிதைகள் என்னையே நான் கண்டுகொள்ள உதவும் கண்ணாடிகள். சில சமயம் அலை நீரில் நிழலாய்.... சில சமயம் என் சிலை வார்ப்பாய்"

என்று தனது கவிதையைப் பற்றி கூறுகிறார் மேத்தா. இவ்வாறு ஒவ்வொரு கவிஞனுக்கும் ஒவ்வொரு விதமான சூழலில் கவிதை அனுபவம் கிடைக்கிறது. ஒரு கவிஞனின் கவிதைகள் மற்றொரு கவிஞனுக்குத் தாக்கமாக அமைகிறது. தற்காலத் தமிழகக் கவிஞர்கள் பெரும்பாலோருக்கு பாரதியின் கவிதைகளும், பாரதிதாசன் கவிதைகளும்

பெரும் தாக்கத்தை ஏற்படுத்தின. இதற்கு அக்காலக்கட்டத்தில் வெளிவந்த பெரும்பாலான இதழ்கள் உறுதுணையாக விளங்கின.

"புரட்சிக் கவிஞர் பாரதிதாசனைப் பின்பற்றி ஒரு புலவர் கூட்டம் உருவானது! அந்தக் கூட்டம், தந்தை பெரியாரின் பகுத்தறிவு வேலிக்குள்ளிருந்து விடுபடாத கூட்டம்! அறிஞர் அண்ணாவின் சமுதாயம் சீர்திருத்த வட்டத்தைவிட்டும் விலகாத கூட்டம்! 1947 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதல் புதுக்கோட்டையிலிருந்து **பொன்னி** இதழ் திரு. முருகு சுப்பிரமணியன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது. புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கவிதைகளையும் அவர்தம் இலக்கியச் சிறப்பையும் தமிழுலகத்தில் பரப்புவதை முக்கிய நோக்கமாகக் கொண்டு தொடக்கத்திலிருந்தே பாவேந்தரின் கவிதையை ஒவ்வொர் இதழிலும் வெளியிட்டு வந்தனர். அந்த நாளில் திராவிடர் கழகத் தொண்டர்கள் மத்தியிலும் சுயமரியாதை இயக்கத்திலும் மட்டுமே பாவேந்தரின் புகழ் பரவி இருந்தது. அந்த நிலையை மாற்றித் தமிழ் இலக்கிய உலகம் அனைத்திலும் பாவேந்தரின் கவிதைகள் பரவ வேண்டுமென்று 'பொன்னி' இதழில் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. பாவேந்தரின் கவிதைகள் இடம் பெற்றதுடன், அவர் காட்டிய மரபில் அவர் கொள்கை வழி நின்று கவிதைகள் படைக்கும் கவிஞர்களுக்கு 'பொன்னி' இதழில் எழுதும் வாய்ப்புக் கிடைத்தது. வளர்ந்து வந்த அந்த இளங்கவிஞர்களெல்லாம் 'பாரதிதாசன் பரம்பரை' என்னும் தலைப்பில் அறிமுகப்படுத்தப்பட்டனர்" என்று கவிஞர் சுரதா அக்காலச் சூழலை, செயல்பாட்டை அவருடைய அனுபவமாக இத்தொகுப்பில் எடுத்துரைத்துள்ளார்.

இத்தகைய கவிதைப் போக்கும், கவிஞர்களின் அணி சார்பும் அக்கால சமூக அரசியல் இயக்கங்களின் வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்கின. இத்தொகுப்பில் இடம் பெற்ற கவிஞர் இன்குலாப், கவிஞர் தணிகைச்செல்வன், கவிஞர் தமிழன்பன் ஆகியோர் இதற்குச் சான்றாக தங்களுடைய அனுபவங்களை எடுத்துரைத்துள்ளனர். "இயக்கம் சார்ந்த கவிஞர்களைப் பற்றி காணப்படும் திறனாய்வுகளுக்கு கவிஞர் தணிகைச் செல்வன் இத்தொகுப்பில் பதில் அளித்துள்ளார். "இயக்கம் சார்ந்த கவிஞர்களாக இருப்பதிலே உள்ள பலம் நீங்கள் மக்களை நேரடியாக சந்திக்கிறீர்கள். பலவீனம் உங்கள் கவித்துவம் குறைந்து போகிறது என்ற விமர்சனம். அந்த விமர்சனத்தை ஏற்றுக்கொள்ள நாம் தயார்" என்று கூறுகிறார். இத்தகைய போராட்ட அணுகுமுறையில் கவிதை அழகியல் உணர்வு குறைந்துபோகிறது அல்லது அற்றுப் போய்விடுகிறது என்று

கூறுவோருக்கு கவிஞர் இன்குலாப் பதிலளித்துள்ளார். "கலை - கலைக்காகவா - வாழ்க்கைக்காகவா என்ற வாதம் பொருளற்றது என்று கருதுகிறேன். மனித வாழ்வின் இறுதி இலக்கே கலையும் பண்பாடுந்தான். எனவே வாழ்க்கையே கலைக்காக என்பதுதான் என் படைப்பு முயற்சியின் துணிபும். இதை அடைவதற்காக நான் போராட்டத்தை முன் மொழிகிறேன். அழகிய வாழ்க்கை என்பது இறுதி இலக்காகும்போது அழகியலை எவ்வாறு புறக்கணிப்பேன்? போராட்ட அழகியல் மரபின் தொடர்ச்சிதான் என் கவிதைகளும்" என்று பதிலுரைக்கிறார் கவிஞர் இன்குலாப். இப்படி ஒரு கவிஞனே தன்னுடைய கவிதை அனுபவத்தையும், கவிதை நோக்கத்தையும் எடுத்துரைக்கும் பொழுது மற்றவர்கள் அதைத் தெளிவாக தெரிந்துகொள்ள வாய்ப்பாக அமைகிறது.

கவிதையைப் படைக்கும் படைப்பாளியின் வாழ்வு, கவிதைகளின் உருவாக்கம், நோக்கம் பற்றி நூல்களில் இடம் பெறுவது அரிது. படைப்பாளி தன்னுடைய கவிதை அனுபவங்களைப் பற்றிக் கூறும்பொழுது மேலும் பல செய்திகளை வாசகர்கள் அறிந்து கொள்ள முடியும்.

தற்காலத் தமிழ்க் கவிதைகள் பற்றி பல ஆய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. இந்த ஆய்வுகளுக்குத் துணை செய்யும் வகையில் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் **'நானும் என் கவிதையும்'** என்ற தலைப்பில் 1996-97 ஆம் ஆண்டுக்கான 'திங்கள்' (மாதம்) கருத்தரங்குகளை நடத்தியது. அத்தலைப்பின்கீழ் சொற்பொழிவாற்ற கவிஞர்கள் பலருக்கு அழைப்பு விடுக்கப்பட்டது. அவ்வழைப்பை ஏற்று அப்துல்ரகுமான், இன்குலாப், சுரதா, சிற்பி பாலசுப்பிரமணியம், மேத்தா, தமிழன்பன், மீரா, தணிகைச் செல்வன், வைத்தீஸ்வரன், பழமலய், வேழவேந்தன், திலகவதி ஆகிய 12 கவிஞர்கள் இக்கருத்தரங்கில் பங்கு கொண்டு சிறப்புரையாற்றினார். இதில் கவிஞர்களின் சொற்பொழிவுகள் அனைத்தும் தொகுக்கப்பட்டு நூலாக்கம் செய்யப்பட்டுள்ளது.

இக்கருத்தரங்கிற்கு முறையே அண்ணா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பேராசிரியர் இரா.மா. வாசகம், மாநிலக் கல்லூரி முதல்வர் முனைவர் அப்துல்ரசாக், வள்ளியம்மாள் கல்லூரி முதல்வர் பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம், சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் இ.சுந்தரமூர்த்தி, புதுக்கல்லூரி முதல்வர் மு.ஜெய்லானி, முனைவர் சிலம்பொலி செல்லப்பன், பேராசிரியர் இந்திரா பார்த்தசாரதி, பேராசிரியர் சுதந்திரமுத்து, பேராசிரியர் பெரியார்தாசன் ஆகியோர் தலைமையேற்றுச் சிறப்பித்தனர்.

12 திங்கள் நடத்தப்பட்ட இக்கருத்தரங்குகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலும், மாநிலக் கல்லூரி, வள்ளியம்மாள் மகளிர் கல்லூரி, சென்னைப் பல்கலைக்கழகம், புதுக்கல்லூரி, இராணிமேரிக் கல்லூரி ஆகியவற்றின் தமிழ்த்துறைகள் சார்பிலும், பச்சையப்பன் கல்லூரி தத்துவத்துறை, அண்ணா பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவை ஆகியவற்றின் சார்பிலும் அந்தந்தக் கல்லூரி வளாகத்தில் நடைபெற்றன. தமிழ் கலை இலக்கியப் பேரவை சார்பில் டேமியன் அரங்கிலும், பொது இடமாக மயிலாப்பூர் சீனிவாச சாஸ்திரி அரங்கிலும் கருத்தரங்குகள் நடைபெற்றன.

இத்திங்கள் கருத்தரங்குகளில் பங்கேற்றுச் சிறப்பித்த கவிஞர்கள் அனைவருக்கும், தலைமையேற்று நிகழ்ச்சிகளைச் சிறப்பித்த அறிஞர்கள் அனைவருக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இக்கருத்தரங்கிற்குப் பொறுப்பேற்று நடத்த எனக்கு வாய்ப்பளித்த இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பல கவிஞர்களின் அனுபவத் தொகுப்பாக வெளிவரும் இந்நூல் கவிதை ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் பெரிதும் பயன்படும் என்று கருதுகிறேன்.

நன்றி.

**மு. வளர்மதி**

# பொருளடக்கம்

# அப்துல் ரகுமான்

கவிதை இரத்தத்தின் வழியாக என்னிடம் வந்தது. என் தாத்தா பாரசீகத்திலும் உருதுவிலும் கவிதை எழுதுவார். என் தந்தை 'மஹதி' (சையத் அஹ்மத்) உருதுக் கவிஞர். தமிழிலும் சிறந்த எழுத்தாளர்.

நபிகள் நாயகம் பிறந்த நாளில் அவர்களைப் பற்றிய அராபியப் புகழ்ச்சிப் பாடல்களை முஸ்லிம்களின் வீடுகளில் பாடுவார்கள். சிறு வயதிலிருந்தே எங்கள் வீட்டில் இந்தப் பாடல்கள் பாடும்போது நானும் சேர்ந்து பாடுவேன். அப்போது எனக்கு அரபி எழுத்துக்களைப் படிக்க மட்டும்தான் தெரியும். அர்த்தம் தெரியாது. அந்தப் பாடல்களில் இருந்த சந்த அழகு என்னை மிகவும் கவர்ந்தது.

கவிதைத் தேவியை நான் தரிசிப்பதற்கு முன் அவள் கொலுசுச் சத்தமும், வளையோசையும் தான் என்னை அவள் பால் ஈர்த்தது.

நான் வைகையின் வளர்ப்பு மகன். எங்கள் வீடு வைகைக் கரையில் இருந்தது. நான் வீட்டிலிருந்த நேரத்தை விட வைகையின் மடியில் இருந்த நேரமே அதிகம். அவள் மடியில்தான் நான் வளர்ந்தேன்.

வைகையில் எப்போதாவதுதான் தண்ணீர் வரும். ஆனால் அவள் மார்பகத்திலிருந்து எனக்காகக் கவிதைப் பால் வற்றாமல் சுரந்து கொண்டே இருந்தது. அதன் கரையோரத் தோட்டங்களில் கண்ணுக்குத் தெரியாமல் மலர்ந்த கவிதைப் பூவின் வாசனையால் வசீகரிக்கப்பட்டு ஒரு வண்டைப் போல் அலைந்திருக்கிறேன்.

பௌர்ணமி இரவுகளில் நிலாக் கிண்ணம் ஊற்றும் கள்ளைப் பருகியபடி அதன் மணல் மெத்தையில் ஒரு கவிதா போதையோடு நேரம் போவதே தெரியாமல் படுத்துக் கிடந்திருக்கிறேன்.

இருண்ட இரவுகளில், நீரோடும் காலத்தில், கரையோர இருட்டில் நின்றபடி வைகை முணுமுணுத்துக் கொண்டு செல்லும் ரகசியப் பாடலை மணிக்கணக்காகக் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறேன்.

இன்றைக்கும் வைகை என் எழுதுகோலின் வழியாக ஓடிக் கொண்டிருக்கிறது. சில நேரங்களில் நதியாக, சில நேரங்களில் உவமையாக, உருவகமாக, படிமமாக, குறியீடாக.

எங்கள் தெருவை ஒட்டி, வைகைக் கரையோரமாக ஒரு சேரி, அங்கே குறவன் - குறத்தி நடனமாடும் குழு ஒன்று இருந்தது, கோவில் விழாக்களிலும் பண்டிகைக் காலங்களிலும் அவர்களுடைய நடன நிகழ்ச்சி நடக்கும். அதைத் தவறாமல் போய்ப் பார்ப்பேன். என்னைக் கவர்ந்தது அவர்களுடைய நடனமல்ல. அவர்கள் பாடிய பாடல்கள். அந்தப் பாடல்கள் சிந்துப் பாடல்கள் என்பதைப் பிற்காலத்தில்தான் அறிந்தேன்.

அந்தச் சிந்துப் பாடல்களின் சந்தங்களில் நடனமாடும் கவிதைத் தேவியின் சலங்கை ஒலியைக் கேட்டேன். நானும் என் சொற்களுக்குச் சலங்கை கட்டி விட்டேன். அந்தச் சந்த சங்கீதத்தில், உல்லாசத் தாள லயத்தில் என் மனம் நடனமாடத் தொடங்கி விட்டது.

மதுரையில் இப்போது 'தினமணி' அலுவலகம் இருக்கும். இடம் அந்தக் காலத்தில் 'ஃபோக்ஸ் பங்களா' என்று அழைக்கப்பட்டது. அப்போது அது காடாய் அடர்ந்து கிடந்த பெரிய தோட்டமாக இருந்தது. அதற்குள் ஃபோக்ஸ் என்ற வெள்ளைத் துரையும், அவருடைய மனைவியும் அடங்கியிருந்த கல்லறை இருந்தது. அப்போதெல்லாம் அங்கே மக்கள் நடமாட்டம் இருக்காது.

அந்தத் தோட்டத்தின் ஏகாந்தம், இலைகளின் ரகசியப் பேச்சு, பறவைகளின் பாடல், கரும்பட்டுக் கம்பளம் போல் விரிந்த நிழல் - இவையெல்லாம் எனக்கு மிகவும் பிடிக்கும். நேரம் கிடைக்கும் போதெல்லாம் அங்கே போய்விடுவேன்.

ஃபோக்ஸ் தம்பதிகளின் கல்லறை சலவைக் கல்லால் அழகாகக் கட்டப்பட்டிருந்தது. அதற்குள் ஒரு சிறிய அறையில் அந்தத் தம்பதிகளின் உடல்கள் இரு சலவைக் கல் தொட்டில்களில் வைக்கப்பட்டிருக்கின்றன என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

அந்த வெள்ளைத் துரையின் ரசனை எனக்குப் பிடித்திருந்தது. மரணத்தைக் கூட எவ்வளவு அழகாக்கி விட்டார்! அங்கே அடிக்கடி போய் அமர்ந்து கொண்டிருந்ததால் அந்தச் சிறு வயதிலேயே மரண பயம் எனக்குப் போய்விட்டது. மரணத்தை நேசிக்கத் தொடங்கிவிட்டேன். பின்னால் மரணத்தை 'மர்மக் காதலி' என்றே எழுதியிருக்கிறேன்.

தொட்டிலில் சவங்கள் என்ற வியப்பான முரணைப் பற்றிச் சிந்தித்துச் சிந்தித்து முரண்களின் அழகையும் ரசிக்கத் தொடங்கிவிட்டேன். முரண்களின் மேல் எனக்கு ஒரு மோகம் ஏற்பட இங்கேதான் விதை விழுந்தது.

பிற்காலத்தில் தத்துவக் கல்வியும், சிந்தனையும் முரண்களுக்குள் மறைந்திருக்கும் பிரபஞ்ச ரகசியத்தைத் தரிசிக்க உதவின. வாழ்க்கையே ஒரு முரண்தொடைக் கவிதையாக இருப்பதை உணர்ந்தேன். என்னுடைய பல கவிதைகள் இந்த முரண்களின் மோகக் கலவியில் பிறந்தன.

நான் நகரத்தில் பிறந்து வளர்ந்தவன் என்றாலும் ஆரவார நகர நாகரிகமும் ஒப்பனையும் எனக்குப் பிடிப்பதில்லை. கட்டிடங்கள் கொப்புளங்களாகவே தெரிந்தன. இயற்கையின் அழகே என்னை மிகவும் ஈர்த்தது.

இயற்கையைத் தாயாகப் பார்த்தேன். ஒவ்வொரு பூவிலும் அவளது கடிதம் இருந்தது. பூமி எங்கும் நடக்கும் அவளுடைய அழகான ஆட்சியை வியந்தேன். இந்த வியப்பே என் முதல் கவிதையை உருவாக்கியது. என் பதின்மூன்றாம் வயதில், எட்டாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தபோது என் முதல் கவிதையை எழுதினேன்.

அப்போது எனக்கு யாப்பிலக்கணம் தெரியாது. மூச்சின் லயம் போல், இதயத் துடிப்பைப் போல் சந்த லயங்கள் என்னோடு ஒன்றிப் போயிருந்தன. அந்தச் சந்தப் பயிற்சியை வைத்தே கவிதைகள் எழுதிக் கொண்டிருந்தேன். என் தொடக்கக் காலக் கவிதைகள் சந்த நயமுடைய சிந்துக்களாகவே மலர்ந்தன்.

உருது என் தாய் மொழி என்றாலும் தமிழ் மீது அளவிட முடியாத காதல் எனக்கிருந்தது. தியாகராசர் க்ல்லூரியில் இடைநிலை வகுப்பில் தமிழ் சிறப்புப் பாடமாக இருக்கிறது என்பதை அறிந்தபோது மிகுந்த மகிழ்ச்சியோடு அதில் சேர்ந்தேன்.

அங்கே யாப்பிலக்கணம் பாடமாக இருந்தது. ஒரு வெறியோடு அதைக் கற்றேன். ஈற்றடி கொடுத்தால் விரைந்து வெண்பா பாடுமளவுக்குப் பயிற்சி பெற்றுக் கொண்டேன்.

அந்தக் காலத்தில் கம்பனே என் ஆதர்சமாக இருந்தான். துரோணரின் சிலையை வைத்து ஏகலைவன் வில் வித்தையைப் பயின்றது போல் கம்பனை மனத்தில் நிறுத்திச் சொல் வித்தையைப் பயின்றேன். யாப்பருங்கலக் காரிகையிடமிருந்து வெறும் புற வடிவம் பற்றி மட்டுமே தெரிந்து கொள்ள முடிந்தது. யாப்புக் கலையின் ரகசியங்களையும், தொழில் நுட்பங்களையும் கம்பனிடமிருந்துதான் நான் கற்றுக் கொண்டேன். அவன் துரோணரைப் போல் என் கட்டை விரலைக் காணிக்கையாகக் கேட்கவில்லை. மாறாக எழுதுகோலை எனக்கு ஆறாவது விரலாக்கித் தந்தான்.

என் தந்தையின் வாயிலாக உருது, பாரசீகக் கவிதைகள் எனக்கு அறிமுகமாயின. அந்தக் கவிதைகளின் புனைவியமும், மென்மையும், அழகுணர்ச்சியும் என்னை மிகவும் கவர்ந்தன. குறிப்பாகச் சமயவுணர்வும், சமூகப் பார்வையும், புரட்சி எண்ணங்களும் கொண்ட கவிஞர் இக்பாலின் கவிதைகள் என்னைப் பாதித்தன.

எங்கள் தெருவில் அவ்வப்போது 'ஃகவ்வாலி' என்ற உருது இசை நிகழ்ச்சிகள் நடக்கும். இந்த நிகழ்ச்சி ஒரு வகையில் லாவணி போன்றது. இதில் சூஃபித் தத்துவப் பார்வையில் ஆன்மிகக் கருத்துகள் அழகான கவிதை வடிவம் பெற்றிருக்கும். இயல்பிலேயே ஆன்மிக நாட்டம் கொண்டிருந்த என்னை இந்த இசை நிகழ்ச்சிகள் நெருப்பில் வார்த்த நெய் போல் உதவின. ஆன்மிகச் சிந்தனைகளை அழகான கவிதை ஆக்குவது எப்படி என்பதை இவை எனக்குக் கற்றுக் கொடுத்தன.

கல்லூரியில் படிக்கும் காலத்தில் சூஃபிக் கவிஞர்களிலேயே தலைசிறந்தவராகக் கருதப்படும் பாரசீகக் கவிஞர் 'ஜலாலுத்தீன் ரூமி'யின் அற்புதமான காவியமான 'மஸ்னவி'யைப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. இதே கால கட்டத்தில் உமர்கய்யாமின் கவிதைகளையும் படித்தேன். இந்த உருது, பாரசிகக் கவிதைகளின் பாதிப்பில் தமிழ் மரபு சார்ந்திருந்த என் கவிதைகளில் மாற்றம் ஏற்படத் தொடங்கியது. என் கவிதையில் ஏற்பட்ட மிக முக்கியமான திருப்பம் இது.

பாரசிக, உருதுக் கவிதைகளின் தாக்கத்தால் 'கஜல்', 'நஜ்ம்' என்ற அம்மொழிகளின் இரு கவிதை வடிவங்களைத் தமிழுக்குத் தர எண்ணினேன். கஜல் அரபியிலிருந்து பாரசிக, உருது மொழிகளுக்கு வந்த பழைய கவிதை வடிவமாயிருந்த போதிலும், அதில் அமையும் கண்ணிகள் ஒவ்வொன்றும் சுதந்திரமானவை. புதுக் கவிதைக்கே உரிய பல பண்புகள் 'கஜ'லிடம் இருப்பதைப் பார்த்து வியந்த நான் இந்த வடிவத்திலும், இசைப் பாடலான 'நஜ்ம்' வடிவத்திலும் சில கவிதைகள் எழுதியிருக்கிறேன். 'நேயர் விருப்பம்' என்ற என் கவிதைத் தொகுதியில் சிலவற்றைத் தந்திருக்கிறேன்.

கல்லூரிக் காலத்தில்தான் கம்பதாசன் கவிதைகள் எனக்கு அறிமுகமாயின. மரபு சார்ந்த தமிழ்க் கவிதைகளிலிருந்து கம்பதாசனுடைய கவிதைகள் வித்தியாசமாக இருப்பது என்னைக் கவர்ந்தது. உருதுக் கவிதையின் புனைவியல் அழகும், மென்மையும் அவற்றில் இருந்தன. கம்பதாசனுடைய அலை வரிசையில் என் மனமும் அமைந்திருப்பதை அறிந்தேன். நான் உருவாகிய காலத்தில் அவருடைய தாக்கம் என்னிடம் ஏற்பட்டது.

அடுத்து என் கவிதைப் போக்கில் முக்கியமான திருப்பத்தை ஏற்படுத்தியவர் சுரதா. அவருடைய வித்தியாசமான உவமைகளும், எதையும் புதுமையாகச் சொல்லும் முறையும், தமிழுக்குப் புதிய அபூர்வச் சொற் சேர்க்கையும் என்னை மிகவும் கவர்ந்தன. அவருடைய தாக்கத்தால் எதையும் வித்தியாசமாகப் புதுமையாகச் சொல்ல வேண்டும் என்ற முடிவு எனக்குள் ஏற்பட்டது.

புதுக்கவிதைக்காகப் பிரச்சாரம் செய்த 'எழுத்து' இதழ் வெளிவருவதற்கு முன்பே, 1958-இல் நான் இளங்கலை படித்துக் கொண்டிருந்தபோது, மேனாட்டுப் புதுக்கவிதையில் பெருந்தாக்கத்தை ஏற்படுத்திய மீ மெய்ம்மையியல் (Surrealism) பற்றி ஓர் ஆங்கிலப் பேராசிரியர் வாயிலாக அறிய நேர்ந்தது.

மனிதனின் பேச்சு, நடை, உடை, பாவனை எல்லாம் சமூகக் கட்டுப்பாடுகளால் உருவாக்கப்படுபவை. அதனால் போலியானவை. மனிதனின் உண்மையான ஆசைகள், எண்ணங்கள் எல்லாம் சமூகக் கட்டுப்பாட்டுக்கு அஞ்சி ஆழ் மனத்தில் சென்று ஒளிந்துகொள்ளும். அங்கே அவை படிமங்களாகவே உலவிக் கொண்டிருக்கும். இந்தப் படிமங்களை வெளியே கொண்டு வந்தால் அதுதான் அசல் உண்மை என்பதை அறிந்தபோது நான் பிரமிப்பு அடைந்தேன்.

இந்த ஆழ் மனப் படிமங்களை வெளிக் கொணர்வதற்குத் தானியங்கி எழுத்து (Automatic writing) ஒரு வழி என்பதையும் அந்த ஆங்கிலப் பேராசிரியர் வாயிலாக அறிந்து கொண்டேன். நாம் சிந்திப்பதை எழுதாமல் மனம் போகும் போக்கின்படி எழுதுவதுதான் தானியங்கி எழுத்து. அதாவது மனத்தைச் சுதந்திரமாக இயங்கும்படி அவிழ்த்து விட்டுவிட்டு அதன் கையில் எழுதுகோலைக் கொடுத்து விடுவது. மிகுந்த ஆர்வத்தோடு இந்தப் பரிசோதனையில் ஈடுபட்டேன்.

வாய்க்கு வந்ததை (அல்லது கைக்கு வந்ததை) எண் சீர் விருத்தத்தில் வேகமாக எழுதிக்கொண்டு போவேன். நான்கைந்து விருத்தங்கள் வரை உளறலாகவே இருக்கும். பிறகு கருத்துக்களில் ஒரு வியப்பான தொடர்பும் இசைவும் ஏற்படத் தொடங்கி விடும். அத்தனையும் அற்புதமான படிமங்கள்! நான் சிந்தித்திருக்கவே முடியாத கருத்துக்கள்!

பிற்காலத்தில் மீமெய்ம்மையியல் பற்றி மிகுதியாகக் கற்றறிந்தேன். தியான நிலையில் அமர்ந்து ஆழ்மனப் படிமங்களை உதிக்கச் செய்தல், வினோதச் சொற் சேர்க்கை போன்ற பல வழிகளில் பரிசோதனைகளைச் செய்தேன். எடுத்துக்காட்டாக ஓர் அனுபவத்தைச் சொல்லலாம்.

மரணத்திற்குப் பிறகு மனிதனின் நிலை என்ன? என்ற வினா ஒரு நாள் தோன்றியபோது அந்த வினாவில் மட்டும் மனத்தை ஒருமுகப்படுத்தி, இந்த வினாவுக்கு ஏற்கனவே சமயங்கள் கூறிய எந்த விடையும் மனத்தில் தோன்றவிடாமல் தடுத்துத் தியான நிலையில் அமர்ந்தேன்.

முதலில் கண்ணீர்த் துளி சொரியும் இமை தோன்றியது. சிறிது நேரம் கழித்து ஓசை இல்லாமல் அசையும் மணி தோன்றியது. அதை அசைத்த கயிறு அறுந்து விழுந்தது. மணியிலிருந்து நட்சத்திரங்கள் உதிர்ந்தன. அடுத்து மிகப் பெரிய பாதம் தோன்றியது.

நான் தியானத்தைக் கலைத்துவிட்டுப் படிமங்களுக்குப் பொருள் காண முயன்றேன். கண்ணீர்த் துளி சொரியும் இமை, மரண சோகத்திற்கு மனத்தின் அகராதியில் இருக்கும் படிமச் சொல் என்பதை எளிதாகப் புரிந்து கொள்ள முடிந்தது. அடுத்த படிமம் கொஞ்சம் சிரமப்படுத்தியது. சிறிது சிந்தித்த பிறகு மரணத்திற்குப் பிறகு மனிதனின் ஆரவார சப்த வாழ்க்கை முடிந்து ஒளி வாழ்க்கை தொடங்குகிறது என்பதுதான், அந்த படிமத்தின் பொருள் என்பது தெரிந்தது. மூன்றாவது படிமம் மிகுந்த சிரமத்திற்குள்ளாக்கியது. சிந்தித்த பிறகு, மரணத்திற்குப் பின் உயிர் ஒரு பெரிய பயணத்தை மேற்கொள்கிறது என்று புரிந்து கொண்டேன்.

இவ்வாறு ஆழ்மனப் படிமங்களை வைத்து எழுதுவதில் கவிஞன் வெறும் கருவியாக மட்டுமே செயல்படுகிறான். அவன் கவிதைக்கு அவனே வாசகனாகி விடுகிறான். இந்த முறை வாழ்க்கையைப் பற்றி, பிரபஞ்ச ரகசியங்கள் பற்றிக் கவிஞனே அறியா புதிய தரிசனங்களைக் காண உதவுகிறது.

இத்தகைய ஆழ்மனப் படிமங்களுக்குப் பன்முகப் பொருளாற்றல் உண்டு. என் அனுபவத்தில் இதை அறிய நேர்ந்தது. இந்தக் கவிதையை ('எனக்கு அந்திகள் இல்லை' 'பால்வீதி') எழுதிய பிறகு இந்த அனுபவம் பற்றி நண்பர் ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தேன். பாதப் படிமம் பற்றி அவரிடம் சொல்லி அதற்கு நான் கண்ட பொருளைக் கூறுவதற்கு முன், 'இறந்தால் இறைவனடி சேர்ந்தார்' என்று சொல்லுகிறார்கள் அல்லவா? அதைத்தான் இந்தப் படிமம் குறிப்பிடுகிறது" என்றார். அதைக் கேட்டதும் நான் வியப்புற்றேன். உண்மைதான். அந்தக் கருத்தும் இந்த ஆழ்மனப் படிமம் உண்டாகக் காரணமாக இருந்திருக்கலாம்.

இந்த அனுபவத்திற்குப் பிறகு ஆழ்மனப் படிமங்களை வைத்து எழுதுவதை நான் மிகவும் விரும்பினேன். மீமெய்ம்மையியலில் நான் பல்வேறு வகையான சோதனைகளைச் செய்து பார்த்தேன் 'பால்வீதி'யில்

பெரும்பாலான கவிதைகள் இத்தகைய பரிசோதனைக் கவிதைகளே. அதனாலேயே அவற்றில் இருண்மை அதிகமாகிவிட்டது. 'பால்வீதி'யைத் தமிழின் முதல் மீமெய்ம்மையியல் கவிதைத் தொகுதி எனலாம்.

'எழுத்து' இதழ் வருவதற்கு முன்பே நான் வசன கவிதைகளும் எழுதத் தொடங்கிவிட்டேன். நான் படித்த தாகூரின் கவிதைகளும், கலீல் ஜிப்ரானின் கவிதைகளும் ஏற்படுத்திய தாக்கம் இதற்கு ஒரு காரணம். மற்றொரு காரணமும் உண்டு. எனக்கு அவ்வப்போது உதிக்கும் கவிதைச் சிந்தனைகளை தோன்றியபடியே நான் எழுதி வைத்துவிடுவேன், நேரம் கிடைக்கும்போது அவற்றை யாப்பில் அமைக்க முயல்வேன். இப்படி யாப்பில் அமைப்பது மிகுந்த சிரமத்தை ஏற்படுத்தியது. யாப்பில் அமையும்போது என் சிந்தனைகள் சிதைந்து போவதையும் கண்டேன். இது எனக்கு வேதனை தந்தது. பிறகுதான் ஒருநாள் இந்தச் சிந்தனைகளை ஏன் யாப்பில் அடக்க வேண்டும்? உதித்தபடியே எழுதினால் என்ன? என்ற எண்ணம் தோன்றியது. இந்த முடிவு எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது.

முதுகலை படித்துக் கொண்டிருந்தபோது நான் எழுதிய வசன கவிதைகளைக் (1959-60) கல்லூரி ஆண்டு மலருக்காகக் கொடுத்தேன். தமிழ்ப் பகுதிக்குப் பொறுப்பாளராக இருந்த பேராசிரியர், 'இலக்கணத்தோடு எழுதிக்கொண்டு வா' என்று திருப்பி அனுப்பிவிட்டார். மனம் வருந்திய நான், என்னைத் தேற்றிக் கொண்டு, அந்தக் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, ஆங்கிலப் பகுதிப் பொறுப்பாளரிடம் கொடுத்தேன். அந்தப் பேராசிரியர் அவற்றைப் பாராட்டியதோடு மலரிலும் பிரசுரித்தார். இப்படி என் முதல் வசன கவிதைகள் தமிழில் வெளிவராமல் ஆங்கிலத்தில் வெளிவந்தன.

கல்லூரியில் படிக்கும் காலத்திலிருந்தே வெளியே நடக்கும் கவியரங்கங்களில் நான் கவிதை பாடத் தொடங்கிவிட்டேன். என் கவிதையின் வடிவ அமைப்புக்குக் கவியரங்கங்களின் பங்களிப்புக் கணிசமானது. மக்களுக்கு எதைச் சொன்னால் பிடிக்கிறது? எப்படிச் சொன்னால் பிடிக்கிறது? என்பதைக் கவியரங்கங்கள் மூலமாகவே நான் கற்றுக் கொண்டேன்.

கவியரங்கங்களில் பல புதுமைகளையும் மாற்றங்களையும் நான் செய்திருக்கிறேன். தமிழில் முதன் முதலாக வசனக் கவிதைகளையும், புதுக் கவிதைகளையும் கவியரங்கங்களில் புகுத்தினேன். இவற்றிற்குக் கிடைத்த வரவேற்பைப் பார்த்து, மரபில் எழுதிக் கொண்டிருந்த பலர் வசனக் கவிதை வடிவத்தில் எழுதத் தொடங்கிவிட்டனர்.

வாணியம்பாடிக் கல்லூரியில் ஆசிரியர் பணியில் சேர்ந்த பிறகு மாணவர்களிடம் கவிதை ஆர்வத்தை ஊட்டினேன். உருது 'முஷாயிரா' பாணியில் 'கவிராத்திரி' என்ற புதிய கவியரங்க நிகழ்ச்சிகளை நடத்தினேன். கவியரங்கங்களில் வறட்டுத் தலைப்புகளில் யாப்புக் கட்டுரைகளை வாசிக்கும் வழக்கத்தை இந்தப் புதிய முறையால் மாற்ற முயன்றேன்.

யாரையும் கவிதை எழுதத் தூண்டும் புதுமையான தலைப்புகளில் மாணவர்களை எழுத வைத்தேன். கவிதை என்றால் நீளமாக இருக்கக் கூடாது. சில வரிகளில்தான் இருக்க வேண்டும் என்று வழிகாட்டினேன். இந்த முறைகளால் ஒவ்வோர் ஆண்டும் 'கவிராத்திரி' நிகழ்ச்சியில் 60, 70 மாணவர்கள் கவியரங்கேறினர். இது மற்ற இடங்களுக்கும் பரவியது. இப்போதும் 'சன்' தொலைக்காட்சியில் இதே முறையில் கவிதா நிகழ்வுகளை நடத்தி வருகிறேன். இந்த நிகழ்ச்சிக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது.

என் தொடக்கக் காலக் கவியரங்கக் கவிதைகள் மேடையில் படிப்பதற்கான கலை நுணுக்கங்களோடு எழுதப்பட்டவை. எனவே அவற்றை நூலுருவில் தர நான் விரும்பவில்லை. ஆனால் அவற்றிலிருந்து சில நல்ல சிந்தனைகளை மட்டும் தொகுத்துத் தரலாமே என்று எண்ணித் தொகுத்தபோது ஒரு புதிய வடிவத்தை அடைய முடிந்தது. சில கவிதைகளிலிருந்து இரண்டு மூன்று சொற்களைக் கொண்ட அடிகளை மட்டுமே தேர்ந்தெடுத்துத் தனித் தனிக் கவிதையாக அமைத்தேன். எடுத்துக்காட்டாக, 'திருக்குறள்' என்ற தலைப்பில் 'மும்முலைத் தாய்' என்றும் 'தாஜ்மஹல்' என்ற தலைப்பில் 'வெண்டளையால் இயன்ற வெண்பா' என்றும் அமைத்தேன் ('நேயர் விருப்பம்'). இப்படி இரண்டு மூன்று சொற்களிலேயே ஒரு கவிதை என்பது தமிழில் மட்டுமல்ல உலக இலக்கியத்திலேயே புதிய வடிவம் என்று கருதுகிறேன்.

கவிதைப் பாதையில் நெடும் பயணம் செய்த பிறகு, பல சத்திரங்களில் தங்கிய பிறகு, இப்போது நான் ஊர் வந்து சேர்ந்ததாக நினைக்கிறேன். ஒரு தலைப்புக்காகச் சிந்தித்து எழுதுவதும், நாம் சொல்ல விரும்பும் கருத்துக்களுக்குக் கவிதை வடிவம் கொடுப்பதும் எனக்கு இப்போது செயற்கையாகப்படுகின்றன. கவிதை என்பது ஒரு படைப்பு. அது ஒரு பூவைப் போல் இயற்கையாக மலர வேண்டும். கண்ணீர்த் துளியைப் போல் உணர்ச்சிகளில் தானே சுரக்க வேண்டும்.

கவிதை மனித வாழ்க்கையைப் பற்றி, பிரபஞ்சத்தைப் பற்றிப் புது தரிசனங்களைத் தருவதாக இருக்க வேண்டும். கவித்துவத் தருணங்களில் மின்னலாய் உதிக்கும் வரிகளே இயற்கையான கவிதைகள், அவற்றை வடிவத்திற்காகச் சிதைக்காமல் அப்படியே தர வேண்டும் என்று முடிவு செய்தேன்.

மரபு. யாப்பையும் மறுவுயிர்ப்பையும் தந்து எழுப்ப வேண்டும் என்பது என் எண்ணம். புதுக் கவிதையின் மகரந்தம் இதற்கு உதவும். எதுகை மோனைகளை நாம் சொல்ல விரும்பும் கருத்துக்காகச் செயற்கையாக வலிந்து அமைப்பதால் கவிதை கெட்டுப் போகிறது. பெருங் கவிஞர்களைக் கூட இந்த எதுகை, மோனைகள் இடறிக் கீழே வீழ்த்திவிடுகின்றன.

இந்த விபத்திலிருந்து தப்பிக்க ஒரு வழி உண்டு. எதுகை. மோனைகளில் மீமெய்ம்மைச் சாத்தியக் கூறுகளைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். நம்முடைய வழிக்கு அவற்றை இழுத்து பலவந்தப் படுத்தாமல், இயல்பாக வந்து விழும் எதுகை, மோனைகள் அழைத்துச் செல்லும் பாதையில் செல்ல வேண்டும். அப்போதுதான் நாம் புதிய இடங்களுக்குச் செல்ல முடியும். வாழ்க்கை என்ற மர்மக் கடலில் எதுகை. மோனைகளை வலைகளாக வீச வேண்டும். அப்போதுதான் அந்த வலைகள் அள்ளிவரும் புதுப் புதுப் பொருள்களைக் கண்டு நாம் வியக்க முடியும். அப்போதுதான் கவிஞன் உண்மையான படைப்பாளி ஆவான். இப்போதெல்லாம் இந்தத் திசையில், இந்தப் பாதையில்தான் தான் பயணம் புறப்பட்டிருக்கிறேன்.



# இன்குலாப்

எனது கவிதை முயற்சிகள் குறித்து இதற்கு முன்பு இரண்டு முறை எழுதியிருக்கிறேன். 'சூரியனைச் சுமப்பவர்கள்' என்ற என் மூன்றாவது கவிதைத் தொகுப்புக்கு எழுதிய முன்னுரை ஒன்று. 'வாழ்விலிருந்து இலக்கியம்' என்ற தலைப்பில், 'மன ஓசை' இதழில் மூன்று தொடராக வந்த கட்டுரை மற்றொன்று. இப்படி இரண்டு முறை என்னைப் பற்றிச் சொல்வதற்கான அனுபவம் நேர்ந்தும், இவற்றை நான் முழுமையாகச் செய்திருக்கிறேன் என்று நிறைவடைய முடியவில்லை. இப்பொழுதும் நான் நிறைவாகப் பேசமுடியும் என்று தோன்றவில்லை. என்னைப் பற்றி நான் பேசுவது என்பது கூச்சத்தைத் தருகிறது. இந்த மனத் தடையைக் கடந்துதான் உங்களிடம் பேச வேண்டும்.

எப்பொழுது கவிதை எழுதத் தொடங்கினேன்? குழந்தை மேதைகளுடைய வரிசையில் நான் எந்த இடத்திலும் நிற்கவில்லை. எனினும் என்னுடைய பள்ளி நாட்களிலேயே ஒரு நீண்ட கவிதையை எழுதினேன். அது ஓர் எதிர்ப்புக் கவிதை. எங்கள் ஊர் தர்காவில் பேயோட்டும் நிகழ்ச்சிக்கு எதிராக எழுதப்பட்ட கவிதை. அது மூடத்தனத்துக்கு எதிரான கவிதை. இப்பொழுது அந்தக் கவிதை என் நினைவில் இல்லை. இருந்தாலும் அதை ஒரு கவிதை என்றும் இன்று சாதிக்க மாட்டேன். என்னால் எழுதப்பட்ட முதல் எழுத்து எதிர்ப்புக் குரலாக இருந்தது என்பதை மட்டுமே இங்குப் பதிவு செய்கிறேன்.

இளமையிலேயே எதிர்ப்பாளனாக உருவானதற்கு எங்கள் ஊர்ச் சூழலும், குடும்பச் சூழலும் காரணங்களாக இருந்தன.

இராமநாதபுர மாவட்டம் 'கீழக்கரை' எனது சொந்த ஊர். நெய்தல் நிலம், கடற்கரையை ஒட்டியுள்ள தென்னந் தோப்புகள்... கடல் அலைகள் தென்னந்தோப்புகளின் வேலிவரை வந்து மோதிச் செல்லும். அந்த அளவுக்கு வேலிகளை விரிவுபடுத்தும் சொத்துடைமை மனோபாவம் கொண்டவர்கள் இருந்தார்கள் என்பதற்காக இதைச் சுட்டுகிறேன்.

'கீழக்கரை' என்று சொன்னாலே செல்வத் திருநகர் என்று கருதுகிறார்கள். கீழக்கரையின் செல்வமுகத்தைத் தெரிந்தவர்களுக்கு அதன் மறுமுகம் தெரிவதில்லை. அது உழைத்து ஓடாய்ப் போனவர்களின்

முகம். கீழக்கரையின் கடலில் கப்பலோட்டுபவர்களும் உண்டு. மூழ்கி முத்துக் குளிப்பவர்களும் உண்டு. கப்பலோட்டியவர்களைத்தான் உலகம் கண்டது. முத்துக் குளிக்க மூச்சடக்கியவர்களின் முகங்கள் கடல் ஆழத்திலேயே மூழ்கிப் போயின.

மாட மாளிகையின் கீழக்கரைக்கு நான் முகமா? மீன்பிடிப்போர், சங்கு குளிப்போர், முத்துக் குளிப்போர், மரமேறிகள், வயல் உழவர்கள், சித்தாள்கள், கொத்தனார்கள், துணி துவைப்பவர்கள், முகம் மழிப்பவர்கள், தெருக்கூட்டுபவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள்............

இவர்களில் எந்த முகத்தை நான் வரித்திருக்கிறேன்? எந்த ஊற்றிலிருந்து நான் சுரக்கிறேன்? எந்த திசையிலிருந்து நான் புறப்பட்டு வருகிறேன்?

எனது வரிகளில் வியர்வை நாறுகிறது. எனது முகம் ஒடுக்கப்பட்ட முகம். எனது குரல் பள்ளத்தாக்கிலிருந்து எதிரொலிப்பது.

மனிதனைப் பணத்தால் அடையாளப்படுத்துவது ஊர் மரபு. அடையாளம் இழந்து போனவர்களின் அடையாளம் நான். உடல் உழைப்பாளர்கள் அவமானப்படுத்தப்பட்டவர்கள், நானோ மரபு வழியாக அவமானப்படுத்தப்பட்ட குடும்பத்திலிருந்து வருகிறேன். என் முன்னோர்கள் மருத்துவர்கள். இசுலாமிய சமத்துவம், எங்கள் குடும்பத்துக்குச் சமத்துவத்தை வழங்கவில்லை.

சித்த மருத்துவத்தில் தேர்ந்த என் தந்தையிடம் சித்தர் மரபிலான எதிர்ப்புணர்வு இருந்திருக்கிறது. இதைச் காலஞ்சென்ற பேராசிரியர் ந. சஞ்சீவி அவர்களே என்னிடம் சொன்னார். எனது எதிர்ப்புணர்வு என்பது என் குடும்பஞ் சார்ந்த சித்தர் மரபு சார்ந்தது என்று குறிப்பிட்டார். என்னை, எனக்கு அவர்தான் உணர்த்தினார்.

என் குடும்பச் சூழ்நிலை என் படைப்புக்கான ஒரு பயிற்சி முகமாக இருந்தது. தந்தை மூடநம்பிக்கை எதிர்ப்பாளர்; ஆனால் ஆழ்ந்த இறை உணர்வு மிக்கவர். எங்களைச் சமூக ஒடுக்குமுறைகளை எதிர்ப்பவர்களாகவே வளர்த்தார். என் தாயாரோ கொடுமை கண்டு பொங்குபவர். என் அண்ணன் தந்தை மரபில் மூடநம்பிக்கை எதிர்ப்பும் ஆதிக்க எதிர்ப்பும் கொண்டவர். என் மூத்த அக்காள் இனிமையான குரல்வளம் கொண்டவர். முத்துப்பேட்டையில் அடக்கமான சூஃபி ஞானி சேகுதாவூது மீது எங்கள் முன்னோர்களில் ஒருவர் இசைப்பாமாலை பாடியுள்ளார். அதை என் அக்காள் மிக இனிமையாகப் பாடுவார்.

"சங்கு வெள்ளைத் தாமரைக்குத் தாய்தந்தை நீர். ரவி:
பொங்கும் வெள்ளைச் சோதிதரும் புண்ணியநீர் தாய். தந்தையே!"

"நீறாத செந்தூரம் நீற்றும்நெடும் பண்டிதரே!
தீராத ரோகமெல்லாம் தீர்த்ததுங்கள் நாமமதே!"

என்று கவித்துவ அடர்த்தியோடு வரும் அதன் அழகிய வரிகள் என் தமக்கையின் குரலில் இசை இனிமைப் பெற்று எங்கள் இல்லத்தை நிறைக்கும். என் அண்ணன் எழுதும் திரைப்பட மெட்டுக்களிலான சீர்திருத்தப் பாடலையும் அக்காள் பாடுவார். ஒருநாள் முன்னிரவில் இவர்கள் அனைவரும் கூடியிருந்தபோது, என் முதல் கவிதையை, என் வீட்டில் நான் படித்தேன்.

பள்ளி நாட்களில் கவிதைகளை விட எனக்கு நாடகங்களில் மிகுதியான ஈடுபாடு இருந்தது. ஐந்தாவது வகுப்பில் நாடகம் ஒன்று எழுதினேன். அரங்கேற்றம் செய்யப்பட்டது. ஒன்பது. பத்து வகுப்புகளிலும் நாடகங்கள் எழுதினேன். பத்தாம் வகுப்பில் எழுதிய நாடகத்தை நடிக்கக் கூடாது என்று தடை விதித்து விட்டார்கள் ஆசிரியர்கள்.

புகுமுகவகுப்பு. கவிதை உலகை எட்டிப் பார்க்கும் ஒரு தருணத்தை வழங்கியது. சிவகங்கை மன்னர் துரைசிங்கம் கல்லூரியில் அவ்வகுப்பில் சேர்ந்தேன். கவிஞர் மீரா அவர்களும் அப்பொழுதுதான் அக்கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகச் சேர்ந்தார். அவருக்கும் எனக்கும் நெருங்கிய நட்பை ஆங்கிலக் கவிதை ஒன்று ஏற்படுத்தியது. அந்த ஆண்டு புகுமுகவகுப்புக்கு ஆங்கிலத்தில் பைரன் எழுதிய 'Isles of Greece' என்ற பாடலையும் பாடமாக வைத்திருந்தார்கள். இதை ஆங்கிலப் பேராசிரியர் பிரேம்சந்த் என்பவர் நடத்தினார். சிவகங்கை கிராமப்புறம் சார்ந்த ஒரு நகரம். அந்தக் கல்லூரியில் தமிழ் வழியில் படித்த மாணவர்கள்தாம் மிகுதியாகச் சேர்ந்திருந்தார்கள். எங்களுக்கு ஆங்கிலத்தில் சொல்லப்படும் பாடமும் பாடலும் அந்நியமாகத் தான் இருந்தன. ஆயினும் பேராசிரியர் பிரேம்சந்த் அந்த வீறார்ந்த கவிதையின் உணர்வுகளை நாங்கள் உள்வாங்கிக் கொள்ள வேண்டும் என்று விரும்பினார். அதனால் கவிஞர் மீரா அவர்களிடம் அந்த ஆங்கிலக் கவிதையைத் தமிழில் நடத்தி அதன் உணர்வைப் புரிய வைக்கும்படி வேண்டினார். மீராவும் அதை மிகச்சிறப்பாக நடத்தினார். சிவகங்கை கிராமப்புறம் சார்ந்த ஒரு நகரம். அந்தக் கல்லூரியில் தமிழ் வழியில் படித்த மாணவர்கள்தாம் மிகுதியாகச் சேர்ந்திருந்தார்கள். எங்களுக்கு ஆங்கிலத்தில் சொல்லப்படும் பாடமும் பாடலும் அந்நியமாகத் தான் இருந்தன. ஆயினும் பேராசிரியர் பிரேம்சந்த் அந்த வீறார்ந்த கவிதையின்

உணர்வுகளை நாங்கள் உள்வாங்கிக் கொள்ள வேண்டும் என்று விரும்பினார். அதனால் கவிஞர் மீரா அவர்களிடம் அந்த ஆங்கிலக் கவிதையைத் தமிழில் நடத்தி அதன் உணர்வைப் புரிய வைக்கும்படி வேண்டினார். மீராவும் அதை மிகச் சிறப்பாக நடத்தினார். இதற்கு நிகராகத் தமிழின் தொன்மை இலக்கியங்களில் உள்ள செய்திகளை கவிதைகளாக எழுதிப்பாருங்கள் என்று கேட்கவும் செய்தார். மறுநாள் புறநானூற்றுப் பின்னணியில் எண்சீர் விருத்தத்தில் செய்யுள் ஒன்று எழுதி அவரிடம் காண்பித்தேன். இப்படி ஆசிரியர் மாணவர் உறவாகத் தொடங்கியது. அண்ணன் தம்பி உறவாக நெருக்கமடைந்தது. இன்றும் எனக்குக் கவிஞர் மீரா 'அண்ணன்'தான். சிவகங்கை நாட்களில் மறக்க முடியாதது இந்த நிகழ்ச்சி. நல்ல கவிதை ஒன்றை மொழியின் தடைகடந்து மாணவர்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்று அந்த ஆங்கிலப் பேராசிரியர் முயன்றது. அதை ஏற்றுக் கவிஞர் மீரா அவர்கள் நடத்தியது..... நாங்கள் அந்தக் கவிதையில் ஈடுபட்டது. கல்வியின் சரியான செயல்பாடாக அந்நிகழ்ச்சியை நான் கருதுகிறேன்.

புகுமுகவகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோதே என் தந்தையார் திடீரென்று காலமாகிவிட்டார். தந்தை இருந்த மட்டுக்கும் வறுமையின் தாக்குதலை அறியாதிருந்தோம். செல்வச் செழுமையில் இருந்தோம் என்பதல்ல இதன் பொருள். தந்தையின் திடீர் இறப்புக்குப் பிறகு வறுமையின் நிறம் எனக்குப் புலப்படத் தொடங்கியது. அந்த ஆண்டு கல்லூரிப் படிப்பை நிறுத்திவிட்டு. சென்னையில் ஒரு கடையில் சிப்பந்தியாக வேலைப் பார்த்தேன். ஓராண்டுக்குப் பிறகு மீண்டும் கல்லூரிப் படிப்பைத் தொடர என் அண்ணன் ஏற்பாடு செய்தார். மதுரை தியாகராசர் கல்லூரி. தமிழ் இலக்கிய வகுப்பில் சேர்ந்தேன்.

நான் கூவக் கற்றுக் கொண்ட நாட்கள் அவை. அ.கி. பரந்தாமனார், ஔவை துரைசாமி, சி. இலக்குவனார், சங்கர நாராயணன், தமிழண்ணல், சுப. அண்ணாமலை, சிற்சபேசன், ஔவை. து. நடராசன் என்று மிகச் சிறந்த பேராசிரியர் பெருமக்கள் எங்களுக்கு ஆசிரியர்களாக அமைந்தார்கள். இலக்கிய ஆர்வமிக்க மாணவர்கள் வகுப்புத் தோழர்களாக இருந்தார்கள். முன்னாள் அமைச்சர் காளிமுத்து என் வகுப்புத் தோழர். நா. காமராசன் எனக்கு இரண்டாண்டுக்கு முந்திய மாணவர். சூரியதீபன் ஓராண்டுக்கு முந்தியவர். கவிஞர் மேத்தா ஓராண்டுக்குப் பிந்திச் சேர்ந்தார். இ. மறைமலை எங்கள் உடன் பயின்றவர். நாங்கள் பயில்வதற்கு முன்பே ஒரு கவிதைச் சூழ்நிலையைக் கவிஞர் அப்துல் ரகுமான், கவிஞர் மீரா, ஔவை நடராசன் போன்றோர் தோற்றுவித்திருந்தனர்.

தியாகராசர் கல்லூரியில் நாங்கள் பயின்றபோதுதான் 1965-ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போராட்டம் வெடித்தது. அந்தப் போராட்டத் தீயை வளர்ப்பதில் கவிஞர் நா. காமராசனும், நானும் கவிதை நெய் சொறிந்தோம். கவியரங்கங்கள், வில்லுப்பாட்டு உள்ளிட்ட இசை நிகழ்ச்சிகள் அனைத்திலும் தமிழ்க்கனலை மூட்டினோம். இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் எங்களது இலக்கியப் பங்களிப்புப் பற்றி மட்டும் குறிப்பிட்டால் போதுமானது. இப்போராட்டத்தின் அரசியல் பகுதி குறித்தும், அதில் எங்களது ஈடுபாடு குறித்தும் மிகுதியாகச் சொல்லவில்லை. அன்று தமிழ்நாடு தனியாகப் பிரியவேண்டும் என்று நாங்கள் சிந்தித்தோம். திராவிட முன்னேற்றக் கழகத்தின் திசை வழியில் அல்லாது ஈழப் போராளிகளின் வழியைத் தேர்ந்தெடுத்திருந்தால் தமிழ்நாட்டின் வரலாறு வேறு வகைப்பட்டதாக இருந்திருக்கும்.

திராவிட முன்னேற்றக் கழகத்தின் தீவிர ஆதரவாளராக இருந்தேன். 1967-இல் ஆட்சி மாற்றம் ஏற்பட்டது. அதன் பிறகு 1968-டிசம்பர் 25-இல் 'வெண்மணிப் படுகொலை' தி.மு.க. மாயையை அம்பலப்படுத்தியது.

தி.மு.க. ஆதரவாளனாய் நீடித்தபோதும் தி.மு.க. சொல்லிவந்த சமத்துவக் கொள்கையில் நாங்கள் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தோம். 'திராவிடநாடு' விடுதலை பெற்றவுடன் கறுப்பு சிவப்புக் கொடியில் கறுப்புபோய் விடும். சிவப்பு மட்டுமே மிஞ்சும் என்று அண்ணா கூறிவந்ததில் நாங்கள் பொதுமை உணர்வு பெற்றிருந்தோம். கல்லூரி மலரில் நான் எழுதிய 'வெயில்' என்ற கவிதையில் என் பொதுமை ஈடுபாட்டை இவ்வாறு விளக்கி இருந்தேன்.

"சுரண்டிக் கொழுப்பவர்கள் - உன்
சூட்டில் பொசுங்கவில்லை
சுரண்டப்படுபவர்தாம் - உன்
சூட்டில் பொசுங்குகிறார்

ஆகையினால் வெயிலே - ஏழை
ஆவிபிரிந்த உடல்
வேகையில் மட்டும் சுடு - அவரை
வீணில் பொசுக்காதே!

வெண்மணித் தீ, தி.மு.க. ஆட்சியில் மூண்டது. தாழ்த்தப்-பட்டவர்களின் சாம்பலைக் குவித்தது. தாழ்த்தப்பட்டவர்களின் கதறலால் தி.மு.க. தலைமை துணுக்குறவில்லை. அந்த அரசின் காவல்துறை இதை ஏனோ தானோ என்று அணுகியது.

ஒடுக்கப்பட்ட குடும்பத்திலிருந்து வந்த நான், இளமை தொட்டே ஒடுக்கப்பட்டோருடன் அடையாளப்படுத்திக் கொண்ட நான், இந்நிகழ்ச்சியால் தி.மு.க.வின் மாயவலையிலிருந்து விடுபட்டேன்.

அப்பொழுது சென்னையில் 'மக்கள் எழுத்தாளர் சங்கம்' செயல்பட்டுக் கொண்டிருந்தது. தோழர்கள் தி.க.சிவசங்கரன், டிசெல்வராஜ், கார்க்கி சண்முகம், செந்தில்நாதன் ஆகியோர் முனைப்புடன் இதை நடத்தி வந்தார்கள். இடதுசாரித் திசைவழிபாடல் இளங்கலை இலக்கியவாதிகளை நடத்திச் செல்லும் இயக்கமாக 'மக்கள் எழுத்தாளர் சங்கம்' இருந்தது. கவிஞர் நா. காமராசன் மக்கள் எழுத்தாளர் சங்க கூட்டத்திற்கு என்னை அழைத்துச் சென்று அந்தத் தோழர்களை எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். மக்கள் எழுத்தாளர் சங்கம் என்னைப் பாதித்தது. இடதுசாரி இலக்கியங்களை எனக்கு அறிமுகப்படுத்தியது.

தி.க.சிவசங்கரன் அவர்களைப் பற்றி தனியாகக் குறிப்பிட வேண்டும். அனைத்து வகையான முற்போக்கு இலக்கியங்களும் அவரால் பாராட்டப்பட்டன. 'தாமரை' இதழின் ஆசிரியராகவும் இருந்ததால், பல இளம் எழுத்தாளர்களை அவர் ஊக்குவித்தார். 'தாமரை' இதழ் எங்களது எழுத்துக் களமாக இருந்தது.

'வெயில்' என்ற என் கல்லூரி நாடகக் கவிதையை என் துறைப் பேராசிரியர் புலவர் உசேன் அவர்கள், 'இந்தியத்தூதன்' என்ற இதழுக்காக வாங்கி அதை வெளியிடச் செய்தார். இப்படித்தான் எனது கவிதை முதலில் வெளியிடப்பட்டுள்ளது.

என்னை 'இன்குலாப்' என்ற பெயரில் அறிமுகப்படுத்தியவர் 'கார்க்கி' மாத இதழின் ஆசிரியர் இளவேனில்தான். 'விடியல் கீதங்கள் பாடுகிறோம்' என்று நான் எழுதிய கவிதையை என் சொந்தப் பெயரில் அல்லாது 'இன்குலாப்' என்ற பெயரில் அவர்தான் வெளியிட்டார். இன்குலாப் என்பது என் இரண்டாவது மகனின் பெயர். அதற்கு முன்பு தாமரையில் நான் எழுதிய கவிதைகள் ஒன்றிரண்டு 'சாகுல் அமீது' என்கிற பெயரில்தான் வெளிவந்தன.

'இன்குலாப்' என்கிற பெயரைப் பகத்சிங்கின் நினைவாக என் மகனுக்குச் சூட்டினேன். பகத்சிங் குறித்துப் படித்துக் கொண்டிருந்த காலத்தில் அவன் பிறந்தான். அதனால் பகத்சிங்கின் உயிர் முழக்கமாகிய 'இன்குலாப்' என்கிற பெயரை என் மகனுக்குச் சூட்டினேன். இன்குலாப் என்கிற பெயரில் எழுதுவதில் எனக்கு உடன்பாடில்லை. ஏனெனில் அந்தப் பெயருக்குரிய பொருளில் நான் முழுமையாக வாழவில்லை என்பதை என் நெஞ்சு அறியும்.

இந்தச் சூழலில்தான் 'இன்குலாப் கவிதைகள்' என்ற பெயரில் என் முதல் கவிதைத் தொகுப்பு வந்தது. இதற்குத் தோழர் இளவேனில் எழுதிய முன்னுரை தமிழ் இலக்கிய வரலாற்றில் தனித்துக் குறிப்பிடப்படும் தகுதியைப் பெற்றது. இத்தொகுப்பில் பல பாடல்களில் அழகியல் கூறுகள் உண்டு. இருப்பினும் போராட்டங்களும் முதன்மையான அழுத்தம் கொடுத்து எழுதியதால் அதன் பிரச்சாரத் தன்மையே பெரிதும் கண்டுணரப்பட்டது. பாராட்டும் வசவும் அதன் பிரச்சாரத் தன்மை குறித்தே எழுந்தன. அதன் அழகியல் தன்மைகளைக் கண்டறியவில்லை. நோக்குவோர்க்கு அதில் அழகுண்டு. இதற்கு மேலும் நான் இது குறித்துச் சொல்ல விரும்பவில்லை. தனது படைப்புக்களுக்காகத் தானே வாதாடுவதும், தனது படைப்பைத் தானே பரிந்துரை செய்வதும் ஒரு படைப்பாளிக்கு நேர்கிற துன்பம் என்பதைப் படைப்பாளிகள் உணர்வார்கள்.

1975-இல் அவசர நிலை அறிவிக்கப்பட்டது. அவசர நிலையை எதிர்த்துச் செயல்பட்டேன். 'இன்குலாப்' என்ற பெயரில் மட்டுமல்லாது வேறுபல புனைபெயரிலும் எழுதினேன். புனைபெயரில் எழுதப்பட்டவை-களை என்னுடையது என்று காவல்துறையில் மோப்பம் பிடித்துச் சொல்ல முடிந்தது. நான் எழுதாதவற்றையும் நானே எழுதியதாகவும் ஐயுற்றார்கள். 'இன்குலாப்' என்ற பெயரில் எழுதிய எதிர்ப்புக் கவிதைகள் 'நயனதாரா'வில் (இளவேனிலின் இரண்டாவது இதழ்) வெளிவந்தது. முதல் எதிர்ப்புக் கவிதை, மீரா அவர்களை ஆசிரியராகக் கொண்ட, சிவகங்கைக் கல்லூரி மலரிலேயே வந்தது. அவசர நிலையில் சிலர் எதிர்ப்புக் கவிதைகளை தங்களுடைய டயரியில் மட்டும் எழுதி வைத்தார்கள்" என்று ஒரு முறை அவரது (மீரா) ஊசியால் குத்தி இருந்தார். என் போன்றோர் எழுதிய எதிர்ப்புக் கவிதைகளை அவர் சரியாகப் பார்க்கவில்லை என்றே கூறவேண்டும். அவசர நிலைக் காலத்தில் என்னை மோப்பம் பிடித்து அலைந்த காவல் துறையின் செயல்பாடுகள் குறித்துத் தனியே எழுதவேண்டும். 1977-இல் அவசர நிலைக்கு எதிராக நான் எழுதிய கவிதைகளும், பிற கவிதைகளும் சேர்ந்த ஒரு தொகுப்பாக 'வெள்ளை இருட்டு' வந்தது.

எனது மூன்றாவது தொகுப்பு 'சூரியனைச் சுமப்பவர்கள்' 1981-ஆம் ஆண்டு வெளிவந்தது. இத்தொகுப்பில் உள்ள கவிதை ஒன்றில் கூலி உழவர்களைப் பற்றி எழுதும்போது இத்தொடரைக் கையாண்டேன். 'சூரியனுக்கு முதுகு காட்டி' என்று முதலில் எழுதினேன். அதையே பிறகு 'சூரியனைச் சுமப்பவர்கள்' என்று மாற்றினேன். இத்தொகுப்பு நிலமானியப் பண்பாட்டு எதிர்ப்பை உள்ளடக்கமாகக் கொண்டிருந்தது. அத்துடன் எள்ளல் கவிதை ஒன்றும் இதில் இடம் பெற்றிருந்தது.

1981-சனவரியில் மதுரையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டை ஒட்டிப் பல கூத்துக்களும் நடைபெற்றன. மதுரைக்கு அருகில் 'கோவலன் பொட்டல்' என்ற இடத்தில் அகழ்வாய்வுத் துறையினர் தோண்டிப் பார்த்தார்கள் அங்கு ஓர் எலும்புக்கூடு கிடைத்தது. கையிலும் கழுத்திலும் காயத்தோடு கூடியது. இரண்டாயிரம் ஆண்டுக்கு முற்பட்டதாம். இதைக் கோவலனுடைய எலும்புக் கூடுதான் என்று அமைச்சர்கள் உட்படப் பலர் மெய்சிலிர்த்துப் போற்றினார்கள். ஆராய்ச்சி உலகின் திறமையைப் போற்றி நானும் ஒரு கவிதையைச் சமர்ப்பணம் செய்தேன் அது...

"சும்மா குறை சொல்லித் திரியக்கூடாது
தமிழ் ஆராய்ச்சி வளர்ச்சியைப் பற்றிச்
சும்மா குறைசொல்லித் திரியக் கூடாது

உலகத் தமிழர்களை ஒன்றுகூட்டி
மதுரையில்
தமிழுக்குப்
பல்லக்குத் தூக்கிய பவனிநாட்களில்
கோவலன் பொட்டலைத் தோண்டிப் பார்த்தோம்
என்ன வியப்பு!
பொட்டலைத் தோண்டினால்
எலும்புக்கூடு!
கையில் வெட்டுக் காயத்தோடு
இரண்டாயிரம் ஆண்டுக்கு
முந்தியது
கோவலன் பொட்டலில் கிடைத்ததாலே
கோவலன் எலும்புக் கூடாகத்தான்
இருக்க வேண்டும்

மதுரையில் உலகத் தமிழ்விழாவுக்கு
எலும்புக் கூட்டை எடுத்துக் காட்டித்
திருவருள் தமிழ்த் தாயை ஆசிர்வதிக்கிறது"

"நல்லது
பொட்டலைத் தோண்டினால்
எலும்புக்கூடு.......
தமிழ்ப்பால் பருகிய எலும்புக்கூடுகள்
எந்தக் காலத்திலும் மக்கிப் போகாது

ஏராளமான பெயரும் முகவரியும்
எம்மிடம் உண்டு
இரண்டாயிரம் ஆண்டுகளாய்
எலும்புக் கூடுகள் தாம்
தொலைந்து போய்விட்டன.

பொட்டல் தோண்டிகளே!
முயற்சி திருவினையாக்கும்
இன்னும் தோண்டிப் பாருங்கள்!

வல்வினை வந்து வளைத்த செங்கோலுடன்
பாண்டியன் நெடுஞ்செழியன் படுத்துக் கிடக்கலாம்
பாண்டியனுக்குப் பக்கத்திலேயே
பாண்டி மாதேவியின்
எலும்புக் கூடும்........
இன்னும் தோண்டினால்
அன்னை கண்ணகியின்
எலும்புக் கூடும்.........
இருக்கக் கூடும்
தோண்டிப் பாருங்கள்......"

"நிறுத்து..........
அன்னை கண்ணகியோ
வலவன் ஏவா வானவூர்தியில்
கோவலனோடு தேவருலகம் ஏகினாள்......"

"நல்லது......... எனக்குத் தெளிவு பிறக்கிறது
இருந்தாலும் ஒரு எளிய சந்தேகம்
அன்னை
வலவன் ஏவா வானவூர்தியில்
கோவலனையும் தானே
கூட்டிக் கொண்டு போனாள்?"

"இது கூடத் தெரியாமல்
என்ன உளறுகிறாய்?
அன்னை கோவலனை அழைத்துப் போகையில்
உடலைப் போட்டு விட்டுடுயிரோ டேகினாள்"

"அடடா விஷயம் அப்படி என்றால்
பொட்டல் தோண்டிகளே

வேகமாய்த் தோண்டுங்கள்
ஒருமுலை இழந்த திருமா பத்தினியின்
எலும்புக்கூடு கிடைக் காவிட்டாலும்,
எறிந்த ஒரு முலை பத்தினி தெய்வத்தின்
திருமுலை ஆதலால்
கற்புச் சூடு தணியாமல்
ஒரு நெருப்புப் பந்தாய்
பூமிக் கடியில் புகைந்து கொண்டிருக்கலாம்.

தொண்டால் தமிழ் வளர்க்கும்
தோண்டிப் பெருமக்களே!
கற்பின் அற்புதமும்
தமிழின் கன்னித்தன்மை போல்
காலம் கடந்தது என்பதை
'ஆராய்ச்சி'யால் நிறுவ
தோண்டிப் பெருமக்களே!
தோண்டிக் கொண்டே இருங்கள்"

இக்கவிதைக்கு நான் சூட்டிய தலைப்பு 'தோண்டிகளுக்கு ஒரு வேண்டுகோள்'

இந்தச் சமயத்தில் இயங்கிய இயக்கங்கள் குறித்தும் சில சொல்ல வேண்டும். கோவையில் ஞானி, புவியரசு, அக்கினிபுத்திரன், சிற்பி, மேத்தா ஆகியோரால் தொடங்கப்பட்ட 'வானம்பாடி இயக்கம்', 'எழுத்து', 'கசடதபற', 'நடை' போன்றவை இலக்கியத் தூய்மைக்காகவும் சோதனைகளுக்காகவும் தொடங்கப்பட்ட இதழ் சார்ந்த இயக்கங்கள். வானம்பாடியும், எழுத்து முதலிய இயக்கங்களும் பங்களிப்பைச் செய்துள்ளன என்றே இப்பொழுது மதிப்பிடுகிறேன் - தேவையான இவ்விரு இயக்கப் போக்குகளை குறித்து விரிவாக விவாதிக்க இது இடமில்லை. கவிஞர் அக்கினி புத்திரனின் 'தமிழ்ப் புதுக்கவிதை - ஒரு திறனாய்வு' என்ற ஆய்வு நூல் சரியான விவரங்களையும் மதிப்பீடுகளையும் கொண்டிருக்கிறது என்பதை இங்குச் சுட்ட விரும்புகிறேன்.

1985-இல் 'கிழக்குப் பின் தொடரும்' என்ற கவிதைத் தொகுப்பும், 1994-இல் 'கூக்குரல்' என்ற கவிதைத் தொகுப்பும், 1996-இல் 'இன்குலாப் கவிதைகள்' என்ற தொகுப்பும் வெளிவந்துள்ளன.

இளம் வயதிலிருந்தே என்னுள் கனன்று கொண்டிருக்கும் எதிர்ப்புணர்வே எனது பல கவிதைகளுக்குக் காரணமாக இருந்திருக்கின்றன. பீட்டர் சாலையில் நடைபாதையில் வசித்த ராஜத்தின்

மரணம் என்னைக் 'கண்மணி ராஜம்' கவிதையை எழுதத் தூண்டியது. சிம்சன் போராட்டம், 'நீங்கள் என்னைக் கம்யூனிஸ்ட் ஆக்கினீர்கள்' கவிதைக்குக் காரணம். வெண்மணிக் கொழுந்துகள் என் பேனா முனையில் இன்னும் எரிந்து கொண்டிருக்கின்றன. குளப்பாடியில் கிணற்றில் மின்சாரம் பாய்ச்சிக் குழந்தைகள் கொல்லப்பட்ட செய்திக்கு நான் ஆற்றிய கவிதை எதிர்வினைதான் 'மனுசங்கடா'. எரியும் ஈழத்தின் கொழுந்துகளை கடல் அலைகளின் சூட்டிலிருந்து நான் உணர்கிறேன்.

எதிர்ப்புணர்வு கவிதைகளில் கொப்பளித்த போது பிரசாரம் என்றனர். அந்தப் பிரசாரத்தையும் நான் கவித்துவத்தோடு செய்ய முயன்றுள்ளேன். கவிதையற்ற தன்மையிலிருந்து கவித்துவத்தை நோக்கி வருகிறேன் என்று திறனாய்வு நண்பர் ஒருவர் என்னைப்பற்றிக் கூறினார். முதல் தடவையாக இதைக் கேட்கும்போது 'ஆம்' என்றுதான் ஒப்புதல் அளிக்கத் தோன்றுகிறது. எனினும் இன்குலாப் கவிதைகளிலிருந்து இன்குலாப் கவிதைகள் - 11 வரை எப்பொருள் குறித்து எழுதினாலும் கவித்துவ அழகோடு சொல்ல நான் முயன்று வந்திருக்கிறேன்.

யாருடைய கவிதையால் நான் தாக்கம் பெற்றேன்....... பாரதி - பாரதிதாசனிலிருந்து இன்று எழுதும் இளங்கவிஞர்கள் வரை அனைவருக்கும் நான் மாணவனாகவே உள்ளேன். இளமையிலிருந்து எனக்குக் கவிதை வட்டம் வாய்த்திருந்தது என்பதையே நான் பெற்ற பெறும் பேறாகக் கருதுகிறேன். வீட்டில் என் தமையனும் தமக்கையும், பள்ளியில் ஆசிரியர்களும் மாணவ நண்பர்களும், கல்லூரியில் ஆசிரியராகக் கவிஞர் மீரா...... தோழர்களாக நா. காமராசன், சூரியதீபன்...... பணியாற்றிய புதுக்கல்லூரியில் உடன் தோழராக ஈரோடு தமிழன்பன்..... கல்லூரிக்கு வெளியே இளவேனில், மக்கள் எழுத்தாளர் சங்கம், குடும்ப நண்பராகக் கவிஞர் அக்கினிப் புத்திரன். இத்தனையிலிருந்தும் தனித்து நின்ற 'எழுத்து' வட்டம்...... எல்லோராலும் பாதிக்கப்பட்டவன் நான். ஆனால் எந்தத் தாக்கத்திலும் எனது தனித்தன்மையை இழந்ததில்லை அனைவருக்கும் மாணவன்; ஆனால் யாரையும் பின்பற்றியதில்லை. குறையோ நிறையோ எனது முகத்தோடுதான் நான் நிற்கிறேன்.

என் படைப்புகளில் அழகியல் தன்மை இல்லை என்ற மதிப்பீடுகளுக்கு 'ஆமாம்', 'இல்லை' என்று நானும் முரட்டுத் தனமாகவே ஒப்புதல் அளித்து வந்திருக்கிறேன். இன்று கவிதையின் அழகியலைக் கூடுதலாக உணரவும் உணர்த்தவும் முடிகிறது. ஆயினும் என் தொடக்கக் கால முயற்சிகளிலேயே அழகியலின் கோடுகள் சுடர்வதை ஈடுபாடு கொண்டோரால் பார்க்க முடியும்.

உண்மையை உணர்வுபடச் சொல்வது எனது கவிதை முயற்சியாக இருந்து வந்திருக்கிறது. சொல் எனக்குப் பொருள்; பொருளின் ஒலிக் குறியீட்டுப் பொருள்; சொல் எனக்கு இசை; சொல் எனக்கு வண்ணம்; சொல் எனக்கு நாட்டியம்.

கல்லிலிருந்து சிற்பம் உருவானாலும் கல்லன்று சிற்பம்; கோடுகளிலிருந்தும் வண்ணங்களிலிருந்தும் ஓவியம் உருவானாலும் கோடும் வண்ணமும் அல்ல ஓவியம். ஓசைகளுக்கு இசையை இசைஞானி எழுதுகிறான். வண்ணங்களுக்குக் கோடுகளின் விளம்பில் தனது செய்தியை ஓவியன் இசைக்கிறான்.

அழகுணர்ச்சிக்கான கோரிக்கை நியாயமானது என்பதைத் தொடக்கத்திலிருந்து உணர்ந்து வருகிறேன். இன்று கூடுதலாக உணர்கிறேன்.

அலங்கோலங்களே நியதியும் அதிகாரமும் ஆகிவிட்ட ஒரு சமுதாயத்தில் அழகுணர்ச்சி என்பதே எதிர்ப்புணர்ச்சிதான். அழகுணர்ச்சி என்பது ஒதுங்கி இருப்பது அல்ல; மௌனம் மட்டுமன்று; இடியும் அழகுணர்ச்சிதான். அழகியல் என்பது போராட்டத் தொடர்பற்றது; சமுதாயத் தொடர்பற்றது என்ற நிலைப்பாடு உள்ளவர்களோடுதான் நமது முரண்பாடுகள்.

சமுதாய மாற்றத்துக்கான போராட்டங்கள் நடைபெற்ற கால கட்டங்களில் மாற்றத்துக்கானப் போராட்டங்களில் தம்மை இணைத்துக் கொள்ள முடியாத படைப்பாளிகள் அழகியலில் தஞ்சம் புகுந்தனர். பிரான்சில் இந்தப் போக்கு எழுந்ததை 'பிளக்ஹானவ்' எடுத்துக் காட்டுகிறார். அழகியல்வாதிகள் மாற்றத்துக்காகப் போராடத் துணிவற்றிருந்தார்கள். அதிகாரத்தோடு ஒத்துப் போக முடியாதவர்களாகவும் இருந்தார்கள். அதிகார எதிர்ப்புணர்வு என்பது அவர்களின் அழகியல் படைப்பு முயற்சியாகவும் இருந்தது.

தமிழகத்தைப் பொருத்தமட்டிலும் அழகியல்வாதிகளின் நிலைப்பாடு என்பது மாற்றத்துக்கான போராட்ட எதிர்ப்பாகவே இருந்தது. படைப்பாளிகளில் பலர் மேல் சாதியினராகவும் இருந்ததால், மாற்றத்துக்கான போராட்டம் என்பது வர்க்க அடிப்படையை மட்டுமல்லாது சாதிய அடிப்படையையும் தகர்த்துவிடும் என்று அஞ்சினர்; அஞ்சுகின்றனர். வர்க்க மனோபாவத்திலிருந்து விடுபட முடியாதது போலவே சாதியப்பற்றிலிருந்தும் விடுபட முடியாதவர்களாகவும் இருக்கின்றனர். பல சமயங்களில் மாற்றத்துக்கான படைப்புகளை ஒதுங்கி

நின்று ஏளனம் செய்வதாகவும் இருக்கின்றனர். போராட்டங்கள் குறித்த மௌனம் என்பது ஒடுக்கு முறைகளுக்கு ஒப்புதலாகிவிடுகின்றது. நிலவும் அதிகாரத்தின் கலை ஊழியர்களாக இவர்கள் அறிந்தோ அறியாமலோ செயல்படுகின்றனர். மாற்றத்தை எதிர்ப்பது அல்லது கண்டு கொள்ளாதிருப்பது என்ற தளத்திலிருந்து அழகியல்வாதிகள். இதனை ஓர் இயக்கமாகவே உருவாக்கியும் உள்ளனர். வெகுமக்கள் மத்தியில் இவர்கள் பரவலாகச் செல்லமுடியாத போதும், இவர்களுடைய பண்பாட்டு மேலான்மை காரணமாக, இவர்களும், இவர்களது படைப்புகளுந்தான் தமிழின் சரியான படைப்புகள் என்று தமிழகத்துக்கு வெளியே பிரச்சாரம் செய்யப்படுகிறது. அத்தகைய பிரச்சார வல்லமை இவர்களுக்கு இருக்கவே செய்கிறது. தகவல் தொடர்புச் சாதனங்களின் போக்கை இவர்களே தீர்மானிக்கிறார்கள். ஏனெனில் இவர்களே இவற்றின் அதிகாரிகள்.

இந்தத் தரப்பிலிருந்து சரியான மதிப்பீடுகள் வந்ததில்லை; புறக்கணிப்பும் எள்ளலுந்தான் வந்துள்ளன. இதற்கு அப்பால், மாற்றத்துக்காக நிற்கும் படைப்புப் போராளிகள் அழகியலைப் புறந்தள்ளாமலே படைத்து வருகிறார்கள். இதற்கான முன்மாதிரியாக நான் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனைச் சுட்டுவேன். பாரதிதாசனின் மரபைப் 'போராட்ட அழகியல்' என்று குறிக்கலாம்.

வால்ட் விட்மன், மாயகாவ்ஸ்கி, பாப்லோ நெருடா முதலியோருடைய கவிதைகளில் எல்லாம் இப்போராட்ட அழகியலே இழையோடக் காண்கிறேன். ஈழத்துக் கவிதைகளின் அழகியலைப் போராட்டமே தீர்மானித்தது.

கலை கலைக்காகவா - வாழ்க்கைக்காகவா என்ற வாதம் பொருளற்றது என்று கருதுகிறேன். மனித வாழ்க்கையின் இறுதி இலக்கே கலையும் பண்பாடுந்தான். எனவே வாழ்க்கை கலைக்காக என்பதுதான் என் படைப்பு முயற்சியின் துணிபும். இதை அடைவதற்காக நான் போராட்டத்தை முன் மொழிகிறேன். 'அழகிய வாழ்க்கை' என்பது இறுதி இலக்காகும்போது அழகியலை எவ்வாறு புறக்கணிப்பேன்? போராட்ட அழகியல் மரபின் தொடர்ச்சிதான் என் கவிதைகளும்.



# சுரதா

நான் தஞ்சை மாவட்டத்தில் பழையனூர் என்ற சிறு கிராமத்தில் 23.12.1921 ஆம் நாள் பிறந்தேன். என்னுடைய தந்தை திருவேங்கடம். நெசவாளர். தாயார் சண்பகம் அம்மாள். இராமலிங்க அடிகள், பட்டினத்தார், தாயுமானவர் பாடல்களை என்னுடைய தந்தையார் பாடுவது வழக்கம். அதைக் கேட்கும்பொழுது இதைப் போன்று பாடல்கள் எழுத வேண்டும் என்ற ஆர்வம் என்னுள் எழுந்தது. எனக்கு மனதில் தோன்றும் பாடல் வரிகளை, தெருவில் உள்ள மணலில் எழுதி நண்பர்களிடம் காட்டுவேன். எனக்கு அப்பொழுது 10 அல்லது 12 வயதிருக்கும்.

ஆறுமுகபக்தர், சிங்காரவேலு நயினார், மெய்யக் கோனார், ரங்கசாமிப்பிள்ளை, கோவிந்தராசு நாட்டார், சாமி வேலாயுதம்பிள்ளை, சீர்காழி அருணாசல தேசிகர் ஆகியோர் எனக்குப் பள்ளி ஆசிரியர்களாக இருந்தனர். பள்ளி நாட்களில் என்னுடைய ஆசிரியர் சிங்காரவேலு நயினார், 'ரோமியோ ஜூலியட்' என்ற கவிதை நாடகம் ஒன்றை நடத்தினார். நான் அதில் ஒரு பாத்திரம் ஏற்று நடித்தேன். நான் நடித்த முதல் கவிதை நாடகம் இதுவே! தந்தை பெரியார், கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன், இரத்தினசாமிப்பிள்ளை ஆகியோரின் தலைமையில் நடைபெற்ற 'புரட்சிக் கவி' கவிதை நாடகம் இரண்டாவதாகும். அக்காலத்தில் இந்நாடகம் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.

இராஜாமடம் நடுநிலைப் பள்ளியில் படிக்கும்பொழுது முருகனைப் பற்றி ஒரு பாடல் எழுதினேன். எனது வகுப்பு ஆசிரியர் நன்றாக இருக்கிறது; என அதைக் கடவுள் வாழ்த்தாகப் பாடச் சொன்னார். இத்தகையச் சூழல் என்னை ஊக்கப்படுத்தியது. ஒரத்த நாட்டில் பள்ளியிறுதி வகுப்பு வரைப் படித்தேன். என்னுடைய தலைமையாசிரியர் சாமி வேலாயுதம்பிள்ளை முதன்முதலில் 'திருக்குறள் சொல்லடைவுத் தயாரித்து வெளியிட்டார். இவர்களிடம் ஏற்பட்ட தொடர்பு எனக்குத் தமிழில் ஆழமான பற்று ஏற்பட வாய்ப்பாக இருந்தது.

எங்கள் ஊரில் தேநீர்கடை வைத்து நடத்தி வந்த அழகப்பன் என்பவர் அந்தக் காலத்திலேயே தந்தை பெரியார் தலைமையில் திருமணம் செய்து கொண்டவர். 1938 ஆம் ஆண்டு பாவேந்தர் பாரதிதாசனின் முதல் கவிதைத் தொகுதியை இவர் என்னிடம் கொண்டு

வந்து, 'ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர் உதையப்பர் ஆகிவிட்டால்' என்ற பாடல் வரிகளைக் காட்டி, கவிதை எப்படி? என்று கேட்டார். அந்தக் கவிதையைச் சுவைத்த நான், அந்தக் கவிதையிலுள்ள புரட்சி வேகத்தால் கவரப்பட்டேன். அந்தப்புரட்சி வரிகளே பாரதிதாசனைப் பார்க்க என்னைத் தூண்டியது.

பாரதிதாசனைப் பார்க்க, பாண்டிச்சேரிக்குச் சென்று வர வழிச் செலவுக்குப் பணம் இல்லாததால் கோவில் சுவருக்கு வெள்ளையடித்து அதற்கான கூலிப் பணத்தைப் பெற்றுக் கொண்டு சென்றேன்.

"முப்ப தாண்டுகட்கு முன்னர் ஓர்நாள்
பாவேந்தர் புதுவை பாரதி தாசனை
நேரில் சென்று சந்திக்க நினைத்தேன்.

பயணச் செலவுக்குப் பணமில்லை என்னிடம்
ஆதலால் பணத்திற் கலைந்தேன். ஒரு சிலர்
கையையும், ஒருசிலர் பொய்யையும் விரித்தனர்.
புறப்பட்டுப் புதுவைக்குப் போக வேண்டுமே
என்ன செய்யலாம் என்று யோசித்தேன்.
கீர்த்தியொடு விளங்கும் கீவளூர் கோயிலில்
வெள்ளை அடிக்கும் வேலை கிடைத்தது.

மலைப்பிளவு வழியாய் வந்த அந்நியர்
கொள்ளை அடித்தனர் கோயிலில் நானோ!
வெள்ளை அடித்தேன் வெண்சுண் ணாம்புநீர்
என்றன் உடம்பில் எங்கும் வழிந்தது!

அப்பளம் தனில்வரும் கொப்புளம் போல
வலக்கரம் தன்னில் மலர்ந்தது கொப்புளம்!
ஆறுநாள் சுண்ணாம் படித்தேன். அதற்கோ
ஒன்றரை ரூபாய் உடனே கிடைத்தது
புதுவையை நோக்கிப் புறப்பட்ட ரயிலில்
அன்றே ஏறினேன்! அடுத்த நாள் காலையில்
சுவைதரும் செந்தமிழ்ச் சிங்கமாம் அந்தக்
கவிதா மண்டலக் கவியைக் கண்டேனே!"

என்று இந்நிகழ்ச்சியைப் பற்றி எழுதியிருக்கிறேன். 14.1.1941 ஆம் நாள் பொங்கல் திருநாளன்று முதன்முதலாக பாவேந்தரை அவருடைய வீட்டில் சந்தித்தேன். பொங்கல் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். என்னைப் பற்றி விசாரித்தார். என்னுடைய கையெழுத்து நன்றாக இருப்பதைப்

பார்த்துவிட்டு 'நன்றாக எழுதுகிறாய். வீட்டில் நான்கைந்து நாட்கள் இருந்துவிட்டுப் போ' என்று கூறினார். ஐந்து நாட்களுக்குப் பிறகு எனது கையில் ரூ. 20 கொடுத்து 'ஊருக்குப் போய்விட்டு மீண்டும் வா' என்றார். அதேபோல சில நாட்கள் கழித்து மீண்டும் வந்து பாவேந்தரின் வீட்டில் தங்கியிருந்து அவருக்குத் துணையாக அவருடைய கவிதைகளைப் படியெடுக்கும் பணியைச் செய்து வந்தேன். தினமும் மாலையில் இருவரும் அருகில் உள்ள கடற்கரைக்குச் செல்வோம். பல இலக்கியச் செய்திகளைப் பற்றி நிறைய சொல்லுவார். மூன்று ஆண்டுகள் அவருடன் இருந்தபொழுது பலரும் எனக்கு அறிமுகமானார்கள்.

பாவேந்தரின் ஆற்றல் பரந்துபட்டது. அவருடைய தொடர்பு என்னைக் கவிஞனாக உயர்த்தியது. பாவேந்தருடைய கவிதை நூல்களைப் படியெடுக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்த காரணத்தால், அவருடைய உத்திகளைப் புரிந்து கொண்டேன். எனது கவிதைத் துறைக்குப் பாவேந்தர் வழிகாட்டி. ஆனால் நான் அவரைப் பின்பற்றி எழுதவில்லை. ஒரு பெருங்கவிஞரைப் பின்பற்றி எழுதினால் நம்முடைய சொந்த வளர்ச்சி பத்தாண்டுகள் பின் தங்கி விடும். அதனால் நான் யாரையும் பின்பற்றாமல் புதிய முறையில் எழுதினேன். அதற்குக் காரணம் நான் ஒரு நாத்திகன். கவிதை ஒரு வரப்பிரசாதம் என்பதை நான் மறுக்கிறேன். கடுமையாக உழைத்து புலவர்களை வென்று காட்ட வேண்டும் என்ற ஆர்வம் என்னை இளமையில் உந்தித் தள்ளியது. எனக்கு இத்தகைய நம்பிக்கையும், மன உறுதியும் ஏற்பட்டதற்குக் காரணம் பெரியாரின் கொள்கையில் எனக்கிருந்த ஈடுபாடுதான்.

பிறவியிலேயே ஒருவன் கவிஞனாகப் பிறக்கிறான் என்பதெல்லாம் பித்தலாட்டம். ஒரு பொருளையோ அல்லது நிகழ்ச்சியையோ பார்த்து உணர்ச்சி வசப்பட்டுப் பாடுதல் என்ற பழக்கமும் எனக்குக் கிடையாது. எந்தப் பொருளைப் பற்றியும் உட்கார்ந்து சிந்தித்துத்தான் எழுதுவேன். உலகத்தை அப்படியே காட்டுவதுதான் கவிதை. ஒன்றை ஒன்றோடு ஒப்பிட்டுச் சிந்திப்பதுதான் கவிதைக் கொள்கை.

நுட்பமான சிந்தனை; ஒதுங்கிய சிந்தனையும்தான் என் கவிதை வளர்ச்சிக்கும் வெற்றிக்கும் காரணம். கவிஞன் சிறந்த சிந்தனையாளனாக இருக்கவேண்டும். நான் கவிதையில் எந்தக் கருத்தைச் சொன்னாலும், எனக்கு முன் வாழ்ந்த கவிஞர்கள் சொன்ன முறையிலிருந்து மாறிப் புதுமையாகச் சொல்ல வேண்டும் என்று நினைப்பேன். சற்று ஒதுங்கி சிந்திப்பேன்.

"காலத்தால் முந்தியவன் கவிஞன் அந்தக்
கவிஞனையும் முந்தியவன் ஆடை நெய்வோன்
ஓலைதனில் எழுதாமல் அன்னோன் நெய்யும்
உடையதனில் வண்ணப்பாட் டெழுதும் சிங்கம்"

என 'நெசவாளி'யைப் பற்றி எழுதினேன். இது சற்று புதுமையாக அமைந்தது. வெள்ளை முயலைப் பார்த்தவுடன், "தும்பைப்பூப் போன்ற வெள்ளை முயல்" என்றும் "பஞ்சுடல் பசுங்கண் பாய்முயல்" என்றும் பொதுவாகப் பிற கவிஞர்கள் குறிப்பிடுவர். ஆனால் நான் ஒதுங்கிச் சிந்தித்துச் 'சலவை முயல்' என்று வேறுவிதமாகச் சொன்னேன். இதுதான் என் வெற்றிக்குக் காரணம்.

சிறிய கவிதைகள் எழுதி வெற்றிப் பெற பெரிய ஆற்றல் வேண்டும். சொற் சுருக்கம் எனக்குப் பிடிக்கும். தாழம்பூவை மடித்துத் தலையில் செருகவேண்டும். அதுபோல சொற்களை மடித்துக் கவிதையில் செருகவேண்டும். சங்க இலக்கியத்தின் வெற்றியே சொற்சுருக்கத்தில்தான்!

ஒரு கவிஞன் எழுதுவதெல்லாம் கவிதையாகி விடுவதில்லை. சிலவே கவிதைத் தகுதியைப் பெறுகின்றன. தன் படைப்புக்குக் கவிதைத் தகுதியைத் தரக் கவிஞன் கடினமாக உழைக்க வேண்டும். பொதுவாக நான் நிறைய நூல்களைச் சேகரிப்பதும், படிப்பதும் என் வழக்கம். கல்லாடம், திருக்குறள், நாலடியார், தலபுராணங்கள், 17-18 ஆம் நூற்றாண்டுப் புலவர்கள் எழுதிய சிறு பிரபந்தங்கள் ஆகியவற்றை விரும்பிப் படிப்பதுண்டு. கொள்கை அளவில் புராண நூல்களை நான் வெறுத்தாலும், அவற்றை எழுதிய கவிஞர்களின் ஆற்றலை மிகவும் மதிக்கிறேன். பேராற்றல் மிக்க கவிஞர் பலர் ஊர்பேர் தெரியாமல் அழிந்து போனார்கள். அவர்களுக்காக வருத்தப்படுகிறேன். நான் படிக்கும்போது பாடலை அதிகமாக சுவைப்பதில்லை. அதில் பயன்படுத்தப்பட்டுள்ள கவிதை உத்திகளைத் தான் அதிகம் சுவைப்பேன். கீர்த்தனைகள் என்பது இறைவனையும், மன்னனையும் புகழ்ந்து பாடவுமே அன்று இருந்தது. அதை மாற்றியமைத்தவர் பாவேந்தர். அவர் வண்டிக்காரனுக்கும், தபால்காரனுக்கும், பூப்பறிப்பவனுக்கும், கீர்த்தனைகள் பாடி பாட்டுலகில் ஒரு புரட்சியையே உண்டாக்கினார். எல்லாத் தொழில்துறைக்கும் கீர்த்தனை - இசைப்பாடல்கள் கொண்டு வந்த பெருமை இவருக்கு உண்டு. இது ஒரு பெரிய திருப்பம். 'இசையமுது' எனும் நூலில்

"அதோ பாரடி அவரே என் கணவர்
புதுமாட்டு வண்டி ஓட்டி
போகின்றார் என்னை வாட்டி"

என்று மாட்டுவண்டிக்காரனைப் பாடுகிறார். இப்படிப் பல்வேறு கோணங்களில் பாவேந்தர் பாரதிதாசன் புதுமைக் கவிஞராகத் திகழ்ந்தார்.

பாவேந்தர் தன் பெயரை விட்டுவிட்டு பாரதிக்குத் தாசனாகி 'பாரதிதாசன்' ஆனார். அவர் விட்ட அந்தப் பெயரை (சுப்புரத்தினம்) எண்ணிப் பார்த்து அவரது பெயருக்குத் தாசனாக, எனது இயற்பெயரான இராசகோபாலன் என்பதை மாற்றி சுப்புரத்தினதாசன் என்று என்னை அழைத்துக்கொண்டேன். ஒருமுறை மாட்டுக் கொட்டைகையில் இருந்து கடிதம் எழுதும்போது கையெழுத்துப் போட்டேன். கடிதத்தில் இடம் குறைச்சல். எனவே சு.ர.தா. என்று புள்ளியிட்டு சுருக்கி எழுதிப் பின்னாளில் 'சுரதா' என்று ஆக்கிக் கொண்டேன்.

பெரியார் அவர்களின் 'குடியரசு' இதழ் வழியாக ஏற்கனவே பகுத்தறிவுக் கொள்கையை ஏற்றவனாக இருந்து, சிறுசிறு கவிதைகள் எழுதி வந்த நான், பாவேந்தரைப் பார்த்தபிறகு, அவரது பாணியை மட்டும் பின்பற்றிக் கொண்டு கவிதைகளை எழுதத் தொடங்கினேன்.

என்னை முதன்முதலில் கவிஞராக அறிமுகப்படுத்தியவர் கவிஞர் திருலோக சீதாராம். தாம் நடத்தி வந்த 'சிவாஜி'யில் என் கவிதைகளைத் தொடர்ந்து பத்து வாரம் வெளியிட்டு என்னை விளம்பரப் படுத்தினார். பிறகு புதுக்கோட்டையில் இருந்து வெளிவந்த 'தலைவன்' பத்திரிகையில் கொஞ்சநாள் துணையாசிரியராகப் பணியாற்றினேன். பாவேந்தரின் தொடர்பு என்னை, கவிஞராகும் தகுதிக்கு உயர்த்தியது.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனைப் பின்பற்றி ஒரு புலவர் கூட்டம் உருவானது! அந்தக் கூட்டம், தந்தை பெரியாரின் பகுத்தறிவு வேலிக்குள்ளிருந்து விடுபடாத கூட்டம்! அறிஞர் அண்ணாவின் சமுதாயச் சீர்திருத்த வட்டத்தைவிட்டும் விலகாத கூட்டம்! 1947 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதல், புதுக்கோட்டையிலிருந்து 'பொன்னி' இதழ் திரு. முருகு சுப்பிரமணியன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது. புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கவிதைகளையும் அவர்தம் இலக்கியச் சிறப்பையும் தமிழுலகத்தில் பரப்புவதை முக்கிய நோக்கமாகக் கொண்டு தொடக்கத்திலிருந்தே பாவேந்தரின் கவிதையை ஒவ்வொர் இதழிலும் வெளியிட்டு வந்தனர். அந்த நாளில் திராவிடர் கழகத் தொண்டர்கள் மத்தியிலும் சுயமரியாதை இயக்கத்திலும் மட்டுமே பாவேந்தரின் புகழ் பரவி இருந்தது. அந்த நிலையை மாற்றித் தமிழ் இலக்கிய உலகம் அனைத்திலும் பாவேந்தரின் கவிதைகள் பரவ வேண்டுமென்று 'பொன்னி' இதழில் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. பாவேந்தரின் கவிதைகள் இடம்பெற்றதுடன், அவர் காட்டிய மரபில் அவர்

கொள்கை வழி நின்று கவிதைகள் படைக்கும் கவிஞர்களுக்கு 'பொன்னி' இதழில் எழுதும் வாய்ப்புக் கிடைத்தது. வளர்ந்து வந்த அந்த இளங்கவிஞர்களெல்லாம் 'பாரதிதாசன் பரம்பரை' என்னும் தலைப்பில் அறிமுகப்படுத்தப்பட்டனர்.

மு. அண்ணாமலை, நாரா. நாச்சியப்பன், சுரதா, புத்தனேரி சுப்பிரமணியன், ராம. நாக முத்தையா, முடியரசன், ராம. வே. சேதுராமன், வாணிதாசன், தி. இராமசாமி, சாமி. பழனியப்பன், அண. இராமநாதன், கோவை இளஞ்சேரன், சி. திருநாவுக்கரசு, ச. சீத்தாராம், தெ. ஜெயராமன், நா. மாணிக்கவாசகம், தமிழரசன், கே.டி. தேவர், நா.கு. நமச்சிவாயன், இரா. குழு உத் தலைவன், திரவியம், ச. வழித்துணைராமன், ரங்க துரைவேலன், வ.செ. குலோத்துங்கன், வெ. குருசாமி, தன. சுந்தரராசன், டி.கே. கிருஷ்ணசாமி, பெ. நாகப்பன், பெரி. சிவனடியான், எஸ். சிவப் பிரகாசம், சி.அ. சீனிவாசன், மு. ரங்கநாதன், ஜே.எஸ். பொன்னய்யா, கதி. சுந்தரம், எம்.எஸ். மணி, நா. கணேசன், தி. அரசுமணி, ப. சண்முகசுந்தரம், க. பரமசிவன், மா.தேவராசன், மா. குருசாமி, வி. முத்துசாமி, க.மு. ஷெரீப், சுப்பு ஆறுமுகம், எஸ்.எம். இராமநாதன், கி. மனோகரன், வெ. சண்முகம் ஆகிய 47 பேரும் பாரதிதாசன் பரம்பரையைச் சார்ந்தவர்கள். பொன்னி இதழில் இடம்பெற்ற இவர்களின் கவிதையைத் தொகுத்து 'பாரதிதாசன் பரம்பரை' என்ற தலைப்பில் 1993 டிசம்பர் மாதம் நூல் ஒன்றை வெளியிட்டுள்ளேன். சுமார் 3 ஆயிரம் கவிதைகள் எழுதியிருக்கிறேன். என்னுடைய கவிதைகளில் மிகுதியான உவமைகள், சற்று புதுமையாகவும் அமைந்திருப்பதால் எழுத்தாளர் ஜெக சிற்பியன் 1945, 1946 ஆம் ஆண்டுகளில் அவர் நடத்திய 'சிரஞ்சீவி' என்ற பத்திரிகையில் 'உவமைக் கவிஞர்' என்று சிறப்பித்துப் போட்டார். தொடர்ந்து எல்லோரும் அந்தப் பெயரை எனக்கு வழங்கினார்கள்.

'இளவேனில் காலத்தைப் பற்றி எழுதியபோது

> "செந்தீ போன்ற சிறந்த மாந்தளிரை
> குயிலின் கூட்டம் கோதிக் கோதி
> குறடுவாய் திறந்தே கூவிக்கூவி
> இசையமு தளிக்கும் இளவேனிற் காலம்......?"

மாந்தளிரை 'செந்தீ' என்றும், குயிலின் வாயைக் 'குறடு' என்றும் குறிப்பிட்டிருப்பேன். ஒரு பெண் நாணித் தலை குனிவதைப் பற்றிச் சொல்லும்போது

> "பிழிந்ததொரு புடவையைப் போல் குனிந்து கொண்டாள்"

என்றும்

"நிலாவை வெள்ளி ஆடை"

என்றும்

"தண்ணீரின் ஏப்பம்தான் அலைகள்!"

"இலைக்குடையைப் பிடித்தபடி மரங்கள் நிற்கும்"

"மழைவயிறு கிழிக்கும் மாடமாளிகை"

என்றும் எனது கவிதைகளில் உவமைகள் மிகுதியாக இடம் பெறுவதுண்டு.

'விளக்கு' பற்றி எழுதினால்,

"ஏரிதான் வயலின் தாய்ப்பால்
எரிகின்ற விளக்கே! எண்ணெய்ச்
சூரியன் நீதான்! தீயின்
தொடர்கதைச் சுருக்கம் நீதான்!"

என்று புதுமையாக உவமைகள் இடம் பெறும். இதனால் பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர்களில் இந்த உவமைகளினால் நான் சிறப்பிக்கப்பட்டேன். பகுத்தறிவு, சுயமரியாதை உணர்வு, மூடநம்பிக்கை, பெண்ணுரிமை, இயற்கை, உழைப்பு, கல்வி, வீரம், அழகு, தத்துவம், கலை எனப் பலநூறு தலைப்புகளில் கவிதை படைத்திருக்கிறேன்.

என்னுடைய முதல் கவிதை நூலின் பெயர் 'சாவின் முத்தம்' இந்நூலை வி.ஆர்.எம். செட்டியார் 1946 ஆம் ஆண்டு மார்ச் மாதம் வெளியிட்டார்.

1954 ஆம் ஆண்டு கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் 'முரசொலி' இதழில் தொடர்ந்து கவிதை எழுதி வந்தேன். எழுச்சியும் வேகமும் நிறைந்த அந்தக் கவிதைகளைப் படித்துத்தான் 'சுரதா பரம்பரை' என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுகிற அளவுக்கு பெருமளவில் கவிதை ரசிகர்கள் உருவாயினர்.

1955 ஆம் ஆண்டு 'காவியம்' என்ற கவிதை வார இதழை துவக்கி நடத்தினேன். செக்கோஸ்லோவாகிய அறிஞர் டாக்டர் கமில் சுவெலபில் அவர்களிடம் மயிலை சீனி வேங்கடசாமி என்னை அறிமுகப்படுத்தி வைக்கும்பொழுது இக்கவிதை இதழைப் பற்றி கூறினார். அப்பொழுது டாக்டர் கமில் சுவெலபில், 'கவிதை இதழ் உலகில் மாத இதழாகத்தான் வெளிவந்திருக்கிறது. வார இதழாக உலகிலேயே இந்த இதழைத்தான் நான் பார்க்கிறேன்' என்று குறிப்பிட்டார்.

'காவியம்' கவிதை இதழை தந்தை பெரியார் பிறந்த நாளன்று 17-9-55 இல் வெளியிட்டேன். இதில் இடம் பெற்ற என்னுடைய முதல் கவிதை பாவேந்தரைப் பற்றியதாகும். 'நமக்குக் கிடைத்த நாத்திகக் கவிஞர்' என்ற தலைப்பில்

"கூத்தாடிக் கொண்டிருக்கும் புராண நூலின்
கொட்டத்தை அடக்கிவரும் கவிஞன் நல்ல
நாத்திகன்! நற்றமிழன்! இந்நூற்றாண்டு
நம் நாட்டுக் களித்துள்ள எழுத்துச் செல்வம்
ஆத்திகர்க்கு வேப்பங்காய், நமக்கு மாங்காய்
அகத்தியர்போல் உடல் மரணம் மட்டும் உள்ளோன்
சூத்திரனே என்பவனை உதைக்கச் செல்லும்
சுப்பு ரத்தினக் கவிஞன்! எதிர்ப்பில் வாழ்வோன்"

என்று, நீண்ட கவிதை இடம்பெற்றது. இந்த இதழின் தலையங்கமும் கவிதையிலே இடம்பெற்று வந்தது. முதல் தலையங்கம் செப்டம்பர் - 17 என்ற தலைப்பில் பெரியார் பிறந்தநாள், தி.மு.க. பிறந்த நாள், 'காவியம்' இதழ் பிறந்த நாள் என மூன்றையும் குறிக்கும் வகையில்

செப்டம்பர் ...................... 17
செப்டம்பர் ...................... 17
செப்டம்பர் ...................... 17

என எழுதினேன். அதில் பெரியாரைப் பற்றி

"தாக்குதல் எதற்கும் அஞ்சாத்
தைரியச் சிங்கம்! சாதி
நாக்கினை அசைத்து வாழும்
நரிச்செயல் ஆரி யத்தைத்

தூக்கிலே மாட்டு கின்ற
சுயமரியாதை இயக்கச்
சாக்கரட் டீசு இன்னார்
சனித்தநாள் இந்த நாளே!"

என எழுதினேன். இப்படிப் புதியமுறையில் ஏதாவது செய்ய வேண்டும் என செய்து கொண்டிருந்தேன். பலரின் பாராட்டுதல்கள் கிடைத்தன. காவியத்தைத் தொடர்ந்து 'இலக்கியம்' (1958) 'ஊர்வலம்' (1963) 'விண்மீன்' (1964) என்று இலக்கிய ஏடுகளை தொடங்கி நடத்தி வந்தேன். அறிஞர் அண்ணா என்னுடைய கவிதைகளை கேட்டு வாங்கி 'திராவிட நாடு'

இதழில் வெளியிட்டார். அறிஞர் அண்ணாவுடன் நீண்ட காலம் எனக்குத் தொடர்பு இருந்து வந்தது. 1956 இல் 'பட்டத்தரசி' என்ற சிறு காவியநூலை வெளியிட்டேன். 16 பக்கங்கள் கொண்ட பரபரப்புக்குரிய அந்நூலின் முன்னுரைக் கவிதையை ஒரு மணிநேரத்தில் எழுதி முடித்தேன்.

மயிலை. சீனி. வேங்கடசாமி அவர்கள் என்னிடம் ஒருமுறை 'துண்டு, துண்டாக சிறு நூல்களாக இருப்பதை விட பெரிய கவிதை நூலொன்று கொண்டுவர வேண்டும்' என்று சொல்ல, அதற்குப் பிறகு வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்களின் பெருமுயற்சியால் 1965-இல் 'தேன்மழை' என்ற கவிதை நூல் வெளிவந்தது. 1969-இல் இந்நூலுக்கு தமிழக அரசின் பரிசு கிடைத்தது. மதுரைப் பல்கலைக் கழகத்தில் மாணவர்களுக்குப் பாடமாகவும் வைக்கப்பட்டது.

1968 ஆம் ஆண்டு என்னுடைய பெயரிலேயே 'சுரதா' என்ற கவிதை இதழ் மாதமிருமுறை வெளிவருகின்ற இதழைத் தொடங்கினேன். அதன் பிறகே கவிஞர்கள் தங்கள் பெயரில் இதழ்களைத் தொடங்கும் முறையைக் கொண்டு வந்தனர்.

1971 ஆம் ஆண்டு ஆனந்தவிகடன் வார இதழில் வாரந்தோறும் கவிதைகள் என ஓராண்டு காலத்திற்கு மேல் எழுதி வந்தேன். இவை ஏராளமான வாசகர்களின் பாராட்டுதலைப் பெற்றன. சுமார் இரண்டாயிரத்துக்கும் மேலான கவியரங்க நிகழ்ச்சிகளுக்கு தலைமையேற்று நடத்தியுள்ளதும் குறிப்பிடத்தக்க நிகழ்வுகள் என நினைக்கிறேன்.

பாவேந்தர் நூற்றாண்டு விழாவையொட்டி துபாயில் உள்ள ஷார்ஜாவில் 'விமானக் கவியரங்கம்', வேலூரில் 'பேருந்து கவியரங்கம்', திருவாரூரில் 'இரயில் கவியரங்கம்', அந்தமானில் 'கப்பல் கவியரங்கம்', எட்டுக்குடியில் 'தெப்பக் கவியரங்கம்', கரூரில் 'கட்டில் கவியரங்கம்' நடத்தினேன். இந்தக் கவியரங்குகள் புதுமையானதாக அமைந்தன.

1974 ஆம் ஆண்டு 'சுவரும் சுண்ணாம்பும்', 1976 ஆம் ஆண்டு 'துறைமுகம்', 1984 ஆம் ஆண்டு 'வார்த்தை வாசல்' ஆகிய கவிதைத் தொகுதி நூல்களை வெளியிட்டேன். இவை அல்லாமல் 'மங்கையர்க்கரசி' என்ற திரைப்படத்திற்கு நான் எழுதிய உரையாடல் 1950 ஆம் ஆண்டு நூலாக வெளிவந்தது. இதே போன்று 'தொடாத வாலிபம்', என்ற நாடக நூலும், 'அமுதும் தேனும்' என்ற வரலாற்றுக் கவிதை நூலும், 'நெஞ்சில் நிறுத்துங்கள்' என்ற கட்டுரை நூலும் 'சொன்னார்கள்' என்ற தொகுப்பு

நூலும்; 'வெட்டவெளிச்சம்' என்ற தொகுப்பு நூலும் 'எச்சில் இரவு' என்ற உரைநடை நூலும் என்னுடைய வெளியீடுகளாகும்.

உரைநடை எழுதுகின்ற அனுபவமும் எனக்கு உண்டு என்பதால் கவிதைக்கும் உரைநடைக்கும் உள்ள வேறுபாட்டை உணரமுடிகிறது. உரைநடை சுவர்க் கடிகாரம் போன்றது. சுவர்க் கடிகாரம் பெரியதாயிருக்கும். நாம்தான் ஓடிப் போய் அதில் மணி பார்க்க வேண்டுமே தவிர, அது நம்மோடு வந்து மணி காண்பிக்காது. அதைப் போல அளவில் பெரிதாக இருக்கும் உரைநடை வடிவங்களான சிறுகதை, நெடுங்கதை, கட்டுரை முதலானவை படிக்கும்போது இன்பம் தருபவை, மற்ற நேரத்தில் பெரும்பாலும் அவை பயன்படுவதில்லை. ஆனால் கவிதை அவ்வாறல்ல. கைக்கடிகாரம் மாதிரி அளவில் சிறிதாக அமைந்து சுவர்க் கடிகாரம் தரும் அத்தனை பயன்களையும் தரும். அதுமட்டுமல்ல! கையில் இருந்து கொண்டு எந்த நேரத்திலும் பயன்படும் கைக்கடிகாரம் போல கவிதை நெஞ்சத்திற்குள் எந்த நேரமும் நின்று நிலைத்து இன்பம் தரும்.

இரண்டு வடிவங்களிலும் மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கின்றன. தற்காலத்தில் புதுக்கவிதைகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. இதைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் புதுக்கவிதை என்பது தற்போதைக்கு அது ஒரு குடும்பக் கடிதம் மாதிரி இருக்கிறது. குடும்பக் கடிதம், குடும்பத்தைத் தவிர மற்றவர்களுக்கு சுவைக்காது. எதிர்காலத்தில் அது எப்படி ஆகப்போகிறது என்பது தெரியவில்லை. புதுக்கவிதை என்று அதற்குப் பெயர் சூட்டியிருப்பதனால் மரபுக் கவிதையைப் புதுக்கவிதை அவமானப்படுத்துவது போல் தோன்றுகிறது. வேறு ஒரு பொருத்தமான பெயரை புதுக்கவிதை எழுதுபவர்களும் படிப்பவர்களும் வைத்துக் கொள்ள வேண்டும். சாலை இளந்திரையன் புதுக்கவிதைக்கு **"உரைவீச்சு"** என்று பெயரிட்டிருப்பதை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். புதுக்கவிதை 'பொன்கட்டி' போன்றது. மரபுக் கவிதை 'வளையல்' போன்றது. புதுக்கவிதை சிந்தனைக்கும் கருத்துக்கும் உள்ளது. கருத்துக்கு மட்டுமே புதுக்கவிதை வடிவம். மரபுக் கவிதை, அமைப்புக்கும் கருத்துக்கும் உள்ள வடிவம். அமைப்புக்கு வரும்போது கொஞ்சம் செயற்கையாய் வரும்.

கவிதை என்பது எளிமையாக இருப்பது; ஒழுங்காக இருப்பது; விட்டுப் போனதைச் சொல்லுவது. வடிவத்தில் சரியாக வந்துவிட வேண்டும். அதில் சந்தேகமில்லை. அதில் மற்றவர்கள் சொல்லாததைச் சொல்ல வேண்டும். அல்லது ஒழுங்காகச் சொல்லிவிட்டுப் போய்விட

வேண்டும். திறமையிருந்தால் கூடுதலாகச் சொல். கவிதை என்பது ஒரு அறிவியல். நன்றாகப் படித்தால் எழுதலாம்.

கவியுலகைவிட திரையுலகில் எனக்கு மிகுதியான ஊக்கமிருந்தது. அதற்கேற்ப வாய்ப்பும் கிடைத்தது. என்னுடைய சிறிய வயதிலேயே 'மங்கையர்க்கரசி' படத்திற்கு வசனம் எழுதினேன். நான் 10 திரைப்படங்களுக்கு கதை வசனம் எழுதினேன். அதில் 3 படங்கள்தான் வெளிவந்தன. அமரகவி, ஜெனோவா, புதுவாழ்வு போன்ற படங்களுக்குக் கதை வசனம் எழுதியுள்ளேன். சுமார் 30 படங்களுக்கு பாடல்கள் எழுதும் வாய்ப்பும் கிடைத்தது.

1951இல் 'அமரகவி' என்னும் படத்திற்கு நான் வசனம் எழுதிக் கொண்டிருந்த சமயம். அப்படத்தின் டைரக்டர் திரு எஃப் நாகூர் 'சந்திர வங்கா' என்னும் தெலுங்குப் படத்தைத் தமிழில் 'டப்பிங்' செய்து வந்தார். அவர்தாம், முதன்முதலில் என்னை அப்படத்திற்குப் பாடல் எழுதச் சொன்னவர். எழுதினேன். திரு. டி.ஏ. கல்யாணம் இசையமைக்க, திருமதி. ஜிக்கி பாடினார். ஆனால் படம் வெளிவரவில்லை.

அதற்குப் பிறகு 'அமரகவி'க்குப் பாடல் எழுதினேன். அப்படத்தில் ஏழிசை மன்னர். திரு. எம்.கே. தியாகராஜ பாகவதரும், திருமதி லீலாவும் சேர்ந்து பாடிய

'யானைத் தந்தம் போலவே
பிறை நிலா'

என்ற பாடலுக்கும்,

'வெற்றிலை போடாமலே வாய் சிவந்த
பச்சைப் பசுங்கிளிகள்'

என்னும் விருத்தத்திற்கும், நல்ல பாராட்டும் கிடைத்தது.

பின்னர் புரட்சி நடிகர் எம்.ஜி.ஆரும், திருமதி பி.எஸ். சரோஜாவும் நடித்த 'ஜெனோவா' என்னும் படத்திற்குப் பாடல்கள் எழுதினேன். எழுதப்பெற்ற ஒரு பாடலின் ஏழாவது வரியில்

'பெருந் தீ மீதிலே
ஈ மொய்ப்பதுண்டோ'

என்ற பழையக் கருத்தை நினைவுப்படுத்திவிட்டு. இதற்கு அடுத்த வரியாக

'நீல வான் மீதிலே
நிழல் படுவதுண்டோ?'

என்று எழுதியிருந்தேன். இந்த வரிகளின் கருத்தைப் பெரிதும் பாராட்டியதோடு அதற்கு அன்பளிப்பாக 500 ரூபாயும் தந்தார் அந்தப் படத்தின் அதிபர்கள் ஒருவரான திரு. ஈப்பன் என்பவர். 'நாடோடி மன்னன்' படத்தில் 'மின்னல் கண்டு தாழை மலர்வது போல' என்கிற ஒரு வரி எழுதியிருந்தேன். எம்.ஜி.ஆரே இதைப் படித்துவிட்டு 'அற்புதமான கற்பனை' என்றார். அவரிடம் சொன்னேன். இதை நான் சொல்லவில்லை. குறுந்தொகையில் வந்த அடியின் கருத்தைத்தான் நான் என் நடையில் எழுதியுள்ளேன் என்று. இப்படி இலக்கிய நயத்தை திரைப்படப் பாடல்களில் கொண்டு வர முடியும். 'அமுதும் தேனும் எதற்கு' (தை பிறந்தால் வழி பிறக்கும்) 'ஆடி அடங்கும் வாழ்க்கையடா' (நீர்க்குமிழி) 'விண்ணுக்கு மேலாடை' (நாணல்) 'வசந்த காலம் வருமோ? (மறக்கமுடியுமா) 'கண்ணில் வந்த மின்னல் போல' (நாடோடி மன்னன்) 'நெருங்கி நெருங்கிப் பழகும் போது' (நேற்று இன்று நாளை) இன்னும் இதைப் போல என்னுடைய பல திரை இசைப் பாடல்கள் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன.

என்னைப் பொறுத்த மட்டில் சிறந்த கவிநுட்பம் மிக்க இசைப் பாடல்களை நான் குறைத்து மதிப்பிட விரும்பவில்லை. 'அற்பம் என்பதாக உலகில் எதுவுமே கிடையாது' என்கிறானே ஜான்சன், அவனைப் போலவே எதனையும் தாழ்வாக எண்ணும் நெஞ்சுப் பயிற்சியை விரும்பாதவன் நான். அதனாலேதான் சினிமாப் பாடல்களை குறைத்து மதிப்பிடுவதை நான் சம்மதிப்பதில்லை. திரைப்படப் பாடல்களைப் பற்றிச் சிலர் குறைவாக மதிப்பதில் நியாயம் இருக்கிறதாக நினைக்கின்றனர். இன்றிருக்கும் பாடல்களின் நிலையை ஒட்டி, அவ்வாறு நினைத்தாலும், 'கோப்பைக்குள் புயல் வீசுவது போன்று சிறிய விஷயம் இது' என்று சினிமாப் பாடல்களைப் பற்றித் தீர்மானித்து விடுவது தவறான முடிவாகும்.

மாடுகள் வழக்கத்தால் செக்குச் சுற்றி வருவது போல இருந்து வரும் பாடல்களின் போக்கு மாற வேண்டும். அல்லது தகுதி வாய்ந்தவர்கள் அதனை மாற்ற வேண்டும். வார்த்தைக் கூட்டங்களுக்கும், வெறும் வர்ணனைகளுக்கும் இடங்கொடுப்பதைக் குறைத்து, பாடல்களில் எண்ணங்களைக் கட்டிப் போட வேண்டும். அப்போதுதான் ஓர் இலக்கியப் புத்தகத்தின் மேல், சினிமாப் புத்தகமும் சாய்ந்து கொள்ள சந்தர்ப்பங்களை ஏற்படுத்த வேண்டும். பாட்டெழுதும் திறமை நம்நாட்டுப் பெண்களில் பலருக்கு இருப்பதால், அவர்களையும் இத்துறையில் ஈடுபடச் செய்ய வேண்டும். இதுவரை சுமார் 450 கவிஞர்கள் திரைப்படத்திற்கு பாடல் எழுதியுள்ளனர். காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் **'மதுரை பாஸ்கரதாஸ்'** தான் முதல் திரைப்படப் பாடலாசிரியராக வந்தார். 1934-ஆம் ஆண்டு அந்தக் காலத்திலேயே விதவைத் திருமணம், பொருந்தாத் திருமணம், மதிய உணவுத்திட்டம், சத்துணவுப் பற்றி பாடல்களை எழுதினார்.

பாரதியாரைப் பற்றியும், மிக அருமையாகப் பாடியவர். தொடர்ந்து நல்ல கருத்துகளை மையமாக வைத்து எழுதுவதில் "உடுமலை நாராயண கவி" புதிய சொற்களை உருவாக்கி எழுதுவதில் 'கம்பதாசன்', சிறந்த பல்லவி எழுதுவதில் 'பாபநாசன் சிவன்' என ஒவ்வொரு கவிஞரும் தனித்துவம் பெற்றிருந்தனர். கோவை அய்யாமுத்து 'தமிழ்நாட்டை தமிழன்தான் ஆள வேண்டும். தமிழ்க்கொடிதான் பறக்க வேண்டும்' என்று எழுதினார். அதைத் தொடர்ந்து பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், மருதகாசி, தஞ்சை ராமைய்யாதாஸ் போன்றோர் தமிழ்த்திரை இசைப் பாடல்களில் புதிய வரலாறு படைத்தவர்கள். கண்ணதாசன் மிக நீண்ட காலமாக முடிசூடா மன்னனாக சுமார் 5000 பாடல்களை திரைக்கு எழுதி வரலாற்றை உருவாக்கினார். இத்தகைய சிறந்த மரபு தற்பொழுது சிதைந்து, சிதறி வேற்றுமொழிச் சொற்களுக்கு இடமளித்து வருவது சமுதாயத்தை கீழ்நிலைக்குக் கொண்டு போய் தள்ளிவிடும். சமூகத்தின் நன்மை தீமைகளை மையப்படுத்தி, பண்பாட்டை முன்னிலைப்படுத்தி எழுதுவது கவிஞனின் கட்டாயக் கடமை. இது கவிதை, திரை இசைப் பாடல் ஆகிய இரண்டுக்கும் பொருந்தும். கவிஞன் இந்தக் கடமையிலிருந்து தவறினால் அவனுடைய கவிதை சமூகத்திற்கு கண்களாக இல்லாமல் புண்களாகவே அமைந்து விடும்.

வாய்ப்பு வரும்போது கவிஞர்கள் போராட்டத்தில் இறங்கவும் தயங்கக்கூடாது. புதுக்கம்பன் 'பூமி பாலகதாஸ்' பெருங்கவிஞர் விடுதலைப் போராட்டத்தில் சிறைக்குச் சென்றவர். பாவேந்தர் பல போராட்டங்களில் கலந்து கொண்டு சிறைக்குச் சென்றவர். 1994 ஆம் ஆண்டு கி.ஆ.பெ. விசுவநாதன் தலைமையில் மொழிப் போராட்டத்தில் நானும் கலந்து கொண்டு சிறைக்குச் சென்றேன். இயல்பாக இந்தப் போக்கு கவிதைப் படைக்கும் கவிஞர்களுக்கு வேண்டும். கால் மண்ணில் படாமல் இருப்பவனுக்கு மண்பற்று - நாட்டுப்பற்று - இருக்காது. கட்டிலில் இருப்பவர்களுக்கு மண் மீது உரிமை இல்லை. மண்ணில் நிற்பவனுக்குத்தான் மண் உரிமை. தரையில் படாமல் இருப்பவர்களுக்கு நாடே இல்லை என்பது என் கருத்து. முடிந்தவரையில் கடந்த 10 ஆண்டு காலமாக திரைப்படப் பாடலாசிரியர்களைப் பற்றி குறிப்புகளை சேகரித்து ஆய்வு மேற்கொண்டு 'முன்னும் பின்னும்' என்ற தலைப்பிலான கிட்டத்தட்ட 500 பக்கங்களைக் கொண்ட ஒரு நூலை வெளியிடும் முயற்சியில் உள்ளேன். பொதுவாக என்னைப் பற்றி கவிதை வரிகளில் சொல்லுவதென்றால்

'பாரதி இறந்த ஆண்டிலே பிறந்த நான்
பாரதிதாசனின் பாடலைப் பயின்றதால்
ஒருவா றென்னை உயர்த்திக் கொண்டேன்.
செய்யுள் இலக்கணம் தெரிந்து கொண்டபின்

தடுமாற்றம் இல்லாத் தகுதி பெறலானேன்.
தகுதி இருப்பின் தனித்தி யங்கலாம்
அந்தகுதி என்னிடம் அதிக மிருப்பதால்
தமிழ்க் கவிதை உலகில் தனித்தியங்கு கின்றேன்.

பெரும்பாலும் கவிஞர்கள் பிறரைப்பின் பற்றி
எழுதும் வழக்கம் இங்குண்டே! அந்த
நிழல்வழி வாசலை விட்டு நீங்கி
எழுதும் கவிஞன்நான் இவரையோஅவரையோ
பின்பற்றி எழுதப் பிரியப்படாதவன்
கணக்கைப் போன்றதே கவிதை என்பதால்
கவிதை புனைந்திடக் கற்பனை வேண்டும்
என்னும் கருத்தை நான் ஏற்பதே இல்லை

மடையனாய் இருப்பதில் உள்ள மகிழ்ச்சி
அறிஞனாய் இருப்பதில் இல்லை. ஆதலால்
முட்டாளாய் இருக்கவே முயன்று வருகிறேன்

நானொரு கவிஞன்! அதைவிட
நானொரு நல்லவன் இந்த நாட்டிலே!'

1972 இல் தமிழக அரசு 'கலைமாமணி' பட்டம் வழங்கி என்னை சிறப்பித்தது. 1978 இல் எம்.ஜி.ஆர். தலைமையிலான தமிழக அரசு முதன் முதலில் ஏற்படுத்திய 'பாவேந்தர் பாரதிதாசன் விருது' (ரூ. 10,000 தொகை 4 பவுன் தங்கப்பதக்கம்) எனக்கு அளித்து பாராட்டியது. 1982இல் எனது அறுபது வயது நிறைவையொட்டி அப்போதைய தமிழக நிதியமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் என்னுடைய மணிவிழா நடைபெற்றது. இலக்கிய அன்பர்கள் அப்பொழுது ரூ. 60,000 வழங்கி சிறப்பித்தனர். மேலும் இதே ஆண்டில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் மடத்தில் நடந்த பாரிவள்ளல் விழாவின்போது 'கவியரசர்' பட்டமும், தங்கப் பதக்கமும் எனக்கு வழங்கப்பட்டது. பாவேந்தர் நூற்றாண்டான 1990 இல் டாக்டர் கலைஞர் தலைமையிலான தமிழக அரசின் சார்பாக 'கலைத்துறை வித்தகருக்கான பாரதிதாசன் விருது' எனக்கு வழங்கப்பட்டது. இதே ஆண்டு கேரள மாநிலத்தில் மகாகவி குமரன் ஆசான் அவர்களின் நினைவாக ஏற்படுத்தப்பட்டுள்ள 'குமரன் ஆசான் விருது'ம் எனக்கு வழங்கப்பட்டது. சென்னை, மதுரைப் பல்கலைக் கழகத்திலும் என்னுடைய நூல்கள் பாட நூல்களாக இடம் பெற்றிருக்கின்றன. இப்படிப்பட்ட சிறப்பு நிலைகள் பலவும் 'நானொரு கவிஞன்!' என்பதால் கிடைத்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!



# சிற்பி

'என்னைப் புதியதோர் இன்பம் சுரம் கவர' என்றொரு பாடல் வரியைக் குயில்பாட்டில் சந்தித்திருப்பீர்கள். அப்படியோர் இன்ப அனுபவத்தில் நான் திளைத்த காலம் 1953 முதல் 1956 வரையிலான மூன்றாண்டுக் காலம். திருச்சிராப்பள்ளியில் கல்லூரி மாணவனாக இருந்தபோது முதன்முதலாகப் பாரதி பிரசுராலய வெளியீடான பாரதியார் கவிதைகளை வாங்கினேன். 1953-ம் ஆண்டில் அதன் பக்கங்களுக்குள் பயணம் தொடங்கிய நாளே என் வாழ்நாளில் எந்த நாளையும் விட எனக்கு இனிய நாள்

'சாலப் பலப்பல நற் பகற் கனவில்
தன்னை மறந்த லயம் தன்னிலிருந்தேன்'

சில மாதங்கள் சென்றபின் நான் குடியிருந்த கனவுக் குமிழியைக் கீறிக் கொண்டு பாய்ந்தது ஒரு வாள் முனை - பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி.

'கொலை வாளினை எடடா மிகு
கொடியோர் செயல் அறவே......'

திடுக்கிட வைத்த அதிர்வின் அலைகள் என்னை அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் முதுகலை வகுப்பிற்குள் தூக்கி எறிந்தன.

உருண்டு விழுந்து எழுந்தபோது கலைந்து கிடந்து புத்தகக் குவியலில் தொல்காப்பியத்தையும், கைவல்ய நவநீதத்தையும் ஒதுக்கியபோது கையில் கிடைத்தது புதுமைப்பித்தன் கட்டுரைகள். திருக்குறளைப் போல் அதனை நான் எடுத்துக் கொண்டு திரிந்தபோது 'சாம்ராட்டுகளின் சப்த ஜாலம்' அதனுள்ளிருந்து கேட்டது. அங்கு என்னோடு கைகுலுக்குவதற்காகக் கம்பன் காத்திருந்தான். அந்நாளில் கிடைத்தற்கு அரிதாக இருந்த கம்பனை ஆழ்வார் திருநகரிப் பதிப்பைப் பெரிதும் முயன்று பெற்றுப் பன்முறை பன்முறை படித்துத் திளைத்தேன்.

என்னில் யாரும் எனக்கினியார் இல்லை என இறுமாப்புக் கொள்ள வைத்த இந்த முப்பெரும் கவிஞர்களே.

'சிற்றஞ் சிறுகாலே - என்
சிறு பிஞ்சு விரல் பிடித்து.

அகரமெனக் கவியெழுத வைத்த அன்னையர்கள் - ஆசான்கள்!

முப்பெரும் கவிஞர்கள் என்னை ஆட்கொண்டார்கள் என்ற போதிலும் கற்பனைக்கும் கவின்செறிந்த பாத்திரப்படைப்புக்கும் ஆழ்ந்த தேடுதலுக்கும் கம்பன் பயன்பட்டான். சீர்திருத்தச் சீற்றத்துக்கும் செழிப்பானத் தமிழ்ப் பற்றுக்கும் பாரதிதாசன் உரமும் உணர்வும் தந்தார். ஆனால் என் மனதில் அலை நீளங்களுக்கு இசைவாய், அடியாழங்களில் மூழ்குதற்கு ஒத்த துணையாய், எத்தனைக் காலமாய் உன்னைத் தேடிக் கொண்டிருக்கிறேன் என்று நரேந்திரனைக் கேட்ட பரமஹம்சரின் ஆருயிர்த் தவிப்பாய், என் அகத்துக்குள் என்றும் மாறாத தகதகப்பாய்ப் பாரதி எனக்குள் கரைந்து போனார். என் இளமையின் பிருந்தாவனமாக இருந்த பாரதியே என் முதுமையின் காசியாகவும் திகழ்ந்து கொண்டிருப்பதாய் உணர்கிறேன். 'மழைக்குக் குடை, பசி நேரத்துணவு' என்றன் வாழ்வினுக்குப் பாரதி என்பதே பேருண்மை.

இப்படித்தான், இவர்களால்தான் தமிழ்க்கவிதையின் பால் எனக்கு இறுக்கமான நெருக்கம் உருவாயிற்று.

ஐம்பதுகளில் தொடக்கக்காலம். கேரளத்தில் தமிழறியாப் பெருமானாக இருந்த நான் கல்லூரிக் கல்வி நாடித் தமிழகத்துக்கு வந்து சேர்ந்தேன். 'தமிழ் நாடெங்கும் தடபுடல், அமளி' என்று பாரதிதாசன் செப்பியதற்கொப்பப் பெரியார், அண்ணா, இளம் வயதுக் கலைஞர் ஆகியோரின் பேச்சு மழையில் சொட்டச் சொட்ட நனைந்தேன். அப்போது நாட்டுப்புறப் பாடல், 'ஏடறியேன் எழுத்தறியேன்' என்று பேசுமே. அதுபோன்று 'யாப்பறியேன், சீர் அறியேன், தளை அறியேன்' என்ற நிலையில் இருந்தேன். என் பேராசிரியர் கா. அப்துல் கபூர் ஊட்டிய தமிழுணர்வு (ஜமால் முகமது கல்லூரியில்) மட்டுமே நம்பிக்கையூட்டிய நிலையில் 1953-ல் என் முதற்கவிதை பிறந்தது. 'ஆழ்கடலே கேள்' என்ற அந்தக் கவிதையை ஒரு வரலாற்று அடையாளமாக என் முதல் தொகுதியான 'நிலவுப் பூ' நூலில் இணைத்திருக்கிறேன். என் பேராசிரியரே இக்கவிதையைப் பாராட்டியபோது எனக்குப் பெருமிதமாய் இருந்தது. பண்டையத் தமிழரின் மேன்மையும் இன்றையத் தமிழரின் இழிவும் எடுத்துக் காட்டப்பட்டு, திருந்தாத தமிழகத்தை, முன் பூம்புகாரை அழித்தது போல இன்றும் வந்து அழிக்குமாறு கடலுக்கு விடுத்த அழைப்பே கவிதையின் பொருள். இளமையின் ஆத்திரத்தை மட்டுமே இப்போது நான் அதில் காண்கிறேன்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அப்போது நிலவிய தமிழ்ச் சூழலும், என் ஆசிரியர் கவிஞர் மு. அண்ணாமலையின் நெருக்கமும் புதிதாக யாப்பிலக்கணம் கற்றுக் கொண்ட உற்சாகமும் சில கவிதைகளை எழுதும் தூண்டுதலை வளர்த்தன. ஷெல்லி, கீட்ஸ் கவிதைகளைப் பயின்ற புத்துணர்வும் இதற்குக் காரணமாயிற்று. என்னை ஆசிரியராகவும், மணிவாசகர் நூலகம் ச. மெய்யப்பனைத் துணை ஆசிரியராகவும் கொண்டு 'முத்தமிழ்' என்ற கையெழுத்து மடலை நடத்திய அனுபவமும் கவிதைப் படைப்புக்குக் கிரியா ஊக்கியாக விளங்கியது. ஆயினும் 'சிரித்த முத்துக்கள்' என்ற சிறு காப்பியம் ஒன்றை உருவாக்கியது ஒன்றைத்தான் மாணவப் பருவத்தில் குறிப்பிடத்தக்க என் படைப்பாகக் கூற முடியும். புதுப்புனல் கவிஞர்களாக அன்று அடையாளம் காணப்பட்ட நாணல், திருலோக சீதாராம், ச.து.சு. யோகியார் ஆகியோரையும், பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர்களாக பெரி. சிவனடியான், சாமி. பழனியப்பன் ஆகியோரையும் தொலைவிலிருந்து நான் வியந்து பார்த்த காலம் அது. அப்போதும் ஒரு கவிஞனாகும் நோக்கு எனக்குள் இருந்ததாகக் கூற முடியாது.

1956-ல் சோமசுந்தர பாரதியாரையும், பாரதிதாசனையும் ஒரு சேரக் காணும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. என் கனவுப் பிரதேசக் கதாநாயகரான பாரதியாரின் பள்ளி வயதுத் தோழரையும், இளமைக் காலத்துச் சீடரையும் கண்ட காலத்தில் தமிழ் இலக்கியத்தின் சிகரங்களைத் 'தரிசித்த' புல்லரிப்பு உண்டாயிற்று. என் முதுகலைக் கல்வியின் முடிவும் நெருங்கி இருந்தது. 1958-ல் நான் கல்லூரி ஆசிரியரானேன். இடைப்பட்ட இரண்டாண்டுக் காலத்தை - வேலையில்லாத பட்டதாரியாக இருந்த காலத்தை (21, 22-ம் வயதில்) என் கிராமமான ஆத்துப் பொள்ளாச்சியில் கழித்தேன்.

எனக்கு அப்போது இருபத்தொரு வயது. என்னுடைய கிராமம் இயற்கை எழில் ததும்பும் பகுதியில் அமைந்திருக்கிறது. தூரத்தில் 'நீல முடி தரித்த' மேற்குத் தொடர்ச்சி மலை. ஊரைச் சுற்றி மூன்று திசைகளிலும் வளைந்து வளைந்து செல்லும் வற்றாத ஜீவநதியான ஆழியாறு. சிறியதும் பெரியதுமான பாறைக் குளியல்களுக்கு இடையே செல்லச் சிணுங்கலாய் நதி நகர்ந்து கொண்டிருக்கும். இதனைத் தான் 'ஒரு நீலக் குதூகலம்' என என் கவிதையில் வர்ணித்திருக்கிறேன்.

"கிழக்கில் தொடுவானம் வரை
பச்சைச் சதுரங்கப்

பலகை வயல்கள்
நெளியும் நதியின்
இடுப்புக் குழந்தையாய்
அடம்பிடிக்கும் கரையோர
நாணல் கோணல்கள்
நடுவே ஒரு அத்தி மர இறுமாப்பு" (இது எங்கள் கிராமம்)

வேலையில்லாப் பட்டதாரியான என்னிடம் 'வேண்டு தந்தை விதிப்பினுக்கு அஞ்சி'க் காலையும் நீயே மாலையும் நீயே என்று அந்த ஆற்றங்கரையைச் சரணடைந்தேன். அந்த ஆற்றில் நீலத் திரையில், தெறித்த நுரையில், மணற் கரையில் இயற்கையோடும், மாடு கன்றுகளோடும், காட்டு மலர்களோடும், வயல் வெளியில் பணிபுரியும் கிராமத்துப் பெண்களோடும் நான் நடத்திய மௌன உரையாடல்கள் தாம் என்னைக் கவிஞனாக்கின. இந்த இரண்டு ஆண்டுகளில் எனக்குள் பூப்பெடுத்த கவிதை உணர்வுதான் இன்றுவரை என்னை எழுத வைத்துக் கொண்டிருக்கிறது. நகரத்து நெரிசல்களில் வாழ்க்கை அறைபடுகிற போதும், அந்தக் கிராமத்துப் பச்சையும், ஆழியாற்றின் ஈரமும் என்னைச் செழுமைப்படுத்திக் கொண்டே இருக்கின்றன.

என்னுடைய இலக்கியப் பார்வையைச் செழுமைப்படுத்திய இன்னும் இரண்டு குறிப்பிடத்தக்க சக்திகள் மலையாள மொழிப் பயிற்சியும், மார்க்சியமும் ஆகும். வள்ளத்தோள், சங்ஙம்புழ, வயலார், வைலோப்பிள்ளி ஓ.என்.வி.குருப், சச்சிதானந்தன் ஆகிய மலையாளக் கவிஞர்களைச் சுவைத்துச் சுவைத்துப் படித்ததன் விளைவாகச் சில கவிதை உத்திகளும், சொல்லாக்கங்களும் எனக்குள் படிந்தன. ஜீவாவும், ரகுநாதனும், எஸ். இராமகிருஷ்ணனும் தம் படைப்புகள் வழியே மார்க்சியத்தையும், சமுதாய நோக்கையும் என்னுள் பதித்தனர். இம்மூவரையும் நெருங்கிப் பழகுகிற தோழமையும் எனக்குக் கிடைத்தது. ஜீவா உருவாக்கிய கலை இலக்கியப் பெருமன்றத்தில் பங்குகொண்ட அனுபவங்களும் என்னைப் புதிதாக்கின. நாட்டுப்புற நளினம் நர்த்தமாடும் கே.சி.என். அருணாசலத்தின் 'மாராப்புக் போட்ட மருக்கொழுந்து'ப் பாடல்களின் ஈர்ப்பும் என்னை வளர்த்தது. கிராமத்தில் வசித்த காலம் குறைவென்றாலும் ஒரு நடுத்தர வேளாண்மைக் குடும்பத்துப் பிள்ளையென்பதால் அடிப்படையில் நான் ஒரு நாட்டுப்புறத்தானாகவே உணர்கிறேன்.

1963-ல் என் முதல் கவிதைத் தொகுப்பான 'நிலவுப் பூ' வெளிவந்தது.

'நாட்டுத் திறம் என்னே
நாற்கவியும் முத்தமிழும்
நல்கும் பயன் என்னே
நாவூறிப் போனேன் நான்'

என்று பாரதிதாசன் பாராட்டுரை நல்கியிருந்தார். கண்ணதாசனின் மனந்திறந்த வரவேற்பும் அந்நூலுக்குக் கிடைத்தது. பாரதிதாசனின் தாக்கத்தை அந்நூலில் பல இடங்களில் காணமுடியும்.

எனினும் சில மாறுபட்ட கோணங்களில் மனிதனையும் இயற்கையையும் பார்க்க நான் முற்பட்டிருந்தேன். 'ஓவியன்' என்ற கவிதையில் காட்சி ஊடகமான ஓவியம் ஓசை ஊடகமான இசையைச் சித்திரிக்க முடியாமல் தோற்றதைச் சொல்லி இருக்கிறேன். தமிழ், இயற்கை, காதல் என்ற பழைய வட்டங்களை ஏற்றதோடு, அவற்றைக் கடந்து அறிவியலின் கிரணங்களைச் சில கவிதைகளில் படரவிட்டிருக்கிறேன். 'அன்னையர் இன்றியே ஆய்வு மனைகளில் ஆகும் குழந்தை' என்றும் கூடக் குறிப்பிட்டிருக்கிறேன். விளங்கிக் கொள்ள முடியாத மரணம் பற்றி 'உயிரே உயிரே' என்ற கவிதையில் ஆய்வு செய்ய முயன்றிருக்கிறேன். ஆங்கிலக் கவிதைகளின் மொழிபெயர்ப்புப் பகுதியும் இந்நூலில் உண்டு.

1968-ல் 'சிரித்த முத்துக்கள்' வெளிவந்தது. 'மரபுக் கவிதைகளின் தொடர்ச்சியும் பாரதிதாசனின் தாக்கமும் நெகிழ்ந்து புதுக்கவிதை அறிமுகத்துக்கும் இடம் தந்து புதிய அறிவியல் பார்வையுடன் கவிஞரின் வளர்ச்சித் தொடர்கிறது என்று திறனாய்வாளர் 'பாலா' இந்நூலைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்.

வானம்பாடிப் புதுக்கவிதை இயக்கம் 1971-ல் தொடங்குவதற்கு முன் நான் எழுதிய புதுக் கவிதைகள் இரண்டு இந்நூலில் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

'எழுத்து', 'இலக்கியவட்டம்', இதழ்களோடு எனக்கு ஏற்பட்ட பழக்கமே இதற்குக் காரணம். 'காமக்கறங்கு' என்ற கவிதை க.நா.சு.வின் இலக்கிய வட்டத்தில் வெளி வந்தது. இத்தொகுப்பில் உள்ள 'கூலிக்காரி', 'வாத்தியாரு வேலை' இரண்டும் மிகுந்த வரவேற்புப் பெற்றக் கவிதைகள். 'சிரித்த முத்துக்கள்' என்ற சிறு காவியமும் இந்நூலில் இடம் பெற்றது. தனிமனித வேதனைகளும் சமுதாய வேதனைகளும் மிகுந்த இந்நூல் 'சிரித்த முத்துக்கள்' எனப் பெயரிடப்பட்டது குறிப்பிடத்தக்கது. இந்நூலிலுள்ள 'நான்' கவிதை புரிந்து கொள்ளப்படாத என் சோகத்தை மையப்படுத்துகிறது.

உருவகம், குறியீடு, படிமக் கலையை நோக்கி அடியெடுத்து வைத்த காலக்கட்டத்தில் 1971-ல் 'ஒளிப்பறவை' வெளிவந்தது. புதிய சமுதாயமே 'ஒளிப்பறவை' என்ற குறியீடாய் அமைந்தது. புராணத் தொன்மங்களை நவீனத்துவ நோக்கில் படைக்கிற முயற்சியையும் இத்தொகுப்பில் மேற்கொண்டேன். 'மாயக் கண்ணன் மண்ணில் பிறக்கிறான்', 'அகலிகை இன்றும் காத்திருக்கிறாள்' இரண்டும் இத்தகைய படைப்புகள். என்னை அலைக்கழிக்கும் பெண்ணடிமைத்தனத்துக்கு அகலிகையைக் குறியீடாக்கும் என் பல கவிதைகளுக்கு இங்கு தொடக்கம் செய்தேன். தனிமனிதனின் தவிப்புக்கு 'தளை' என்ற குறியீட்டை அமைத்தேன். அந்த உணர்வே 'தனி மூங்கில்' என்ற மற்றொரு கவிதையாகவும் அமைந்தது. 'மௌனம்' என்ற சின்னஞ்சிறிய கவிதை நான் செறிவாகப் படைத்த குறியீட்டுக் கவிதைகளில் ஒன்று. என்னைத் தமிழனாக அடையாளம் காட்டிய அண்ணாவுக்கு என் ஆத்மார்த்தமான அஞ்சலியை ஒரு கவிதையாக வடித்திருக்கிறேன்.

1976-ல் என் கவிதை வடிவத்திலும் நோக்கிலும் மாபெரும் மாற்றங்களுக்கு உள்ளாயிற்று. வானம்பாடி இயக்கத்துக்கும் பின் எழுந்த இந்நூலில் உள்ள கவிதைகளில் பல வானம்பாடியில் வெளிவந்தவை. சமுதாய மாற்றத்தின் இழைகளால் பின்னப்பட்ட இத்தொகுதியில், 'சர்ப்பயாகம்', 'நாய்க்குடை', 'மதுரை வீரன்', 'ஓ சகுந்தலா', 'சிகரங்கள் பொடியாகும்', 'மௌனத்திரை', 'ரோஷம்' ஆகிய படைப்புக்களை என் சிறந்த கவிதைகளாகக் கருதுகிறேன். நான் எழுதிய தலித் கவிதையாக 'சிகரங்கள் பொடியாகும்' என்ற கவிதையை மதிப்பிடுகிறேன். தாழ்த்தப்பட்ட மக்களின் எழுச்சி கதைக் கவிதையாக உருவாகியிருக்கிறது. படைப்புக்கு அனுபவமே அடிப்படை என்பதை 'மதுரை வீரன்' கவிதை பேசுகின்றது. முற்றத்து மழை நீரில் முச்சூடும் கூழான பச்சைக் களிமண் சிலை 'ஒற்றைக் கணம் ஒருபொழுது வெந்திருந்தால்' என்று வினாவை எழுப்புகிறது இக்கவிதை. கதைக் கவிதைகளை எழுதும் கலையை நான் வளர்த்துக் கொண்டமைக்குச் சிறந்த சான்றுகளை இந்நூலில் காணலாம். என் கவிதைகளை அகம், புறம் எனப் பாகுபாடு செய்தால் என் புறநானூறு 'சர்ப்பயாகம்' நூல்.

கதைக் கவிதையாக எழுதப்பட்ட (முதல்?) தனிப் பெரும் சிறப்புக்குரிய காவியம் 1982-ல் வெளிவந்த என் 'மௌன மயக்கங்கள்' பரத்தைமை நெருப்பில் வெந்து கரிந்த ஒரு மல்லிகையின் கதை. பல நாட்கள் உணர்ச்சியின் விளிம்பில் அமர்ந்தபடி நான் பாத்திரங்களாக மாறி எழுதிய காவியம். 'சிற்பி

ஜெயித்து விட்டார்' என்று கவிஞர் மீரா பாராட்டி எழுதிய காவியம். என் படைப்புகளில் எனக்கு மிகவும் செல்லமான நூல் இது.

1982-லேயே வெளிவந்த என் மற்றொரு கவிதைத் தொகுப்பு புன்னகைக் பூக்கும் பூனைகள்'. பல்வேறு பரிசோதனைகளை இக்கவிதைகளில் நான் செய்து பார்த்திருக்கிறேன். 'சமுதாயச் சிந்தனைகளில் முனை தீட்டியும் அழகுணர்ச்சியில் நவீனம் காட்டியும் படைப்புகளில் எள்ளல் தொனி சிறப்பாக ஆக்கப் பெற்றிருப்பதைக் காணலாம்' என ஒரு திறனாய்வாளரால் மதிப்பீடு செய்யப் பெற்ற நூல் இது. என் கவிதைகளில் எப்போதும் காணப்படும் அறிவியல் 'மனிதம்' என்ற படைப்பாக இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளது. அறிவியல் மனித உணர்வைக் கொன்று விடுமோ என்ற அச்சம் இக்கவிதையில் குமிழிடுகிறது. கடவுளை அறவே கவிதைகளில் ஒதுக்கிவிட்ட நான் கடவுள் பெயரலால் சித்துக்கள் செய்வோரை விமர்சித்தக் கவிதை (அதிசயச் சித்தர்கள்) இந்நூலில் இடம் பெற்றுள்ளது.

மறுபடியும் மறுபடியும் என்னைப் பிடித்தாட்டும் மரணம் பற்றிய சிந்தனைகள் 'மயான சத்தியங்கள்' கவிதையாகிறது. அவ்வாறே என் மனதைச் சித்திரவதை செய்த அகலிகை 'சாபவிமோசனம்' கவிதையின் மறுபதிப்பாகக் காட்சி தருகிறாள். எங்கள் கிராமத்துச் சித்திரமாக 'இது எங்கள் கிராமம்' காட்சித் தருகின்றது. குறுங்கவிதைகள் பெரிதும் எழுதாதவன் நான். ஆனால் 'சம்பள வர்க்கம்' என்ற குறுங்கவிதை ஒன்றை இந்நூலில் தந்திருக்கிறேன்.

"முதல் தேதிச்
சக்கர வர்த்திகள்
மாத நடுவில்
மன நோயாளிகள்
கடைசி வாரத்
தத்துவ ஞானிகள்"

என்பது அக்கவிதை.

என் கவிதைகளில் புறம் (சர்ப்பயாகம்) என்றால் 'அகம்' என்று நான் கருதுகிற நூல் 1990-ல் வெளிவந்த 'சூரிய நிழல்'. அக முகப் பயணத்தை நான் மேற்கொண்டதன் விளைவாக வெளிவந்த கவிதைகள் பல இந்நூலில் இடம் பெற்றுள்ளன. 'கவிதைகளின் அறக்கருத்துகள் தமிழும் அவருக்கும் புதியன' என்று பாலா மதிப்பிடுகிறார்.

பிரபஞ்சமும் மனிதனும் கொண்டிருக்கும் உறவுகளை 'காலம்', 'எங்கெங்கு காணினும்', 'ஹாலிவால் நட்சத்திரத்தோடு', 'காணாமல் போனவன்', 'மூல ஒலி', 'வேகம் வேகம்', 'சூரிய நிழல்' ஆகிய கவிதைகளில் படைத்துக் காட்ட முயன்றிருக்கிறேன். "யாருடைய நிழல் நான்?" என்ற பரிதவிப்பும்

> "கரைந்து கரைந்து காணாமல் போவது
> எங்கும் நிறைவதற்காகவே"

என்ற ஆழ்ந்த பார்வையும் விசுவவெளியின் விந்தைகள் பற்றிய வியப்பும் கொண்ட கவிதைகளை நான் உருவாக்கிய காலம் இது. சுற்றுப்புறச் சூழல் பற்றிய அக்கறையையும் கவிதைகளாக்கி இருக்கிறேன்.

பழைய அகலிகை மீண்டும் என் மனக் கதவு தட்டியதன் விளைவாகப் பிறந்த 'பிராயச்சித்தம்' என்ற தொன்மக்கவிதையும் இத்தொகுப்பில் உண்டு. 'சூரிய நிழல்' என் கவிதைப் பயணத்தில் ஒரு அடையாளக் கல்.

கொஞ்ச நாட்களாக என் அந்தரங்கங்களில் இனம் புரியாத வினாக்கள் எழுந்திருக்கின்றன. 1996-ல் வெளிவந்த 'இறகு' என்ற நூலில் இத்தகைய சில கவிதைகள் வெளிவந்துள்ளன. குகை நடுவினில், சந்தேகம், புதிர், விபரீத விடியல் ஆகிய கவிதைகளைப் படித்தால் இதனை உணரலாம். வரலாறு பற்றிய என் மீள் பார்வையை 'வரலாற்றின் ஆச்சரியக் குறி', 'ஹம்பி' ஆகிய கவிதைகளில் சந்திக்கலாம். இராசராச சோழனின் பெருவுடையார் ஆலயம் பற்றிப் பேசும்போது அதனை உழைப்பை அவமதித்த ஒரு எதேச்சாதிகாரியின் படைப்பாகச் சொல்லுகிறவர்கள் உண்டு. தமிழர் கலைக் கனவு அது என்று இக்கருத்தை மறுதலிக்கிறது என் கவிதை. தமிழ்த் தேசியத்தின் மாகாவியமான சிலம்பில் நான் ஈடுபட்டுப் போன அனுபவங்களைப் 'பரல்'களாக இந்நூலில் தந்திருக்கிறேன். என் சிறந்த கவிதைகளில் ஒன்றாக நான் கருதும் 'இறகு' என்ற கவிதை - இயற்கையும் மனிதனும் கொண்ட நேசத்தைச் செதுக்குகிறது.

1993-ல் வெளிவந்த 'ஆதிரை' என்ற கவிதை நாடகத்தில் கொங்கு நாட்டு வரலாற்றில் வெளிச்சப்படுத்தப்படாத ஒரு பகுதியை மீட்டுருவாக்கம் செய்திருக்கிறேன். வெளிவராத 'மனுஷி' கவிதை நாடகத்துக்குப்பின் இரண்டாவதாக நான் எழுதிய நாடகம் இது. நாடகத் துறையில் இன்னும் துழாவித் தேடுகிற நிலையிலேயே நான் இருக்கிறேன்.

குழந்தைகளுக்காக நிறைய எழுதும் ஆவல் எனக்கு உண்டு. அதன் அடையாளம் என் 'வண்ணப் பூக்கள்' கவிதைக் கொத்து. 'சிற்பி தரும் ஆத்திசூடி' பாரதி, பாரதிதாசன் மரபின் நவீனச் சிந்தனையாக்கமாக நான் படைத்த நூல். இன்னும் சிறுவர் சிறுமியர்க்கு எழுதும் தீராத தாகம் எனக்கு உண்டு.

1971-ல் கோவையில் பிறந்த வானம்பாடி இயக்கத்தில் முழுமையாகப் பங்கு பெற்றவர்களில் நானும் ஒருவன். எழுத்து, நடை, கசடதபற இதழ்களின் வழியே மணிக்கொடிக் காலத்துக்குப்பின் உருவானது புதுக்கவிதை இயக்கம். வசனத்தின் மேலாதிக்கம் என்ற எல்லையைத் தாண்டிக் கட்டற்ற கவிதையாகப் புதுக்கவிதை உருவானபோது கோவைச் சிந்தனையாளர்களும், படைப்பாளிகளும் அதைக் கணக்கில் எடுத்துக் கொண்டார்கள். யாப்பை உடைப்பதற்கு அப்பால், மனக்குரல் உருவாக்கத்துக்கு அப்பால் கவிதைக்கு ஒரு சமுதாயக் களமும் தளமும் உண்டு என்று நாங்கள் கருதினோம். எனவே சமகால வாழ்வியலின் ஏற்ற இறக்கங்களையும், வெற்றி தோல்விகளையும் புதுக்கவிதை பிரதிபலிக்க வேண்டுமெனக் கருதி வானம்பாடி இயக்கத்தைத் தோற்றுவித்தோம். தமிழ்க் கவிதையில் சமகாலத்தன்மை, சிக்கல்களை முதன்மைப்படுத்தல், சமுதாயத்தோடு ஒட்டி நிற்றல் என்பவற்றோடு கலைத்தன்மை குறையாமலும் படைப்புகள் வர வேண்டும் என்று எண்ணினோம். வானம்பாடிப் படைப்பாளியாகவும், சிலகாலம் இதழாசிரியராகவும் நான் பணியாற்றினேன். இன்று, தான்தோன்றியாக விமர்சிக்கப்படுவது போல ரொமாண்டிக் புஷ்பங்களாகவோ, உரத்தகுரல் கூச்சலாகவோ வானம்பாடி அமைந்திருக்கவில்லை. அழகும், அமைதியும், ஆழமும் நிரம்பிய கவிதைகள் பலவற்றைப் படைத்தது வானம்பாடி. இளங்கவிஞர்களுக்கு உந்துதல் தந்தது. வாசகர் வட்டத்தை விசாலமாக்கிற்று. சிற்றிதழ்களுக்கு முன்னோடியாயிற்று. பிற மொழிக் கவிதைகளை அறிமுகம் செய்தது. இந்தப் பேரியக்கத்தில் பங்கு கொண்டமையில் என் கவிதைகளில் அர்த்தமுள்ள மாற்றங்கள் விளைந்திருக்கின்றன. வெவ்வேறு தளங்களில் ஞானி, புவியரசு, சி.ஆர்.ரவீந்தரன் உட்பட நானும் இன்னும் ஆக்கப்பூர்வமாக இயங்கிக் கொண்டிருக்கிறோம். யார் மறுத்தாலும் வானம்பாடி தமிழ்க் கவிதை வரலாற்றில் ஒரு சகாப்தம்தான்.

என்னுடைய கவிதைக் கோட்பாடு யாது?

'நேரே நில் நிமிர்ந்து பார்
நெஞ்சில் பட்டதை
வளமாய் சொல்'

இது தான் என்னுடைய கவிதைக் கோட்பாடு. இன்னும் விளக்கமாய்ச் சொல்வதாயின் 'இக்கால மனிதனின் சிக்கல்களைப் புரிந்து கொள்வதற்கான இடையறாத முயற்சியே என் கவிதை மனிதனையும் மண்ணுலக வாழ்க்கையையும் தொடாத எதுவும் இலக்கியமாக முடியாது.

படிமம், குறியீடு - இவையே புதுக்கவிதை என்று கதையளந்தவர்களை இப்போது காணோம். இவையெல்லாம் ஒரு படைப்பின் உத்திகள், உயிர் அல்ல.

நவீனத்துவம், பின் நவீனத்துவம், இன்னும் தினந்தோறும் பேசப்படும் புதிய நடப்பியல்கள்- இவையெல்லாம் சொல்லும் முறையின் தந்திரங்கள். இவற்றைப்பற்றி ஏதும் அறியும் முன்பே புதுச் சாகசங்கள் வந்து விடுகின்றன. தன்னைப் படைப்பாளி புதுமைப்படுத்திக் கொள்ள முயல்வதை நிச்சயம் வரவேற்கலாம். ஆனால் மேலைச் சோதனைகளின் 'புறந்தோல் போர்த்து - உள்ளே புழு அழுக்கு மூடி' இருப்பது ஏற்கத்தக்கதல்ல. அவர்களைப் படிப்போம் - நாம் சொந்தமாய்ப் படைப்போம் என்பதுதான் என் பார்வை.

பரிசோதனைகளைப் பாராட்டுகிற அதே வேளையில் மூச்சுப் பிடித்துக் கவிதைகளைப் படிக்க வேண்டிய கொடுமைகளை நான் நிராகரிக்கிறேன். 'செத்த உடல் புதைத்துச் சித்திரங்கள் மேலெழுதும்' ஊறுகாய்ப் பானைக் கவிதைப் பாணியும் எனக்கு உவப்பூட்டுவதாயில்லை. சொந்தக் கவிதைகள் எழுதாமல் அன்னிய வாசனைகளுக்கு மயங்கும் நவீனத்துவங்களும் எனக்குச் சம்மதமில்லை.

"நான் மரபின் பிள்ளை - புதுமையின் தோழன்
என் களம் - என் மண்
என் பாத்திரங்கள் என் மனிதர்கள்
என் பின்புலம் தமிழ் இலக்கியம்
மற்றவையும் மற்றவர்களும் எனக்கு
விருந்தினர்கள் மட்டுமே."

என்னுடைய இலக்கிய மரபிலேயே நான் செரித்துக் கொள்ள வேண்டிய சத்துக்கள் நிறைய இருக்கின்றன. சிலப்பதிகார ஆசிரியன் நாட்டுப்புறப் பாடல்களை எடுத்துக் காப்பிய வனப்பை வளமுறுத்திய உத்தியை நாம் இன்னும் கையாளவில்லை. குறள் வெண்பாவிலிருந்து ஒரு புதிய 'ஹைக்கு' வடிவத்தைப் பரிசோதித்துப் பார்க்கவில்லை. கலிங்கத்துப் பரணி புலப்படுத்திய மாயக்காட்சி முறைகளை எடுத்துப் பயன்படுத்த முயலவில்லை. நம்முடைய தமிழ் இசை வடிவங்களைப்

பற்றி நவீன கவிஞர்களுக்கு ஏதும் தெரியாது. நாடகப் பேராசிரியர் இராமானுஜம் நாடக ஆக்கத்துக்குப் பயன்படுத்தியிருக்கிற குறவஞ்சி நுட்பங்களை இங்கே கண்ட கவிஞன் யார்? சங்கப் பாடல்களில் ஆய்ந்து தோய்ந்து கலைக் கூறுகளையும் உத்திகளையும் கண்டறிந்து நவீனப்படுத்தவில்லை. மலையாளக் கவிதைகளில் கண்ணகி மீண்டும் மீண்டும் தொன்மப் படிமமாகக் கையாளப்படுவது போல இந்தப் புதுக் கவிதையாளர்களிடம் தமிழ்த் தொன்மங்கள் இடம் பெற்றதுண்டா? கோயிற் கலைகள், சிற்பங்கள், இவற்றிலிருந்து நம் கவிஞர்கள் அறிந்து கொண்டது என்ன? பொம்மலாட்டம், கரகாட்டம் இவற்றுக்குள் நாம் பாய்ந்ததுண்டா?

வெறும் அன்னியமயமாதலால் அந்நியமாதல்தான் நேர்ந்திருக்கிறது. இவற்றைத் தேடுகிற, கண்டடைகிற முயற்சியில்தான் தமிழ்க் கவிதையின் அடுத்த நவீனப் பாய்ச்சல் இருக்கிறது என்று நான் கருதுகிறேன்.

இந்தத் தேடலைக் கவனமாகச் செய்ய இப்போது நான் கவலை கொண்டிருக்கிறேன்.

என்னுடைய கவிதைகள் பற்றித் திறனாய்ந்து இதுவரை மூன்று நூல்கள் வெளி வந்துள்ளன.

1. சிற்பியின் படைப்புக்கலை
   (கியூரி வெளியீடு, மதுரை) 1993
   (ஆரார் - தே. ஞானசேகரன் தொகுத்தது)

2. சிற்பி - மரபும் புதுமையும்
   (காவ்யா வெளியீடு, 1996
   தே. ஞானசேகரன் - பா. ஆனந்தகுமார் தொகுத்தது)

3. கோபுரத்தில் ஒரு குயில்
   (கோலம் வெளியீடு பொள்ளாச்சி, 1996
   சி. ஆர். ரவீந்திரன்)

பல திறனாய்வுக் கட்டுரைகளும், எம்ஃபில், பிஎச்.டி. ஆய்வேடுகளும் என் கவிதைகளும் என் கவிதைகளைக் குறித்து வெளிவந்த போதிலும் ஆழமும் சாரமும் முழுமையும் போதாது என்பது என் கருத்து.

'காத்திருப்பு. என்ற என் கவிதையில் குறிப்பிட்டுள்ள உணர்வுகளோடு நுட்பமான திறனாய்வுக்கு நான் காத்திருக்கிறேன். பல புதிய படைப்புகளை என் கருவில் தாங்கிக் காத்திருக்கிறேன்.

தண்ணீர் போல்
எளிய என் கவிதைக்கு
அலைகளைச் சிருஷ்டிக்கிற ஆற்றலும்
நுரைகளைப் பிரசவிக்கிற நொய்மையும்
சேர்ந்தே இருப்பது
எனக்குத் தெரியும்

சூரியத் தீண்டலும் சந்திரத் தொடுதலும்
பட்டுத் தெறிக்கும் பிரகாசமன்றி
மாயமான் தளுக்குகள் என்னிடமில்லை
கரையில் இருந்தே
கடலென்று சொல்லிப் போனவர்களும்
கால்வாய் என்று கைகழுவியவர்களும்
இதுவரை எனக்கு
நியாயம் சற்றும் வழங்கவே இல்லை

என் அடிவயிற்றில்
மரபுத் தாமரையின் தொப்பூழ்
என் தீர்த்தக் கரையில்
புதிய பறவைகளின் சங்கீதம்.



# மேத்தா

"காதலின் மோகமும் தமிழின் தாகமும் என்னைக் கவிதை எழுதத் தூண்டின. அப்புறம் இந்தச் சமுதாய அநியாயங்களின் மீது ஏற்பட்ட கோபம் என் கவிதையின் நெற்றியில் இரத்தப் பொட்டு வைத்தது. அதுதான் நாளடைவில் என் கவிதைக்கு மூன்றாம் கண்ணாக முளைக்கத் தொடங்கியது...."

என்னுடைய கவிதையின் வயதைக் கண்டுபிடிப்பது

சூரியனைக் கண்டுபிடிப்பது போல் சுலபமானது

என்னுடைய வயதில் ஓர் ஒன்பது வயதைக் கழித்துக் கொண்டால் - அதுதான் என்னுடைய கவிதையின் வயது.

கவிதா மோகினியை மிகச் சிறு வயதிலேயே காதலித்தவன் நான்.

அந்த பால பருவத்திலேயே என் இதய மேடையில் அந்த அழகியின் நாட்டியம் அரங்கேறத் தொடங்கிவிட்டது.

அவளுடைய அபிநயங்களுக்கு அர்த்தம் கண்டு கொள்கிற முயற்சியாகத்தான் என்னுடைய இத்தனை கால எழுத்தும் அமைந்திருக்கிறது.

**எது என் கவிதை?**

அது - உள்ளுக்குள் ஊற்றெடுத்துப் பொங்கிக் கிளம்புகிற கங்கையின் புறப்பாடு.

எண்ணங்களாகிய சலவைக் கற்களில் எழுந்த தாஜ்மகாலை - எழுத்துக் களத்துக்கு இழுத்து வருகிற வலை.

பேனா என்கிறத் தூண்டிலில் பிடிபடும் மீன்.

ஆர்ப்பரித்துக் குமுறியெழும் சமுதாயத்தின் ஆயுதம்.

என் கவிதைகள் இந்தச் சமூகத்தைப் பார்க்க உங்களுக்கு உதவும் ஜன்னல்கள்.

அந்த ஜன்னல்களின் மூலம்தான் பூமியும் என்னைப் புகைப்படமெடுத்துக் கொள்கிறது.

என் கவிதைகள் என்னையே நான் கண்டுகொள்ள உதவும் கண்ணாடிகள்! சில சமயம் அலைநீரில் நிழலாய் .... சில சமயம் கற்களின் என் சிலை வார்ப்பாய்......

சிலருக்கு அவர்களுடைய கவிதைகள் நகங்கள். எனக்கோ என் கவிதைகள் முகங்கள்.

மனிதர்களின் அடி மனத்தின் உள்ளே அசையாமல் வீற்றிருக்கும் நினைவுகளைக் கூடப் படமெடுக்கக் கூடிய, காமிரா ஒன்று என் கைவசமிருக்கிறது.

என் முதற் கவிதையை எப்போது எழுதினேன்?

நினைவுகளின் அஞ்சறைப் பெட்டியைத் துழாவிப் பார்க்கிறேன்.

நான்காம் வகுப்புப் படித்துக் கொண்டிருக்கும்போதே இந்தப் பள்ளிக்கூடப் பையனுக்கும் கவிதை என்ற பருவ மோகினிக்கும் பழக்கம் ஏற்பட்டுவிட்டது.

பிரமிக்க வைத்துக் கொண்டிருந்த அந்தப் பேரழகியின் சாம்ராஜ்யத்தில் ஒரு பிரஜையாக வேண்டுமென்ற பேராவல் என்னிடம் பிறப்பெடுத்து விட்டது.

அப்போதுதான் - குனிந்த என் பேனாவும் குவிந்த என் கையும் வெள்ளைத்தாள் வீதியில் கோலம் போடத் தொடங்கின.

அந்த வயதிலேயே நான் கவிதை எழுதினேன் என்று இதற்கு அர்த்தமில்லை. அந்த வயதிலேயே கவிதை என்று ஏதோ ஒன்றை எழுதத் தொடங்கிவிட்டேன் என்றுதான் அர்த்தம்.

அவையெல்லாம் கவிதைதானா என்று பரிசீலனை பண்ணிப் பார்ப்பதற்கு - இப்போது அந்தக் காகிதங்கள் என் கைவசம் இல்லை.

என்னையே பத்திரப்படுத்தி வைக்கத் தெரியாத எனக்கு - அந்தப் பழைய காகிதங்களைப் பாதுகாத்து வைத்திருக்க முடியவில்லை.

ஒன்பது வயதில் "கவிதை" எழுதத் தொடங்கியிருந்தாலும், அதற்குப் பின்னும் ஓர் ஒன்பது பத்து வருடங்களுக்குப் பிறகுதான்-

என்னுடைய கவிதை 'வயதுக்கு' வந்தது என்பதை ஒப்புக் கொள்வதுதான், மனசாட்சிக்கு நான் செய்யும் மரியாதையாகும்.

பேனாவைத் தூக்கத் தொடங்கியவுடனேயே பிரளயம் பிறந்ததென்று பேசிக் கொள்கிற பொய்ம்மைகளை - உடம்பில் பட்ட தூசியைப் போல் உதற விரும்புகிறவன் நான்.

அந்தச் சின்ன வயதுகளில் கவிதை என்ற பெயரில் எழுத ஆரம்பித்து எத்தனை எத்தனை கிறுக்கியிருப்பேன்.

ஒரு குருடன் கைத்தடியைப் பிடித்துக் கொண்டு, ஒலிம்பிக் ஓட்டத்தில் கலந்து கொண்டது போல் -

படித்த கவிதைகளின் சந்தத்தையும், சாயலையும் பிடித்துக் கொண்டு ஏராளமான ஞான வாகனங்கள் மோதிக் கொள்ளும் இந்த இலக்கிய வீதியில் - எத்தனை உற்சாகமாகவும், [illegible]ாகவும் ஓடியிருப்பேன்!

கசக்கி எறிந்த காகித[illegible] கிழித்துப் போட்ட கிறுக்கல்களையும் - இப்போது என்னால் கணக்குப் பார்க்க முடியவில்லை.

ஆரம்ப காலத்தின் அசுர முயற்சிகள் என்பதைத் தவிர அவற்றுக்கெல்லாம் தனித்த அடையாளம் எதுவும் இல்லை.

என்னுடைய பேனாக்குழந்தை - நடக்கக் கற்றுக் கொள்ளும் முன்பாக - அந்தத் தாள்களின் பாதையில் தவழ்ந்து பழகியிருக்கிறது அவ்வளவுதான்.

என்னுடைய கால்களின் "முதல் நடை" என்று எதையாவது சொல்ல முடியுமா? அப்படித்தான் என்னுடைய "முதல் கவிதை" என்று - எதையும் சொல்லிவிட இயலாது.

ஆனால் - என்னுடைய வீட்டுக்குள், வீதியில், என் பாதங்கள் தவழ்ந்த பாதைகள் நினைவிருக்கின்றன.

ஒரு புறம் பாரதியும், இன்னொரு புறம் பாரதிதாசனும் என்னுடைய இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு அழைத்துச் சென்ற அந்த பசுமையான நினைவுகள் - வசந்த சொப்பனங்களாய் நெஞ்சில் வலம் வருகின்றன.

என்னில் முதன்மையானது கவிதை என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

ஆனால் - என் முதல் கவிதை எது என்பதற்கு எந்தவித ஆதாரமும் இல்லை.

கூடை கூடையாய் எழுதிக் குவித்த குப்பைகளையெல்லாம், அத்தனை சுலபமாக ஞாபக வீட்டிலிருந்து அப்புறப்படுத்த இயலவில்லை.

ஏராளமான பயிற்சிகளுக்கும் முயற்சிகளுக்கும் பிறகு எழுதப்பட்டு, அச்சுப் பிசகாமல் - அழகாகப் பிரசுரமாகிப் பிரபலமான ஒன்றை "இதுதான் என் முதற் கவிதை" என்று கூறி என் மீது நம்பிக்கை வைத்திருக்கிற வாசகர்களை ஏமாற்றுவது - ஒரு முதல் தரமான மோசடியாகும்!

முதலில் அச்சேறிய கவிதைகளின் முகத்தை வேண்டுமானால் காட்ட முடியும்.

முதன்முதலில் உருவான கவிதையின் முகத்தை - யாரும் - யாருக்கும் - காட்ட முடியாது. ஏனென்றால், அதற்கு முகமே கிடையாது!

எல்லாரும் என்னைக் கேட்பதுண்டு; "உங்கள் கவிதைகளை எப்படி எழுதுகிறீர்கள்?" என்று,

சில சமயங்களில் நானும் என்னையே கேட்டுக் கொள்வதுண்டு "எப்படி எழுதுகிறேன்?" என்று!

எல்லோரையும் போலவே எழுதுகோலில் வெள்ளைத் தாளில்தான் எழுதுகிறேன். சில சமயங்களில் அருகில் யாரையாவது உட்கார வைத்துக் கொண்டு நான் சொல்லுவதை எழுதுமாறு செய்கிறேன். இப்பொழுது - எழுதுகிறவர்கள் அவர்களாகி விடுகிறார்கள். நான் சொல்கிறவனாக மட்டுமே இருக்கிறேன்.

அதனால் எப்படி எழுதுகிறேன் - என்பது கூடப் பொருத்தமற்றதாகத் தோன்றுகிறது. எப்படிப் படைக்கிறேன் என்பது தான் சரியாக இருக்கக் கூடும்.

சட்டென்று உள்ளத்தில் ஒரு சோகமோ உற்சாகமோ - வெள்ளம் மாதிரி என்னைச் சூழ்ந்து கொள்கிறது. அது என்னை அடித்துப் புரட்டிக் கொண்டு செல்கிறது.

சில வார்த்தைகள் - சில கருத்துக்கள் அல்லது கற்பனைகள் அங்கங்கே ஒரு கட்டை மாதிரி, தெப்பம் மாதிரிக் கண் சிமிட்டுகின்றன.

வெள்ளத்தில் மூழ்கிய உள்ளம் அவற்றைப் பிடித்துக் கொள்கிறது.

பின் - நினைவுகளின் நீச்சல்.

அப்போதோ, அடுத்த நாளோ, ஆறு மாதத்திற்குப் பிறகோ - அந்தக் கட்டையே கப்பலாகி விடுகிறது.

வெள்ளத்தில் இழுக்கப்பட்டவன் கப்பலில் பவனி வருகிறேன்.

அந்தக் கப்பலைத்தான் நீங்கள் கவிதை என்கிறீர்கள்.

என் ஜன்னல் வழியே, வெளியிலிருந்து யாரோ எட்டிப் பார்ப்பது போல் இருக்கிறது. கதவைத் திறந்து சட்டென்று கையைப் பிடித்து இழுத்துக் கொள்கிறேன்.

சில சமயங்களில் கதவைத் திறந்து பார்த்தால் யாருமே இருப்பதில்லை.

பிடித்துக் கொள்ள முடியாமல் என் பேனா ஏமாற்றமடைந்து விடுகிறது.

அனுபவமும் கற்பனையும் ஓர் அழகியைப் போல் நெஞ்சில் அசைந்து வருகின்றன.

கம்பீரம் மிகுந்த ஒரு படைப்பாளியின் ஆண்மை அதன் மீது காதல் கொள்கிறது.

இரவோ, பகலோ, தனிமையோ, கூட்டமோ எப்போது, எங்கே என்றில்லாமல் இரண்டும் கட்டித் தழுவிக் கொள்ளும்போது - உருகி - இறுகி ஒன்றோடு ஒன்றாகிக் கலந்து விடும்போது.

இங்கே - உலக இயற்கைக்கு மாறாக, ஆடவனும் கர்ப்பமடைகிறான்.

கவிதைக் குழந்தை பிறக்கிறது.

அதை எடுத்து வைத்துக்கொண்டு நீங்கள் கொஞ்சுவதற்காக, அல்லது கோபிப்பதற்காக நான் ஆடை உடுத்தி அனுப்பி வைக்கிறேன்.

நெஞ்சில் பளிச்சிட்ட மின்னல்கள் சிலவற்றை ஞாபகக் கயிறுகளால் கட்டி வைத்திருக்கிறேன்.

எழுதுகோல் விரல்களால் அவற்றை அவிழ்த்து விடும்போது, நல்ல மின்னல்கள் சில நழுவி விடுகின்றன.

ஒரு சில மின்னல்கள் வார்த்தை நாற்காலிகளில் வசதியாக உட்கார்ந்து கொள்கின்றன.

அவற்றைக் கொஞ்சம் ஒழுங்குபடுத்தும்போது - கவிதை உருவாகிவிடுகிறது.

நாடக மேடையில் ராஜா வேடம் போடுகிறவன் - கிரீடத்தையும் உறைவாளையும் தேடுவது போல் - அலங்கார வார்த்தைகளையும் உவமைகளையும் நான் தேடித் தேடிச் சேகரிப்பதில்லை.

எந்த வேடமும் போட்டுக் கொள்ளாமல் என் கவிதைகள் இயல்பாக எழுந்து வருகின்றன.

உள்ளம் திறந்து நான் உரையாடுகிறேன்.

அதனால்தான் - நீங்கள் - இதயத்தின் மீது எனக்கு இருக்கை போடுகிறீர்கள்!

இந்தக் கவிதைகளுக்குள் தான் நான் பல சமயங்களில் காணாமற் போய் விடுகிறேன்.

"நாவலாசிரியர் மேத்தா வெகு காலமாய் நீ காணவில்லையே எங்கே? என்று சிலர் என்னிடம் கேட்டார்கள். அவன் தன்னுடைய கவிதைகளுக்குள் காணாமற் போய்விட்டான்." என்றேன். 'எப்படிக் கண்டுபிடிப்பது?' என்றார்கள். 'அவனைக் கண்டுபிடித்துக் கொடுக்கிற வேலையையும் அவனுடைய கவிதைகள் தான் செய்ய வேண்டும்'... என்றேன்.

பிரபல நடிகை ஒருவரும் எழுத்துலக அரசகுமாரி என்று நான் அழைக்கிற பிரபல பெண் எழுத்தாளர் ஒருவரும் என்னிடம் "சோழநிலாவுக்குப் பிறகு ஏன் நீங்கள் நாவலே எழுதவில்லை?" என்று கேட்டபோது - இவ்வாறு பதிலுரைத்தேன்;

"பெரிய நாவல் எழுத வேண்டுமென்று திட்டமிட்டுக் கொண்டு உட்காருகிறேன். ஒரு சின்னக் கவிதை வந்து என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் விடுகிறது!"

அன்பு காட்டுகிறவர்களின் பக்கம் தானே மனசு ஓடும்!

அப்புறம் நாவல் எழுதுகிற முயற்சி ஒத்தி வைக்கப்படுகிறது. இப்படியே தள்ளித் தள்ளிப் போய்க் கொண்டிருக்கிறது.'

'சோழ நிலா' எழுதி, ஏறத்தாழ ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு "மகுடநிலா" என்ற புதினத்தை விகடனில் எழுதினேன்.

பாபர் மசூதி இடிக்கப்பட்ட போது - மதக் கலவரங்களில், இந்தியா மதி மயங்கியபோது - 'நதிகள் நனைவதில்லை' என்ற குறு

நாவலும். ஆண்டுக்கணக்கில் "பால்யூ" அவர்கள் வேண்டிக் கொண்டதற்காக "நிலவுக்கும் ஒரு வேலி உண்டு" என்ற குறுநாவலும் எழுதினேன்.

மீண்டும் எப்போது நாவல் எழுதுவீர்கள் என்று இப்போதும் கேட்கிறார்கள். "எப்போது கவிதையை நைஸாக ஏமாற்றிவிட்டு உரைநடை வீட்டுக்குப் போக முடிகிறதோ - அப்போது" என்று அவர்களுக்குப் பதில் சொல்கிறேன்.

கவிதையும் உரைநடையும் சக்களத்திகள் மாதிரி எனக்காகச் சண்டையிட்டுக் கொள்வதைப் பார்க்கிறேன்.

ஒவ்வொரு சமயத்திலும் கவிதையே ஜெயிக்கிறது. உரைநடை ஓர் ஓரத்தில் ஒதுங்கி நின்று கொள்கிறது.

உரிமையோடு கவிதை அதை உதைக்கிறது.

கவிதையின் அடாவடித் தனத்தைப் பார்க்கும்போது - அதன் கன்னத்தில் ஓங்கி அறைய வேண்டும் போல் சமயத்தில் தோன்றுகிறது.

அப்படி ஒரு தடவை அறைந்தபோது - பளீரென்று என்னுடைய கன்னம்தான் வலித்தது.

அப்புறம் தான் தெரிந்தது - கவிதையும் நானும் வேறு வேறல்ல என்பது!

கவிதைத் தேரை நானொன்றும் இழுத்து வரவில்லை. இதுவரை இந்தக் கவிதைத் தேர்தான் வாழ்க்கைப் பாதையில் என்னை இழுத்து வந்திருக்கிறது.

இந்தக் கவிதை மட்டும் எனக்குக் கிடைக்காமல் இருந்திருந்தால், நான் என்னையே இழந்திருப்பேன். பல பேர் "உங்கள் கவிதை எங்களைப் பைத்தியமாக்கிவிட்டது" என்று எனக்கு எழுதுவதுண்டு.

நான் கவிதை எழுதுகிறவனாக மட்டும் இல்லாமலிருந்திருந்தால் - வாழ்வின் சுமைகளில் நானே ஒரு பைத்தியமாகியிருப்பேன் என்பது அவர்களுக்குத் தெரியாது.

மற்றவர்களைப் பைத்தியமாக்கும் என் கவிதைதான் - எனக்கு வைத்தியமாகிறது என்கிற மர்மத்தை உங்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அது வேறு பலருக்கும் வைத்தியமாகிறது என்பதை அறிந்து கொள்கிற போதுதான் எனக்கே ஒரு பெருமிதம் ஏற்படுகிறது!

சென்னையைச் சேர்ந்த ஒரு கன்னிப் பெண்! இன்னதென்று அறியாத சின்ன வயதிலேயே தன்னை இழந்து விட்டவள்! 'கெட்டுப் போனவள்' என்று பெற்ற தாயினாலேயே பட்டம் கட்டப்பட்ட பரிதாபத்துக்குரியவள்.

அந்தப் பெண் ஒருமுறை எனக்கு எழுதியிருந்தாள்: "அம்மா, அப்பா, அண்ணன், தங்கை - அனைவரும் தராத ஆறுதலை உங்கள் கவிதைகள் எனக்குத் தருகின்றன."

ஒண்டிப்புதூரில் ஓர் இளைஞர். நிரபராதியான அவர் மீது பொய் வழக்குப் போடப்பட்டு, வாழ்க்கை வெறுத்து அவர் விரக்தியடைந்திருந்தார். 'வெளிச்சம் வெளியே இல்லை' என்ற என் கவிதையை ஆனந்த விகடன் இதழில் வாசித்து விட்டு "தைரியம் என்னுள் ஊற்றெடுத்தது. இனி நிமிர்ந்து நிற்பேன். உலகம் என் முன் தூசு" என்று அந்தப் பத்திரிகைக்குக் கடிதம் எழுதியிருந்தார்.

நெஞ்சை நிமிர வைக்கும் இத்தகைய நிகழ்ச்சிகளைப் பட்டியல் போட்டால் - அது நீண்டு கொண்டே போகும்.

இவை தான் ..... இவை போன்றவைதான் ....... என் கவிதை ..... என் வாழ்க்கைக்குத் தேடிக் கொடுத்த மகத்துவம் என்று நான் உணர்கிறேன்.

விழுகிறபோதெல்லாம் மறுபடி எழுகிறேன்! கவிதை என்பது என்னைக் கசக்கிப் பிழிந்த நினைவுகளின் நீரோட்டம்!

சில சமயங்களில் - கவிதை எனக்குப் பைத்தியம் பிடிக்காமல் காப்பாற்றியிருக்கிறது.

சில சமயங்களில் - உயரங்களுக்குப் போகவிடாமல் ஒரு கற்பனை மயக்கத்திலேயே என்னை உட்கார வைத்திருக்கிறது.

கவிதை எனக்குக் கிடைத்த தண்டனையா, பரிசா என்பதைத் தெளிவாக இன்னும் தீர்மானிக்க முடியவில்லை.

எதுவாயினும் - கவிதையில்தான் என் வாசம்!

அதுதான் என் சுவாசம்!



# தமிழன்பன்

ஒரு கவிஞன் தன்னைத் தானே மதிப்பீடு செய்து வெளிப்படுத்துவதன் மூலம் தனக்குக் கவிதை உலகத்தில் இருக்கக் கூடிய அனுபவத்தை எடுத்துச் சொல்லலாம். ஆனால் கவிஞனே விமர்சகனாகி என்னுடைய கவிதைகள் இந்த வகையில் எல்லாம் மற்றவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் உயர்வாக இருக்கும். சமநிலையில் இருக்கும் என்றெல்லாம் சொல்வது கவிஞனுக்கு அவ்வளவு ஏற்புடைய வேலையில்லை. கவிஞனுக்கு எழுதுவதுதான் வேலை. ஆனால் இந்த நூற்றாண்டில் கவிஞர்களே மிகப்பெரிய விமர்சகர்களாக இருக்கிறார்கள். **டி.எஸ்.எலியட்** மிகப் பெரிய கவிஞன். ஆனால் அதே சமயத்தில் மிகப் பெரிய விமர்சகன். அதே போல **எஸ்ரா பவுண்ட்** மிகப் பெரிய கவிஞன். மிகப்பெரிய விமர்சகன். உலகத்தின் பல பகுதிகளிலேயும் இப்பொழுது கவிஞர்கள் விமர்சகர்களாகவும் விளங்கி வருவதைப் பார்க்கிறோம். ஒரு காலத்தில் கவிஞன் கவிதை எழுதுவதோடு சரி. கவிதையை விமர்சனம் செய்ய மாட்டான். கவிதையை எப்படி எழுதினீர்கள் என்று கவிஞர்களைக் கூப்பிட்டுக் கேட்டால் அவன் என்ன விளக்குவான்? ஒரு கட்டிடத்தைக் கட்டியது போல விளக்கமாக இப்படியெல்லாம் செங்கல் வாங்கினோம். மண் வாங்கினோம். இப்படியெல்லாம் மாமூல் கொடுத்தோம். தொல்லைப்பட்டோம் என்று கட்டிடம் கட்டுகிறவன் சொல்லுவது போல ஒரு கவிஞன் கவிதையைக் கட்டி முடித்தது பற்றிச் சொல்லிவிட முடியுமா? என்றொரு கேள்வி எழுகிறது.

ஆனால், கவிஞன் தன் கவிதைக்குள் இருக்கிறான். கவிதைக்குள் இருக்கிறபோது கவிஞனும் கவிதையும் வேறு வேறாக இருப்பதில்லை. 'நானும் என் கவிதையும்' என்று சொன்னால், தமிழன்பன் கவிதைக்குள் தமிழன்பன் இருப்பான். ஒரு முறை **வால்ட்விட்மன்** எழுதினான் 'இது நூலல்ல, இதைத் தொடுகிறவன் எழுதியவனையே தொடுகிறான்' என்று. எழுதியவனும் எழுதப்பட்டவையும் வெவ்வேறாக இல்லாமலிருப்பதனாலே, எழுதியவன் எழுதிய படைப்பாகவும் மாறிவிடுகிறான் என்று சொல்லலாம். எனக்குக் கவிதை எழுதுவது ஏறத்தாழ நாற்பது ஆண்டுகாலப் பயிற்சி என்று சொல்லலாம். தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளிகளில், படிக்கிற காலத்திலேயே விளையாட்டாகப் பாட்டெழுதுவது என்ற தன்மை என்னிடத்திலே உண்டு.

நான் மிகச் சின்னஞ்சிறுவனாக இருந்த போதுதான் 'நாம் இருவர்' படம் வெளிவந்தது. அதைப் பார்த்துவிட்டு அதில் வருகிற ஒரு பாட்டின் மெட்டில் பாட்டெழுதிய ஞாபகம் இருக்கிறது. "காலை நேரம் அங்கே! காபி தோசை ஆகுது அங்கே! நெஞ்சையள்ளும் தோசை! கொஞ்சம் எழில் சட்னி!" என்றெல்லாம் அந்த அறியாப் பருவத்திலேயே ஏதோ எழுதுகிற பழக்கம் ஏற்பட்டுவிட்டது. ஆனால் எனக்கு இந்தக் கவிதையைத் தொடுவதற்கு முன்பாகக் கவிதையைப் பற்றி என் கருத்துப் பின்னணியைப் பற்றிச் சொல்லலாம்.

என்னுடைய அப்பா பக்திமான்; அம்மாவும் மிகவும் பக்தியுள்ளவர். என்னுடைய தாத்தா பெரிய தமிழ்ப்புலவர். என் தாத்தாவிடத்தில் எச்.ஏ.பாப்லி என்ற ஆங்கிலேயர் தமிழ் கற்றார். சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு, கர்நாடக இசைக்குப் பாடத்திட்டத்தை வகுத்துக் கொடுத்தவர் எச்.ஏ.பாப்லி. அவர் என்னுடைய தாத்தாவிடத்திலே வந்து இராமாயணம் பாடம் கேட்டார். அந்தக் காலத்தில் அவர் கிறித்துவத்திற்கு மாற்ற முயற்சி எல்லாம் செய்தார். ஆனால் என் தாத்தா அதற்கு இசையவில்லை. என் தாத்தாவின் புலமையைப் பற்றி என்னால் கேள்விப்பட முடிந்ததே தவிர என்னால் நேரடியாகப் பழகி அறிய முடியவில்லை. எனது தாத்தா, என் தந்தை என்னைவிடச் சிறியவனாக இருந்தபோதே இறந்துவிட்டார். ஆனால் தாத்தா படித்த புத்தகங்களெல்லாம் வீட்டில் இன்னும் இருக்கின்றன, கரையானுக்கு இரையானதுபோக என்னிடத்தில் உள்ள கம்பராமாயணம், திருவிளையாடற்புராணம், பழனித் திருவாயிரம், அரிச்சந்திரபுராணம், அஷ்ட பிரபந்தம், நிகண்டு இவையெல்லாம் என் தாத்தாவினுடையவை தாம். என் தந்தையினுடைய அளவு கடந்த பக்தி என்னை பக்திக்கு எதிராக மாற்றியது.

எல்லாம் ஆண்டவன் பார்த்துக் கொள்வான் என்ற கோட்பாடு உடையவர் அவர். நேரம் வருகிறபோது எல்லாம் நடக்கும் என்று சொல்பவர். ஆனால் குடும்பச் சூழ்நிலையில் இந்த மனப்பான்மை, பழமையின் மீது நம்பிக்கை இவையெல்லாம் என்னை எதிர்மறையில் கொண்டுபோய் விட்ட காரணத்தால் பெரியாருடைய புத்தகங்கள், அண்ணாவினுடைய 'ஏ.... தாழ்ந்த தமிழகமே! பாரதிதாசனுடைய இசையமுது, அழகின் சிரிப்பு இவைதாம் நான் மிகச் சின்னஞ்சிறு வயதிலே படித்த நூல்கள். அதனுடைய தொடர்ச்சியாக வந்தபோது என் தந்தைகூட, இந்த 'சு'னா, 'மா'னா பசங்களோட சேர்ந்து கெட்டுப் போய்விடக் கூடாது என்று சொல்வார். ஆனால் எப்படியோ அந்தக் கருத்து ஆழமாக அழுத்தமாக அகலாதபடி என் மனதில் படிந்தது. அதற்கு ஏற்றபடி தமிழ்க் கல்வி கற்பதற்கு நான் தஞ்சைக்குச் சென்றேன். பெரும்பாலும் தமிழ்க்

கல்விக்கு உரிய இடங்கள் மடங்களாகவே இருக்கும். திருவாவடுதுறை, தருமபுரம், பேரூர் போன்ற ஆதீனங்கள் தமிழ்க் கல்லூரிகள் நடத்தின. நான் தமிழ் உணர்வுச் சூழ்நிலைமிக்க கரந்தைப் புலவர் கல்லூரியில் நான் சேர்ந்தேன். கரந்தைப் புலவர் கல்லூரி சுதந்திரமான எண்ணத்திற்கு இடந்தரும் கல்லூரிப். பேராசிரியர் நா.இ. ராமநாதன் போன்ற மாணவர்களைச் சுதந்திரமாகச் சிந்திக்க விடுவதில் பிழையில்லை என்ற கருத்துடைய பேராசிரியர்களிடம் தமிழ் பயின்றேன். 1955-ல் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனை நேரடியாகச் சந்திக்கின்ற வாய்ப்பினைப் பெற்றேன்.

பாரதிதாசன் கல்லூரிக்கு வந்தபோது நான் அவருக்கு ஓர் அணுக்கத் தொண்டனாக அமர்த்தப்பட்டேன். பாரதிதாசனுடைய பக்கத்திலேயே இருந்து அவருடைய தன்மைகளையெல்லாம் பார்க்கிற வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. பாரதிதாசன் கவிதைகள் இன்னும் கொஞ்சம் கூடுதலாக, திராவிட இயக்கத்தின் பக்கம் என்னை இழுத்தது. இதன் ஊடாகவே என்னுள் சோசலிசக் கருத்துக்கள் விழுந்து வளர்வதற்கான அடிப்படைச் சம்பவங்கள் நிகழ்ந்தன. நான் உயர்நிலைப் பள்ளியில் படிக்கிறபோதே எங்கள் ஊரில் சோசலிஸ்ட் கட்சிக் கூட்டத்தில் 'அசோக் மேத்தா'வும் 'ஜெயப்பிரகாஷ் நாராயணனு'ம் பேசினார்கள். ஏழையைப் பற்றியும், மக்கள் படுகிற இன்னல்கள் பற்றியும், சுரண்டலைப் பற்றியும் அவர்கள் பேசிய பேச்சு என்னைக் கவர்ந்தது. அப்போது பள்ளிக்கூடத்தில் பத்தாவது படித்துக் கொண்டிருந்த நான் விடுமுறை வேண்டி எழுதுகிறபோது உண்மையை எழுதினேன். அடுத்தநாள் தலைமை ஆசிரியர் கூப்பிட்டுத் தனியாக விசாரித்தார். உனக்கென்ன ஜெயப்பிரகாஷ் நாராயணன் பேச்சுக் கேட்கிற அளவுக்கு அரசியல்?" ஆனால் என்னுள் அந்தக் கருத்துக்களும் ஒரு பக்கம் வளர்ந்தன. 1960 களின் ஆரம்பத்தில் 'அகில இந்திய சோசலிஸ்ட் கட்சி மகாநாடு' சென்னிமலையில் நடந்தது. 'இராம் மனோகர் லோகியா' வந்திருந்தார். இராம் மனோகர் லோகியா என்னுடைய மிக நெருக்கமான நண்பர் வீட்டில் தங்கியிருந்தார். அப்போது. பின்னாளில் நெருக்கடிக் காலத்தில் கொடுமைக்குள்ளான ஸ்நேகலதா அம்மையாரும் வந்திருந்தார். அவரோடு மூன்று நாள் நான் பழக நேர்ந்தது. திராவிட இயக்கத்தினுடைய கருத்து, சோசலிச ரீதியாக மனிதனைப் பொருளாதார ரீதியில் விடுவிக்க வேண்டும் என்ற தத்துவப்போக்கு ஆகிய இந்த இரண்டு அடிப்படையில் வளர்ந்தேன். இதில் பின்னடைவு என்பதே எப்போதும் கிடையாது.

இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடந்தபோது நான் ஈரோட்டில் தமிழாசிரியராகப் பணியாற்றினேன். அப்போது என்னுடைய அறையில் வைத்துத்தான் போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் இந்தி எதிர்ப்புத்

தட்டிகளெல்லாம் எழுதினர். அப்போது பன்னீர் செல்வம் பூங்காப் பக்கம் தடியடி நடந்து கொண்டிருந்தபோது நான் மாணவர்களை நோக்கிப் போனேன். என்னை மாணவர்கள் விடாமல் பிடித்துக் கொண்டு நீங்கள் வரவேண்டாம். நாங்கள் பார்த்துக் கொள்கிறோம் என்று அறைக்குத் தள்ளிக் கொண்டு போய்விட்டார்கள். எனக்கு உறைப்பான இந்தி எதிர்ப்பு எண்ணமும் தமிழுடைய பெருமையை யார் குறைத்துச் சொன்னாலும் ஏற்றுக் கொள்ள முடியாத எண்ணமும் ஏற்பட்டன.

ஈரோட்டில் நான் பணியாற்றிக் கொண்டிருந்த இசுலாமிய உயர்நிலைப் பள்ளியில் ஒருமுறை கோவை மாவட்டத்தினுடைய மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. பாஸ்கரத் தொண்டைமான் வந்து பேசினார். எங்கள் பள்ளியில் திருக்குறளைத் தான் வாழ்த்துப் பாடலாகப் பாடுவோம். அப்போதும் திருக்குறளின் முதலதிகாரத்தைச் சொல்லி தொடங்கி வைத்தோம். பாஸ்கரத் தொண்டைமான் பேசும்போது, 'கடவுளை வணங்குகிறேன்' என்று இதில் ஒன்றுமே கிடையாது இதை ஏன் கடவுள் வாழ்த்தாகப் பாடுகிறீர்கள்! கம்பனுடைய 'உலகம் யாவையும் தாமுளவாக்கலும்' என்றப் பாடலைப் பாடினால் 'தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே' என்று வருகிறது, கடவுள் தன்மையெல்லாம் அதில் உண்டு என்று சொன்னார். சொல்லிவிட்டு சிலப்பதிகாரக் கதையையும் கொஞ்சம் கேலி செய்தார். நான் எப்போதும் நன்றியுரை சொன்னால் 'பளிச்' சென்று இருக்கிற உண்மையைச் சொல்லிவிடுவேன். பயப்படுகிற வழக்கம் கிடையாது. அன்றைக்கு நான் தொண்டைமானைக் கடுமையாகத் தாக்கிப் பேசினேன். தலைமைத் தாங்கிய மீனாட்சி சுந்தரனார், 'பெரியவர்.... அவர், வேண்டாம்பா, விட்டுவிடு' என்று சொன்னார்.

அதற்குப் பிறகு பாஸ்கரத் தொண்டைமான் விழாமுடிந்து போகிறபோது 'யாரந்தத் தமிழாசிரியர்' என்று கேட்டார். பையன் இங்கேயே படித்து வளர்ந்தவன், விஷயமுள்ளவன் என்று மீனாட்சி சுந்தரனார் கூறிய பிறகு சமாதானம் ஆனார். அவருடைய தம்பி தொ.மு.சி. ரகுநாதனைப் பற்றி பிறகு என்னிடத்தில் பேசிக் கொண்டு புகைவண்டி நிலையம் வரை அழைத்துக்கொண்டுப் போனார். இப்படிப்பட்டச் சூழல்கள் எல்லாம் சேர்ந்து தான் எனக்கு கவிதை உருவாக்கத்திற்கு அடிப்படையாக அமைந்தன. புலவர் கல்லூரியில் படித்ததன் விளைவாக யாப்பிலக்கணமெல்லாம் தெளிவாகி மரபு வழியாகக் கவிதை எழுதுவது கைகூடியது. மரபு வழியாக எழுதிவந்தபோது கல்லூரிக் கவிதைப் போட்டி, மாணவர் மன்றப் போட்டி இவைகளில் எல்லாம் கலந்து கொண்டு, தொடர்ந்து பல பரிசுகளைப் பெற்று வந்தேன். இந்தச் சூழ்நிலையில் எல்லாவிதக் கவிதையும் எழுத ஆசை வந்தது. திருப்புகழ் சந்தத்தில்

எல்லாம் பாட்டு எழுதினேன். பாரதிதாசன் 'குயில்' ஏட்டில் கூட அப்படிப்பட்ட திருப்புகழ்ச் சந்தப்பாட்டு வெளிவந்திருக்கிறது. எல்லாவித முயற்சியும் செய்து பார்த்தேன். அப்போது கவிதையில் இரண்டு போக்குகள் இருந்தன. ஒன்று பத்திரிகைகளில் எழுதுவது. இன்னொன்று கவியரங்குகளில் எழுதுவது. அறுபதுகளில் நடந்த கவியரங்குகளில் நிறைய சிலேடைகளைப் புகுத்திச் சரஞ்சரமாக தொடுப்பது வழக்கம். என்னுடைய முதல் தொகுதி 'தமிழன்பன் கவிதைகள்' என்ற புத்தகத்தைப் பார்த்தால் இந்தக் குணம் இருக்கும். அருவெறுக்கத்தக்க அளவில் கூட இருக்கும். "மாதருக்குக் கொண்டிருக்கும் மாதருக்கு மணவாளன் எடுபிடியாள், மாதுறவு சரியாக அமையாவிட்டால் மாதுறவு பூணுவதன்றி வழியுமுண்டோ." என்றெல்லாம் எழுதினேன்.

சிலேடைகளை அரங்கம் வரவேற்கும். அரங்கம் சில வேளைகளில் கவிதையைக் கெடுக்க வேண்டும் என்று முடிவு பண்ணிவிட்டால் கவிஞனும் சேர்ந்து கவிதையைக் கெடுத்து விடுவான். அப்படி ஒரு காலகட்டம் அறுபதுகளுக்குப் பிறகு எழுபதுகளில் கவிதையில் 'வானம்பாடி' இயக்கம் தோன்றியது. அதற்கு முன் பார்த்தால் 'மணிக்கொடி'க் காலம், 'எழுத்து'க் காலம் - ஈழத்துத் தமிழறிஞர் கலாநிதி கைலாசபதி இந்த மூன்று காலங்களைச் சொல்லுவார்., கைலாசபதிக்கும் புதுக்கவிதை மீது எப்போதும் விருப்பம் கிடையாது. முதன்முதலாக எனது 'தோணி வருகிறது' என்ற நூலுக்கு முன்னுரை எழுதும்போதுதான் விமர்சகராகப் புதுக்கவிதைக்கு உள்ளே வருகிறார். கவிதை என்றால் இலக்கணம் இருக்க வேண்டும் என்று அவர் நினைப்பார். ஆனால் புதுக்கவிதையை முழு மனதோடு இல்லையானாலும், வரவேற்க முடியாமல் இருக்க முடியாது என்ற நிலையில் 'தோணி வருகிறது' என்ற என்னுடைய நூலுக்கு இருபத்து இரண்டு பக்கம் முன்னுரை எழுதி அனுப்பினார். அந்தத் தொகுதிக்கு முன்னுரை எழுதுகிறபோது கைலாசபதிக்கும் எனக்கும் நேரிடையாகத் தொடர்பு கிடையாது. கடிதத் தொடர்புதான். கலாநிதி கைலாசபதி இங்கு வந்திருந்தபோது சிலபேர், 'நீங்கள் எப்படித் தமிழன்பனுக்கு முன்னுரைத் தரலாம். அவர் திராவிட இயக்கத்தைச் சார்ந்தவர்' என்று கூறினார்கள்.

ஆனால் கலாநிதி கைலாசபதி ஜனநாயகத் தன்மையுள்ள மார்க்சீயவாதி. ஜனநாயகமாகத் தழுவிக் கொள்ள வேண்டியதைத் தழுவிக் கொள்ள நினைக்கிறவர். எழுபதுகளின் தொடக்க காலத்தில், இங்கே 'கார்க்கி' பத்திரிகையை இளவேனில் நடத்திக் கொண்டிருந்தார். 'கார்க்கி' பத்திரிகையில் நானும் இன்குலாபும் கவிதைகள் எழுதினோம். அந்தக் சூழல்தான் திராவிட இயக்கத்தினுடைய மையத்திலிருந்து கொஞ்சம்

நகர்த்தி வேறு பக்கமாக என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்தது என்று சொல்லலாம். எழுபதுகளின் தொடக்கத்தில் அப்படி ஒரு நிலை ஏன் வந்தது என்று சொன்னால், உலகம் முழுவதும் இனப்பிரச்சனையை விட வர்க்கப் பிரச்சனை மிகவும் முக்கியமானது என்ற சிந்தனை வளர்ந்து இருந்தது. ஈழப்பிரச்சனையைக் கூட அப்போது அப்படித்தான் பார்த்தோம். ஈழப்பிரச்சனையைப் பற்றித் தங்கதுரை பேசுகிறபோது இலங்கையில் நமக்குச் சிங்களவர் எதிரிகள் அல்லர். சிங்களவர்களில் ஆளுகிறவர்கள், அதிகார வர்க்கத்தில் உள்ள முதலாளிகள்தான், எதிரிகளே தவிர, உழைக்கும் சிங்களவர்களல்ல. பாட்டாளி வர்க்கச் சிங்களவர்களை இணைத்துக் கொண்டு தமிழர்கள் வர்க்க விடுதலைக்காகப் போராடலாம் என்ற கருத்துருவை முன்வைத்தார். அப்போது கொஞ்சம் தேசிய இனப்பிரச்சனை பின்னுக்குத் தள்ளப்பட்டு வர்க்கப் பிரச்சனை முன்னால் வந்தது. இந்த வர்க்கப் பிரச்சனையை மையப்படுத்தி நடந்ததுதான் 'வானம்பாடி'. ஆனால் சமீபத்தில் 'கனல் மைந்தன்'ாக மாறியிருக்கும் 'அக்கினி புத்திரன்' தேசிய இனப் பிரச்சனையை வானம்பாடியில் வைத்தோம் என்றார். இக்கருத்து எனக்கு உடன்பாடு இல்லை. காரணம் வானம்பாடியில் தமிழினத்தின் மேன்மையை, தமிழின் சிறப்பைச் சொல்வதாக ஒரு கவிதைகூடக் கிடையாது. தமிழ், தமிழன் என்ற அடையாளத்தை விட்டுவிட்டு உலகம் முழுவதுமான மானுட விடுதலைக்காகக் குரல் கொடுப்பது என்பதுதான் வானம்பாடி பத்திரிகையின் நோக்கம். அதே நோக்கத்தில்தான் 'கார்க்கி' பத்திரிகையை இளவேனில் கொண்டு வந்தார். அதில் நானும் கவிஞர் இன்குலாபும் தொடர்ந்து எழுதினோம். அதன் ஊடாகவே 'மனிதன்' என்றொரு பத்திரிகை வந்தது. கோவை. ஈஸ்வரன் நடத்தினார். 'மனிதன்' பத்திரிகையில் எழுத வேண்டாம் என்று சிலர் எங்களுக்கு எச்சரிக்கை செய்தார்கள். ஏனென்றால் அது ஒரு தலைமறைவுப் பத்திரிகை என்றார்கள். அதில் நானும் கவிஞர் இன்குலாபும் தொடர்ந்து எழுதினோம். அப்போது நான் நாமக்கல்லுக்கு ஒரு திருமணத்திற்காகப் போயிருந்த போது கூட என்னிடத்தில் சொன்னார்கள். இங்கு இருக்கிற மாவட்ட ஆட்சித்தலைவர் உங்களுடைய கவிதைகளைப் படிக்கிறார். அவர் மேசைமேல் உங்களுடைய நூல்கள் இருக்கின்றன என்றார்கள். 'ஏன் நீங்களும் இன்குலாபும் இப்படி வெறியெடுத்தமாதிரி அலைகிறீர்கள்' என நண்பர்கள் கேட்கிறார்கள் என்று அக்கினிபுத்திரன் கடிதம் கூட எழுதினார். 'மனிதன்' பத்திரிகையில் எழுதிய காலம் நெருக்கடி காலம், எழுபத்து ஐந்தை ஒட்டி வந்தது. நெருக்கடிகாலம் வந்தபோதுதான் கவிஞர்களுக்கு எல்லாம் சோதனைக் குழாயில் போட்டு பார்க்கிற மாதிரி ஒரு சோதனைக்காலம். சார்பு இல்லை என்றால் பிரச்சனையே கிடையாது.

நெருக்கடி காலம் வந்தபோது நெருக்கடியை எதிர்த்துக் குரல் கொடுக்க வேண்டும் என்று இந்தியா முழுவதும் முற்போக்குச் சிந்தனையாளர்கள் முற்பட்டார்கள். அப்போது இங்கே இன்குலாப் எழுதினார். நான் எழுதினேன். 'சில எதிரொலிகள்' என்று ஒரு கவிதை நூலை ஆந்திராவினுடைய புரட்சிக் கவிஞர் ஸ்ரீஸ்ரீ வெளியிட்டார். க. சுப்பு அந்தக் கூட்டத்தில் பேசினார்.

அன்றுகூட. கவியரங்கத்தில் படிக்கின்றபோது ஒற்றர்கள் வந்து இருந்தார்கள். லயோலா கல்லூரியினுடைய வெளிமுற்றத்தில் படித்தோம். நான் நெருக்கடி காலத்தில் 'பல பகல்கள் வேகும் ஒரு இராத்திரி' என்று ஒரு கவிதை எழுதினேன். நெருக்கடி காலம் ஒரு இராத்திரி. இதில் பல பகல்கள் வெந்து கொண்டிருக்கின்றன என்று சொல்லுகின்றபோது அந்த நெருக்கடி காலத்திற்குக் காரணமாய் இருந்த இந்திரா அம்மையாரைப் பற்றியும் அந்தக் கவிதையில் எழுதினேன். 'பசுமைப்புரட்சி' என்று இன்னொரு கவிதை எழுதினேன். அந்தக் கவிதையும் இதுவும் மறைமுகமாக நெருக்கடி நிலைக்கு எதிர்ப்புத் தெரிவித்தன. அந்தக் காலத்தில் பிடிக்காதவனுக்குக் கட்டாய ஓய்வு கொடுத்துவிடுவது அரசாங்கத்தின் செயல்பாடாக இருந்தது. கட்டாய ஓய்வால் ஒருவர் பாதிக்கப்பட்டது போலச் சித்தரித்து 'கட்டாய ஓய்வா?' என்று ஒரு கவிதை எழுதினேன். அதில் பழிவாங்கப்பட்ட அரசு ஊழியர் சொல்லுவார்; "தேச தேவியே! உன் தேசியப் பறவை மயிலாகவே இருக்கட்டும் என் பிணத்தைத் தின்பதற்காகக் கழுகாக வேண்டாம்' என்றும். தேசதேவியே! உனக்காக நாங்கள் பாடுவோமே. ஒரு பாட்டு. கடைசியாகப் பாடுவோமே' அந்தப் பாடலை அர்த்தம் விளங்க எனக்கு நீ பாடு" என்றும் சொல்லி அந்தக் கவிதையை முடித்தேன். இதைக்கூடக் கோவையில் இருந்து 'சிற்பி' அவர்கள் விமர்சனம் பண்ணியிருந்தார். 'பலபேர் பாதுகாப்பாக இருந்து கொண்டே புரட்சிகரமான கருத்தைச் சொல்லுகிறார்கள். தமிழன்பன் 'விடிவெள்ளி' என்கிற பேரில் இந்த மாதிரி கவிதை எழுதுகிறார். மற்ற இடங்களில் தமிழன்பன் என்றே எழுதுகிறார்' என்றார். 'தீவுகள் கரையேறுகின்றன' வெளிவந்ததே நெருக்கடி காலத்தில்தான். இந்த நெருக்கடி காலத்திலேயே கூடத் தமிழ் நாட்டில் சிலபேர்தான் நெருக்கடி நிலையை எதிர்த்துக் கவிதைகள் எழுதினோம். அப்போதுகூடச் சில கவிஞர்கள் 'இந்தியாதான் இந்திரா. இந்திராதான் இந்தியா' என்றெல்லாம் எழுதினார்கள். நாங்கள் கூடத் தெலுங்குக் கவிஞர்களைப் போல தீவிரமாகப் போர்களத்தில் இறங்கி ஒன்றும் செய்யவில்லை. இங்கு ஆளும் வர்க்கத்தை இலேசாக எதிர்த்தாலே எழுத்தாளனை. சிந்தனையாளனை ஒடுக்கிவிட முயலுகின்றனர். நெருக்கடி நேரக் கால கட்டத்தில்தான் 'தோழர் மாவோ' என்ற புத்தகம் வெளிவந்தது. 'மாசேதுங்'

இறந்து போனார். அவர் இறந்ததை முன்னிட்டு ஒரு நூலை நண்பர்கள் வெளியிட்டனர். அதில் இரண்டே இரண்டு கவிதைகள்தான் வெளிவந்தன. என்னுடைய கவிதை ஒன்று. இன்குலாப்பின் கவிதை இன்னொன்று.

இத்தகையச் சூழ்நிலையில் இருந்துதான் எனது கவிதைகளும் நானுமாக வளர்ந்திருக்கிறோம் என்று நினைக்கிறேன். அதற்குப் பிறகு வந்த இன்னொரு சம்பவத்தைச் சொல்ல வேண்டும். 92-ல் 'தமிழ்த் தேசிய தன்னுரிமை மாநாடு' நடந்தது. திரு. மணியரசன் அவர்களும், திரு. சுப. வீரபாண்டியன் அவர்களும் என்னிடத்தில் வந்து கவிதை பாட வாருங்கள் என்றனர். அந்தக் கவியரங்கத்தில் கவிஞர் அறிவுமதியும் நானும் கலந்துகொண்டோம். கவிஞர் அறிவுமதி பாடியதை நான் பாடியதாக என்மேலே போட்டுவிட்டனர். அதாவது அறிவுமதி தேசியக் கொடியைத் தனது கவிதையில் கடுமையாக ஏளனம் செய்து பாடினார். அது கவிஞனுக்குள்ள ஒரு உரிமை! டெல்லியில் ஒருவர் கதை எழுதினார். குடித்துவிட்டு ஆகஸ்ட் 14 அன்று பள்ளத்தில் போய் ஒருவன் உருண்டு கிடந்தான். மறுநாள் விடிந்து பார்த்தால் இடுப்பில் துணி இல்லை. ஒரு கொடி பறந்தது. அதை எடுத்துக் கோவணமாகக் கட்டிக் கொண்டான். தேசியக் கொடியைக் கோவணமாக கட்டியதால் அவனைக் கூட்டிக் கொண்டு போய்க் காவல் துறையில் விசாரித்தார்கள். 'என்னப்பா தேசியக் கொடியைப் போய்க் கோவணமாகக் கட்டிக் கொண்டாயே' என்றனர். 'வேண்டுமென்றால் அவிழ்த்து விடுகிறேன்' என்றான் அவன். 'அடேடே வேண்டாம்பா!' என்று உடனே அவனைத் தடுத்துவிட்டார்கள்.

தேசியக் கொடியை அவமானப்படுத்தி விட்டதாகச் சொல்லி அறிவுமதியைக் குறிவைப்பதற்குப் பதிலாக, கூடுதலாக அறியப்படுகிறவர், செய்தி வாசிப்பாளர் என்ற முறையிலேயும் கலைஞருடன் நட்பு கொண்டவர் என்ற முறையிலேயும் என்னை நெருக்கினர். நான் எழுதிய கவிதையில் 'அஜர் பைஜான் நெருப்பு அசோகச் சக்கரத்தை விசாரிக்கும்' என்று எழுதியிருந்தேன். அப்போது சோவியத் பகுதியில் எல்லாம் குழப்பமான சூழ்நிலை நிலவியது. ரஷ்ய மொழியைக் கொண்டு போய்த் திணித்தால் மற்ற மாநிலங்கள் எதிர்க்கும் நிலை. அஜர் பைஜானில் கிளர்ச்சி நடந்தது. அதைக் குறிப்பிட்டு நான் பலமொழி பேசுகிற ஒரு நாட்டில் ஒரு மொழியை மட்டும் எல்லா மாநிலங்களிலும் கொண்டுபோய்த் திணித்தால் நாடு ஒற்றுமையாக இருக்காது. தகர்ந்து போய்விடும் என்று எழுதியிருந்தேன். 'அஜர்பைஜான் நெருப்பு அசோகச் சக்கரத்தை விசாரிக்கும்' என்பதை 'அசோகச் சக்கரத்தை எரிக்கும்' என்று மாற்றிக்கொண்டார்கள். இதற்காக பாரதீய ஜனதா மாநாட்டில் எனக்காகவே ஒரு தீர்மானம் போட்டார்கள்.

தமிழன்பனைக் கண்டிக்க வேண்டும் என்றும், தொலைக்காட்சியை விட்டு வெளியேற்ற வேண்டும் என்றும் பாரதீய ஜனதாவினுடைய தேசிய அவைக் கூட்டத்தில் தீர்மானம் போட்டார்கள் அடுத்தநாள் திரு. தணிகைச் செல்வன் தொலைபேசியில் கூப்பிட்டு, நீங்கள் ஒரே நாளில் 'நேஷனல் ஹீரோ'வாயிட்டீங்க என்றார். அதோடு பாராளுமன்றத்தில் இந்தக் கவிதையைப் பற்றிப் பேசினார்கள். அதனுடைய விளைவாகத்தான் தொலைக்காட்சி நிலையத்திற்கு நான் போக முடியாத சூழ்நிலை ஏற்பட்டது. தொடர்ந்து மிரட்டல் கடிதமெல்லாம் வந்தன. எங்கிருந்து வந்தன என்றெல்லாம் தெரியும். திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகத் தொடக்க விழாவின்போது நான் படித்தக் கவிதையும் இதற்கு ஒரு காரணம். இண்டியன் எக்ஸ்பிரஸ்ஸில் ஒரு செய்தி வந்தது. அதில் என் கவிதை வரிகளை மேற்கோள் காட்டி, பழி சுமத்தியிருந்தனர். இந்தச் சூழல்களே எனது கவிதையின் கருத்துச் சூழல்கள். இதற்குப் பிறகு இன்றைய நிலையில் தலித்தியம், பெண்ணியம், சூழலியம் இவற்றில் கூட எனது கவிதைகள் தோற்றம் கண்டிருக்கின்றன.

'அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம்' வெளிவந்தபோது பெரிய கிளர்ச்சியை உண்டாக்கியது. ஜெயின் கல்லூரியில் நான் கவியரங்கத்தில் கலந்துகொள்ளச் சென்றேன். பலமொழிக் கவியரங்கம் அது. நான் அதில் 'அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம்' என்ற கவிதையைப் படித்தேன். பார்ப்பனனாய் இருக்கும் பண்ணையாருக்கும், கூலியாய் இருக்கிற பறையனுக்கும் ஏற்படுகிற மோதல்தான் அந்தக் கவிதை. அவன் முதலில் 'சாமி' என்பான், கடைசியில் 'ஐயரே, மார்பில் கிடப்பது பூனூலா அல்லது உள்ளப்புற்றிலிருந்து வெளிவந்த விரியன் பாம்பா' என்று கேட்பான் நந்தன். 'சிவபெருமானே நந்தனைக் காப்பாற்றவில்லை. நாங்க தாண்டா எரிச்சோம்! நீ எகிறினா அவனை எரிச்ச நெருப்பின் மிச்சம் இருக்கு. உன்னை எரிச்சிடுவோம்' என்று சொல்வார் பண்ணையார்.

அந்தக் கவிதையில் 'அரிஜனம் என்பது அரசியல் வழக்கு பறையன் என்பது பண்ணையார் வழக்கு'. என்றெல்லாம் எழுதியிருந்தேன். நீங்கள் என்ன நந்தன் கதையை மாற்றி எழுதுவது? நீங்கள் சொந்தமாக எழுத வேண்டும் என்று கவிதையைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு பேராசிரியர் சொன்னார். எனக்கு நந்தன் கதை அப்படித் தோன்றுகிறது. அது கூலி விவசாயியாக இருக்கிற ஆதி திராவிடனுக்கும், பண்ணையாராக இருக்கிய உயர்சாதிக்காரனுக்கும் ஏற்பட்ட ஒரு மோதலாகப்படுகிறது. இப்படிக் கருதுவதற்கு கோபாலகிருஷ்ண பாரதியின் இரண்டொரு பாடல்களும் துணையாக இருந்தன. நீங்கள் என்ன

சேக்கிழாரை விடப் பெரிய ஆளா என்று அப்பேராசிரியர் கேட்டார். நீங்கள் சேக்கிழாரைக் காட்டிப் பயமுறுத்தாதீர்கள். அவர் மிகப் பெரியவர்தான். ஆனால் அவரைக் காட்டிப் பயமுறுத்தினால் நான் சேக்கிழாரைவிடப் பெரியவன் என்று சொல்லிவிடுவேன் என்றேன்.

இந்தக் கவிதையைப் பற்றிக் கலாநிதி கைலாசபதி "நண்பர் இலக்கிய வட்டத்தில்" சமுத்திரத்தின் 'சோத்துப்பட்டாளம்' என்ற நூல் விமர்சன விழாவில் பேசுகிறபோது "இந்தக் கவிதையில் தமிழன்பன் ஒரு தீர்வு சொல்லி இருக்கிறார். என்ன தீர்வு என்றால், அடிவாங்கி உடம்பெல்லாம் சவுக்கடி பட்டு வீழ்ந்து கிடக்கிறவன். இரவெல்லாம் குழம்பிக் கனலாக கொந்தளித்துப்போய் காலையில் குடிசையில் இருந்து ஒரு தீப்பந்தத்தை எடுத்துக்கொண்டு போகிறான் பண்ணையார் வீட்டுக்கு. இப்போது இவன் கையில் அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம் இருக்கிறது என்று அவர் விளக்கம் தந்திருக்கிறார்.

பெண்ணியத்தைப் பாடும்போது கூட நான் கொஞ்சம் வித்தியாசமாகப் பாடினேன். வரதட்சணைக் கொடுமையைச் சுட்டிக்காட்டி ஆணின் கொடுமை பற்றி பேசுவது பொது வழக்கு. ஆனால் நான் இன்னும் கொஞ்சம் வித்தியாசமாகப் பார்த்தேன். ஆணைக்கூடச் சுரண்டுபவனாக, பிணந்தின்னிக்கழுகாக மாற்றி அமைந்திருக்கிற இந்தச் சமூக அமைப்புதான் காரணம். பொருள்தான் பிரதானம் என்று வந்துவிட்டபிறகு அந்தப் பொருளை அடைவதற்கு ஒரு வாய்ப்பாக ஆண் திருமணத்தை நினைக்கிறபோது ஒரு பிணந்திண்ணிக் கழுகாக மணவறையில், அகப்பட்டதைக் கொத்திக் கொண்டு போகின்றனவனாக அவனைச் சமூகம் மாற்றியிருக்கிறது என்று எழுதியிருந்தேன் அதைப்போல விளம்பரத்தில் வருகிற பெண்கள் பற்றி எழுதும்போது அவர்கள் மகிழ்ச்சியாக இருப்பது போல் இருந்தாலும் அவர்கள் எவ்வளவு அவலத்தில் வாழ்கிறார்கள் என்பது பற்றி எழுதினேன். இவையெல்லாம் எனது கவிதையின் கருத்துச் சூழல்கள்.

கவிதைக் கலை என்று வருகிறபோது அழகியல்வாதிகளோடு என்னைச் சேர்த்துவிடுகிறார்கள். எனக்கு எந்த இசமும் போட்டு எழுதுவதில் உடன்பாடு கிடையாது. இந்த இசத்திற்கு இன்று ஒருபாட்டு, அந்த இசத்திற்கு நாளைக்கு ஒரு கவிதை என்று நான் எழுதுவது கிடையாது. ஒருவேளை நான் எழுதும் கவிதையில் இசம் இருக்கலாம். இல்லாமலும் போகலாம். 'லூ சுன்' என்ற அறிஞன் 'டேப்லட்' (Tablet) என்று ஒரு கட்டுரையில் மிக அழகாகச் சொல்லுவான். 'டேப்லட்' என்றால் கோயில்களில் தொங்கவிடப்படுகிற பிராத்தனைப் பலகை. எப்போதுமே கருத்து முதல்வாதிகளாக இருப்பவர்கள் உருவவாதம், அழகியல்வாதம்,

உணர்ச்சிவாதம் இவற்றைப் பிரதானப்படுத்துவர். 'லூ சுன்' சொல்லுவான். 'என்ன இசம்? நீங்கள் உங்களைப் பற்றி எழுதினால் 'எக்ஸ்பிரஸ்ஸினலிசம்', மற்றவர்களைப் பற்றி எழுதினால் 'ரியலிஸம்' ஒரு கன்னிப் பெண்ணுடைய காலைப் பற்றி எழுதினால் 'ரொமாண்டிசம்', அப்படி எழுதக் கூடாதது ஒன்று எழுதினால் எழுதினால் 'கிளாசிசம்'. ஆகாயத்தில் இருந்து ஒரு தலை விழுந்த அந்தத் தலை, கீழே இருக்கிற ஒரு எருமை மேல் விழுந்தது. கடலிலிருந்து பச்சை மின்னல்கள் பறக்கின்றன. இது 'பியூச்சரிசம்' என்று சொல்லி கேலி செய்வார். 'லூ சுன்'. இப்படியெல்லாம் யாரும் இசம் பார்த்து எழுதுவதில்லை.

என்னைக் கூட ஒரு ஆய்வாளர் 'பியூச்சரிஸ்ட்' என்று வகைப்படுத்தி எழுதினார். 'பியூச்சரிஸ்ட்' என்று எப்படி என்னை மதிப்பிட்டார் என்றால் நான் சொற்களை புதிய முறையில் கையாளுகிறேனாம். அதற்கு உதாரணமாக 'மரணித்துவிடுங்கள்' போன்ற வார்த்தைகளே. மரணம் என்பதிலிருந்து மரணித்து விடுங்கள் என்ற வினைச்சொல்லை உருவாக்கினேன் என்பதைக் குறிப்பிட்டார். இதற்காக என்னை பியூச்சரிஸ்ட்டுக்களோடு சேர்த்துவிட்டார். விமர்சகர்கள் அடிக்கடி பட்டியல் தயார் செய்துவிடுவர். அப்போது கூட நான் கேட்டேன். பிரான்ஸ் நாட்டு 'பியூச்சரிசம்' வேறு ரஷ்ய நாட்டு 'பியூச்சரிசம்' வேறு. நான் பிரான்ஸ் நாட்டு பியூச்சரிஸ்ட்டா? ரஷ்ய பியூச்சரிஸ்ட்டா? பியூச்சரிஸ்ட்டாக இருந்த மாயாகோவ்ஸ்கி கூடப் பின்னாளில் மாறிப் போய்விட்டான். அது கவைக்குதவாது. மக்களுக்குக் கருத்துச் சொல்ல முடியாது என்று அவர் கருதினார். எனது கவிதையில் குறைபாடு என்று விமர்சனம் சொல்வது, கைலாசபதி சொன்னது போல நிறைய படிமங்களைக் கையாளுகிறேன் என்பதுதான். படிமங்களை அதிகமாகக் கையாண்டு 'கடப்பை காந்தம்மா' என்ற கவிதையை எழுதினேன். இந்தக் கதை உண்மையில் நடந்தது. முப்பது ரூபாய்க்குத் தாலியை விற்ற பெண்ணின் கதை. 'இந்து' பத்திரிகையில் வெளிவந்தது. அதை நான் அப்படியே கவிதையாக்கினேன். அதில் கைலாசபதி அப்படிச் சொன்னது ஒரு நியாயம் கூட. ஏனென்றால் அந்தக் காலக்கட்டத்தில் அழகியலில் நான் அதிகமாக மனத்தைப் இருந்திருக்கலாம். ஆனால் கைலாசபதியே என்ன எழுதுகிறார் தொடர்ந்து. நல்லவேளையாக இந்தத் தொகுப்பிலே அப்படிப்பட்ட பிரயோகம் அரிதாக இருக்கிறது" என்கிறார். ஒரு கவிஞனின் கவிதை வெளிப்பாடு என்பது அவனுடைய மனோபாவம், திறமை எல்லாவற்றையும் பொறுத்தது. அதை விடுத்து ஒரு பொது விதி ஏற்படுத்தி இப்படிக் கவிதை எழுது என்று சொல்ல யாருக்கும் உரிமை இல்லை. நம் நாட்டார் பாடல் வழக்கே எப்படி இருக்கிறது? திரும்பத் திரும்பச் சொல்வதுதான். அழுகிறவன் கூட, முத்துப் பல்லக்கு என்பான்.

அடுத்து 'தங்கப்பல்லக்கு' என்பான். 'முத்துப்பல்லக்கு' என்று மட்டும் சொன்னால் போதாதா. பிறகு எதற்குத் 'தங்கப் பல்லக்கு' என்றால் திரும்பச் சொல்லுகிற கலைமரபு மக்கள் வாய்மொழிப் பாடலிலேயே உண்டு. நான் கலித்தொகையில் படித்தேன் தலைவனின் சொல் பொய்க்குமானால் 'நீருள் குவளை வெந்தற்று' என்று சொல்லுவான் சரி இப்படி ஒன்று சொல்லிட்டால் போதாதா? அப்புறம் 'திங்களுள் தீத்தோன்றியற்று' என்று இன்னொன்று சொல்லுவான். 'விசும்புள் சுடருள் இருள் தோன்றியற்று' என்று இன்னொன்று சொல்வான். எதற்கு மூன்று உவமைகள் சொன்னான்? கலையைப் பயன்படுத்துகிற போக்கு அது. அப்படித்தான் எனக்குச் சார்பாக படிமத்தை நான் அதிகமாகக் கையாண்டிருக்கிறேன். என்னை முதலில் தாக்கிய விமர்சகரே கூட. பிறகு. படிமத்தைத் தமிழன்பன் அதிகமாகப் பயன்படுத்தி வெற்றி பெற்றிருக்கிறார் என்றார்.

சாதாரணமாகவே கவனித்துத்தான் நான் சொற்களைப் போடுவேன். 'எச்சில் துப்புகிறான்' என்பதில் வேகம் வராது என்பதற்காக 'எச்சில் கழிக்கிறான்' என்பேன். ஏனென்றால் 'கழித்தல்' என்ற சொல் வேறெதற்கோ பயன்படுத்தப்படுகிறது. 'தெருவில் எச்சில் கழிக்கிறான்' என்று சொன்னால் அவனுக்கே அருவெறுப்பு வந்துவிடும். சொற்களைப் பயன்படுத்துவதில் அதிகக் கவனம் செலுத்துவேன்.

எதைப் பார்த்தாலும் எனக்கு மனிதனுடைய வருத்தம் தெரியும். மனிதனுடைய வீழ்ச்சி. மனிதனின் கண்ணீர் இவற்றைப் போக்குவதற்கு வழிகிடைக்குமா என்று பார்ப்பதுதான் என் கவிதையின் நோக்கம். எழுத்தாளனின் கவிதைக் கோட்பாடு என்னவாக இருக்கலாம் என்பதற்கு 'என் வீட்டு எதிரில் ஒரு எருக்கஞ்செடி' என்ற புத்தகத்தில் இடம் பெற்ற 'நதிவிற்ற காசில் படகா' என்ற கவிதைகயைச் சொல்லலாம் என நினைக்கிறேன். படகு வாங்குவதே நதியைக் கடக்க. ஆனால் நதியை விற்றுவிட்டுப் படகை வாங்குவது எவ்வளவு பேதைமை. அதில் இன்றைய விமர்சனப் போக்குகளை எல்லாம் சுட்டிக்காட்டியுள்ளேன். இந்தக் கவிதை நான் சார்ந்திருக்கிற அணியினைச் சார்ந்த. கோட்பாடாக இருக்கிறது.

அண்மையில் அமெரிக்காவில் நான் மூன்று மாதம் பயணம் செய்தேன். சில இடங்களை நண்பர்கள் கூட்டிக் கொண்டுபோய்க் காட்டினார்கள். என்னுடைய பார்வையில் அமெரிக்கா எனக்குள் ஏற்படுத்திய கலவரத்தையும் எழுதியுள்ளேன். களிப்பையும் எழுதியுள்ளேன். எல்லோரும் போகிறபோது முதலில் நியுயார்க்கில் பார்ப்பது சுதந்திரச் சிலை. அமெரிக்கா சுதந்திரமடைந்து நூறு ஆண்டு ஆனதற்காகப் பிரெஞ்சுக்காரர்கள் கொடுத்த கொடை இது. பீடத்தை மட்டும்தான் அமெரிக்கா தயாரித்தது. அந்தப் பீடத்தைத் தயாரிக்கக் கூடப்

பணத் தேவைக்காக இளம்பெண் கவிஞர் ஒருவர் கவிதை எழுதினார். அந்தக் கவிதைக்காகப் பணம் வசூலித்தார்கள். அதை எல்லோரும் பாராட்டினார்கள். செம்புத்தகட்டினால் ஆன மிகப்பெரிய சிலை, ரோம் நாட்டுப் பாணியில் உடையணிந்த. அழகான கம்பீரமான சிற்பம். மேலே மகுடத்தில் ஏழு கீற்றுகள் இருக்கும். அச்சிலைப்பற்றி ஒரு கவிதை எழுதினேன். கடைசியாக அந்தக் கவிதையை இப்படி முடித்தேன். 'அந்தச் சிலையை மானசீகமாக என்பக்கமாகத் திருப்பினேன்; அது கருவறையில் கட்டாரியைக் கொண்ட கேள்வி ஒன்று கேட்டது "என்னை ஏன் டாலருக்கு விற்கிறார்கள்". இப்படி இந்தத் தொகுப்பில் உள்ள பல கவிதைகளைக் காட்டலாம்.

மற்றொரு கவிதை 'சுகோலியாவில்' கேட்ட இரத்த கதைகள்' அக்கவிதையில் அந்த நாட்டு தேசிய இனம் வதைப்பட்டதை எழுதினேன். அந்த மக்கள் பச்சைப்புண்களில் இருந்து வெளிவருவதாக எழுதினேன். வந்த அவர்கள் சொல்லுவார்கள்; நாங்கள் அழகழகாக ஊரை அமைத்தோம், தெருக்கள் அமைத்தோம், வீடுகளெல்லாம் நன்றாக அமைத்தோம். அந்த நாட்டுமிராண்டிகள் பார்வையில் நாங்கள் காட்டுமிராண்டிகளா? எங்கள் மொழியின் பெயர் 'சூ'. 'சூ' என்றால் 'புன்னகை' என்று பொருள். நாங்களா நாகரிகமற்றவர்கள். விடை தேவையில்லை என்று சொல்லிப் பச்சைப் புண்களுக்குள் மீண்டும் புகுந்து 'படார்' என்று கதவைச் சாத்தினார்கள். என்னுடைய கவிதையில் கலைத்தன்மை குறைந்துவிடலாம். அதே சமயத்தில் கருத்து நிலைகளும் இழந்துவிடாமல் இரண்டையும் ஏறத்தாழ சமனப்படுத்திக் கொண்டு எழுதி வருகிறேன். இதுதான் எனது கவிதை வரலாறு.

புதிய முயற்சிகளும் செய்து வருவதில் எனக்கு எப்போதும் விருப்பம் உண்டு. ஹைக்கூ கவிதைத் தொகுப்பாக ஒரு நூல் வெளியிட்டேன். சிலபேர், நம்மிடமே பல தளைகள் உள்ளன. நீங்கள் ஏன் ஜப்பானியத் தளைகளைப் போட்டு கொள்கிறீர்கள்? என்றனர். லிமரிக் எழுத வேண்டும் என்ற ஆசை. இப்போது 'லிமர்ஹைக்கூ' வந்திருக்கிறது. அதையும் எழுதவேண்டும் என்ற ஆவல். காதல் கவிதைகளாகவே ஒரு நூலை எழுதி வெளியிட்டேன். 'நிலா வரும் நேரம்' என்று பெயர்.

திரும்பவும் இப்போது தேசிய இனப்பிரச்சினை முதன்மை கொள்ளும் அளவிற்கு மாறிவிட்டது. திரு கைலாசபதியே இன்றிருந்தால் என்ன சொல்லுவார் என்று சொல்ல முடியாது. ஏனென்றால் மிக முற்போக்கான கவிஞர்கள் எல்லாம் இந்தத் தேசிய இனப் பிரச்சனையை வர்க்கப் பிரச்சனை போலக் கவனிக்கத்தக்க ஒன்று என்று, மாறிவிட்ட

பிறகு கவிதையும் மானுடம் பாடுவது என்ற போக்கிலிருந்து தமிழ், தமிழனைப் பாடுவது என்ற போக்குக்குத் திரும்பிவிட்டது.

எல்லாக் கவிஞர்களும் எல்லாக் காலங்களிலும் ஒரேமாதிரி கவிதை எழுத மாட்டார்கள். தமிழன்பன் மாறிவிட்டார் என்று கூறுகிறார்கள். நெருடாவின் கவிதை நூலை இப்போது படிக்கிறேன். நெருடாவின் கோட்பாடு எனக்குப் பிடிக்கிறது நெருடாவின் கவிதை இரண்டு வகை. ஒன்று பேச்சுக்கவிதை. இன்னொன்று எழுத்துக்கவிதை. பேச்சுக்கவிதை என்பது கவியரங்குகளில் சொல்வது. கவியரங்க பாணியில் சொல்வது. அதற்குப் பேச்சுச் சந்தம் உண்டு. நெருடா தன் கவிதைப் பற்றிச் சொல்லும்போது இவை முழங்குவதற்கு உரியன என்பார். எனக்கு இந்த பேச்சுக் கவிதை உடன்பாடானது. பாரதியும் இப்படித்தான் பேசினான். பாரதிதாசனும் இப்படித்தான் பேசினான். இப்போது வந்திருக்கிற 'என் வீட்டெதிரே எருக்கஞ்செடி', 'கிழக்குச் சாளரம்' ஆகிய இரு கவித்தொகுப்புகள் எல்லாம் எழுத்துக் கவிதைகள்தாம். 'திரும்பி வந்த தேர்வலம்", 'ஊர் சுற்றி வந்த ஓசை' இவையெல்லாம் ஏறத்தாழ பேச்சுக் கவிதை. நெருடா 'நான் முழங்குகிறேன். அதனால் இருக்கிறேன்" என்பார். சில பேர் 'மௌனமாய் இருக்க வேண்டும். ஆன்மாவின் இறுக்கத்தை இளகச்செய்ய வேண்டும்' என்றெல்லாம் சொல்லி மூடுமந்திரம் போடுவார்கள். எனக்கு இதில் உடன்பாடில்லை. எனவே இந்தப் போக்கிலேதான் என் கவிதைகள் எல்லாம் வளர்ந்து வருகின்றன.

இன்றும் எனக்குப் புதிய புதிய முயற்சிகளைச் செய்ய வேண்டும் என்றும், நிறைய படிக்க வேண்டும் என்றும் ஆர்வம் உண்டு. அமெரிக்கா போயிருந்தபோது நெருடாவின் ஒன்பது புத்தகங்கள் வாங்கி வந்தேன். ஆனால் நெருடாவே கடைசியில் மாறியிருக்கிறான். எனக்கு அதிர்ச்சியாக இருக்கிறது. கடைசியில் மரணத்திற்கு முன் எழுதிய ஒன்பது புத்தகங்கள் ஏறத்தாழத் தற்சார்பு அல்லது அகமுகக் கவிதைகளாக இருக்கின்றன. இப்படி இந்தக் கவிதைப்போக்கு எல்லையற்றது. அடுத்தது என்ன என்று என்னால் திட்டமிட்டுச் சொல்ல முடியாது. அதனால் கவிதைத் துறையில் இன்னும் சிலவற்றை எழுதிப்பார்க்கலாம் என்ற ஆசை இருக்கிறது. கவிதை என்ன சாதிக்கும் என்று கேட்டால் கவிதை ஒன்றும் சாதிக்காது. ஒரு சமூக மாற்றத்தை, அரசியலோ விஞ்ஞானமோ செய்வதுபோலக் கவிதை செய்யாது. ஆனால் அப்படிப்பட்ட மாற்றங்களுக்கு எல்லாம் ஆதரவாய் நிற்கும். அதை முன்மொழிந்து கொண்டே இருக்கும். அதனால்தான் நல்ல புரட்சியாளர்கள் கூட இலக்கியவாதிகளைப் புறக்கணிக்கவில்லை.



# மீரா

கருவறையிலிருந்து வந்தவுடனேயே கல்லறைக்குப் போய்விடும் என்று ஆருடம் சொன்னவர்கள் அதிசயிக்கத் தக்க வகையில் புதுக்கவிதை இன்று கம்பீரமாக ஊர்வலம் வருகிறது. மரபுக்குப் பாசறையாக விளங்கும் பல்கலைக்கழகங்களும் இப்போது புதுக்கவிதைக்கு மணவறையாக மாறியுள்ளன.

இந்த மாற்றத்தைத் தம் கண்ணுக்கு முன்னர் கண்ட பிறகே புதுக்கவிதையின் தந்தை ந. பிச்சமூர்த்தி மறைந்திருக்கிறார். திசைகாட்டும் கருவி இல்லாத காலத்தில் எச்சரிக்கைகளை மீறிக் கடலில் நெடுந்தூரம் பயணம் செய்தான் கொலம்பஸ்; பின்னர் அமெரிக்காவுக்குச் செல்ல வழிவகுத்தான். முதலில் தன்னந்தனியாகப் புதுக்கவிதை முயற்சியை மேற்கொண்ட ந. பிச்சமூர்த்தி ஏறத்தாழக் கொலம்பஸைப் போல ஒரு துணிச்சல்காரர்தான். 'பாதையில்லாக் காட்டில் பயணம் செய்யும் முயற்சி' என்று அவரே தம் அனுபவத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். அவர் போட்ட பாதை இன்று புதுக்கவிதைக்கு ராஜபாட்டையாகி விட்டது.

பள்ளிக்கூட நாட்களிலிருந்தே எனக்கு திராவிட இயக்கக் கொள்கைகளில் ஈடுபாடு இருந்தது. அண்ணா, பாரதிதாசன், கண்ணதாசன், மு.வ. ஆகியோரின் எழுத்துக்கள் என்னை எழுதத் தூண்டின. கல்லூரி நாட்களில் சுரதா, தாகூர், கலீல் ஜிப்ரானில் ஈடுபாடு ஏற்பட்டது. என் முதல் கவிதை 'தீபன் குன்றம்' பாரதி பற்றியது. அது 1959 இல் 'தாமரை'யில் வெளிவந்தது. அது மரபுக் கவிதை. எண்சீர் விருத்தம். பாரதிதாசன் பாதிப்பு அதில் தெரியும்.

பச்சையப்பன் கல்லூரியில் எம்.ஏ. பொருளாதாரம் படிக்கப் போன என்னை, அங்கே பொருளாதாரம் படித்துக் கொண்டிருந்த என் மூத்த நண்பர் குமாரசாமி தான் தியாகராசர் கல்லூரிக்கு ஆற்றுப் படுத்தினார்....... 'தமிழில் முதல் வகுப்பு எடுத்திருக்கிறீர்கள். பொருளாதாரம் வேண்டாம். உங்களுக்குத் தமிழ்தான் சரி...... மு.வ. இங்கில்லை. பேசாமல் தியாகராசர் கல்லூரியில் சேருங்கள். இலக்குவனார் தியாகராசர் கல்லூரிக்கு வருகிறார்'

என்றார். சிவகங்கைக் கல்லூரியில் படிக்கும்போது அவரும் என்னைப்போல் ஒரு கழகக்காளை 'கழகமும் காரல் மார்க்சும்' என்னும் கட்டுரையை அவர் 'முல்லை'யில் எழுதுவதற்கு நானும் ஒரு காரணம். அவரை ஒருமுறை ஈரோட்டில் சந்தித்தேன். ஒரு பெரிய அரச அதிகாரியாக இருந்தார். இப்போது தொடர்பில்லை என்றாலும் அவரை நான் எப்போதும் நினைப்பேன். அவர் வார்த்தையைக் கேட்காமல் போயிருந்தால் எனக்கு 'என் வசந்த காலத் தோழன் - கவிஞர் அப்துல் ரகுமான்' கிடைத்திருக்க முடியாது.

ரகுமானும் பாலசுந்தரமும் மதுரைக்காரர்கள். இருவருமே அதே கல்லூரியில் 'இளங்கலைத்' தமிழர்களாய் இருந்திருக்கிறார்கள். அதனால் அவர்கள் எத்தனையோ ஆண்டுகள் பழகியவர்களைப் போல இணைந்திருப்பார்கள். முதலில் என்னை ஈர்த்தவர் பாலசுந்தரம். ஒரு நாள் மாலை - நகரத்துக்குப்போய் விட்டுத் திரும்பிக் கொண்டிருக்கிறேன். சௌராஷ்டிரா பள்ளிக்குப் பக்கத்தில் சைக்கிளில் மெதுவாக வந்து என்னைக் கண்டதும் சிரித்துக்கொண்டே இறங்குகிறார் பாலா. (பின்னால் ஒரு பாலா வருவதற்கு முன்னால் வந்த பாலா. இப்போதும் பாலா என்று தான் அவரை நானும் ரகுமானும் கூப்பிடுவோம். எங்கள் இருவரையும் அவர் அடா போட்டுத்தான் கூப்பிடுவார்). கையில் என்ன பத்திரிகை என்கிறார். பாரதிதாசன் 'குயில்' என்கிறேன். ஓர் அருமையான கவிதை. பாரதிதாசன் எழுதியிருக்கிறார். 'திரும்பிப் பார்த்தால் என்ன.... விரும்பிப்பார்த்த என்னை' என்று கூறி அந்தக் கவிதைப் பக்கத்தைப் பிரித்துக் காட்டும் முன்னே. இரண்டு நாட்களுக்கு முன்பே படித்து விட்டேன்' என்கிறார். இருவர் மனமும் ஒத்திருந்தது அதிசயமாயிருந்தது. வீதியில் ஒரு மணி நேரம் நின்று பேசினோம். திராவிட நாடு. அண்ணா என்று மாறி மாறித் தகவல்களைப் பரிமாறிக் கொண்டோம். 'நம் கழகக் காளை' என்று பூரித்துப் போனேன்.

பாலா. ரகுமானின் பூர்வீகப் பெருமைகளைப் பற்றியெல்லாம் சொன்னார். பச்சையப்பன் கல்லூரியில் பி.ஏ. ஆனர்சு வகுப்பில் தன்னோடு படித்த ஔவைப் பிள்ளையின் பிள்ளை நம் துறைப் பேராசிரியராக வந்திருக்கிறார் என்றும் சொன்னார். ஒரு மாதம் ஓடியிருக்காது....... நாங்கள் நால்வரும் மதுரை உலா நாயகர்களாகி விட்டோம்!

கடைசி வகுப்பு நடந்து கொண்டிருக்கும் போதே ஔவை நடராசன் எட்டிப்பார்ப்பார். அவர் ஆசிரியர் என்பதை மறந்து விடுவார்...... பக்கத்து வகுப்பு மாணவரைப் போல் எங்களுக்காகக் காத்திருப்பார். வகுப்பு

முடிந்ததும் நான் விடுதிக்குப் போய் காபி குடிக்க முடியாது. 'காபி குடிக்கத்தான் காலேஜ் ஹவுஸ் போகிறோமே' என்பார்கள். மதுரைக் கிழக்கு எல்லையில் தியாகராசர் கல்லூரி. கிட்டத்தட்ட நான்கைந்து கிலோ மீட்டர் தூரம் நடையாய் நடந்து போவோம். பழனி பாத யாத்திரை பக்தர்களைவிட நாங்கள் காலேஜ் ஹவுசுக்கு நடந்தது அதிகம். ஔவை அன்றன்று புதிது புதிதாய் நகைச்சுவை வெடி வெடிப்பார். கவிதை மத்தாப்புக் கொளுத்துவார். வீதியில் போவோர் வருவோர் வேடிக்கைப் பார்க்கும் விதத்தில் விழுந்து விழுந்து சிரிப்போம். சில நாட்களில் பேராசிரியர் அ.ச.வும் ஔவையின் ஆருயிர் நண்பர் அந்தோணிசாமியும் எங்களுடன் உலாவில் பங்கு கொள்வார்கள். அனுப்பானடியில் பேருந்துக்கு ஒருவர் பலியான செய்தி...... அனுப்பானடி கல்லூரிக்குப் பக்கத்தில் உள்ள ஒரு பகுதி. அனுப்பானடியில் நடந்த அந்த விபத்தைக் கூட ஔவை நடராசன் சுடச்சுடச் சொல்வார். 'அனுபானடி........ யாரையும் அனுப்பான்......அடி' என்று. எங்களுக்கு அவர் வகுப்பு ஆசிரியர் இல்லை. ஆனாலும் அன்றன்று அவர் எடுத்த வகுப்பு அனுபவங்களைச் சொல்வார். 'இன்று புகுமுக வகுப்பில் ஊர்ப் பெயர்களை நயமாகச் சொல்லக் கற்றுக் கொடுத்தேன். பக்கத்தில் சிலைமான் என்ற சொன்னால் எவ்வளவு சுவையாயிருக்கும். இதுமாதிரிச் சொல்லுங்கள் என்றேன். என் ஊர் யாரும் எடுத்து விளையாடாத கம்பம். யாரும் கலக்காத பெரியகுளம். ஈ மொய்க்காத கருப்பட்டி பசிக்குதவாத பன்ரொட்டி என்றெல்லாம் அந்த இளம்பிள்ளைகள் போட்டி போட்டுக்கொண்டு சொன்னார்கள்' என்பார். உடனே ரகுமான் 'பாடாத தேவாரம்' 'கொட்டாத தேனீ' என்று சில ஊர்களைச் சிங்காரிப்பார்.

ஒவ்வொரு நாள் மாலையிலும் ஔவை நடராசன் ஏதாவது சொல்ல அதற்கு எதிரும் புதிருமாய் ரகுமான் கவிதை மணங்கமழப் பதில் சொல்வார். இடைக்காலட் புலவர்களின் சிலேடைகள், சமத்காரங்கள், பாதாதிகேச வருணனைகள், பால் கவிதைகள், கண்ணதாசன், பட்டுக்கோட்டை பாடல்கள், அண்ணா சம்பத் முரண்பாடுகள் - இப்படி எங்கள் உலாவில் அந்தி விருந்து பரிமாறப்படும்.

சுரதா இரண்டு மூன்று முறை மதுரைக்கு வந்தார். கல்லூரிக்கும் வந்தார். அவர் வரும்போதெல்லாம் இரண்டு மூன்று நாட்கள் ஆனந்தமாய்ப் பொழுதுபோக்குவோம். ஔவை கலகலப்பாக்குவார்.

சுரதா தலைமையில் நடந்த கவியரங்கத்தில் ரகுமான் 'முத்துக்கள்' என்னும் தலைப்பில் கவிதை பாடினார். ஆசிரியர்களும் மாணவர்களும் வரிக்குவரி கைதட்டி ஆரவாதித்துக் கேட்டார்கள். அவர் நட்சத்திரக்

கவிஞராய் ஒளிர ஆரம்பித்தார். நானும் அந்தக் கவியரங்கில் பாடினேன் 'கடவுள்' என் தலைப்பு.

'உறைவதற்குக் கற்களினால் கோயில் கட்டி
ஒரு கல்லைக் கடவுளெனத் தூக்கி வைத்தார்'

என்று நான் பாடிய வரிகளைக் கழகக் கண்மணிகள் பாராட்டி உற்சாக மூட்டினார்கள். சைவ சித்தாந்த வகுப்புகள் நடக்கும். தியாகராசர் கல்லூரி வளாகத்தில் முதன் முதலில் ஒரு நாத்திகக் குரல் என்று தம்பி நா. காமராசன் முரசொலியில் எழுதினார். நான் கட்சிக் கவிஞனாக உருவாகிக் கொண்டிருந்தபோது ரகுமான் உச்சிமுதல் உள்ளங்கால் வரை முழுக்கவிஞராகப் பரிணமித்துக் கொண்டிருந்தார். நான் 'திராவிட நாடு திராவிடருக்கே' என்று ஒரு கவிதைக்குத் தலைப்பு வைத்திருந்தேன். சுரதா அந்தக் கவிதையைத் தன் 'காவியம்' பத்திரிகைகளில் வெளியிடுவதாக எழுதிப் படம் கேட்டிருந்தார். இதுபோல் திராவிட இயக்கக் கவிதைகளை மன்றம், இனமுழக்கம், திராவிடன், அருவி, முன்னணி போன்ற கழகப் பத்திரிகைகளில் எழுதினேன். தென்றலிலும், முரசொலியிலும் ஒன்றிரண்டு கவிதைகள் எழுதினேன். ரகுமான் அப்படிக் கட்சிக்கவிதைகள், இயக்கக் கவிதைகள் எழுத மாட்டார். நிரந்தரத்துவம் வாய்ந்த பொருள்களைப் பற்றியே எழுதுவார். என்னையும் 'அப்படி எழுதலாமே' என்பார். ஆனாலும் அன்றும் சரி இன்றும் சரி அவர் பாணியை நான் பின்பற்றுவதில்லை.

'திராவிட நாடு', 'திராவிடன்', 'முரசொலி', 'தென்றல்', 'இன முழக்கம்', 'மன்றம்' இதழ்களில் என் கவிதைகள் வெளிவந்து கொண்டிருந்தன. எல்லாம் அரசியல் கவிதைகள். வேழவேந்தன் கவிதைத் தொகுதி வெளியீட்டு விழாவில் அறிஞர் அண்ணா அவர்கள் பேசும் போது - 1964 என்று நினைக்கிறேன். திராவிட இயக்கக் கவிஞர்கள் என்று சிலர் பெயர்களைப் பட்டியலிட்டார். அதில் 'மீ. இராசேந்திரன் என்ற ஒருவர்' என்று என் பெயரைக் குறிப்பிட்டார். 'தெருவோரச் சாக்கடையில் வருமா தெப்பம்' என்ற வரியை இரு முறை மேற்கோள் காட்டி எழுதி இருக்கிறார். 'பொங்கல் கொண்டாட வேண்டும்' என்று கூறும் என்னுடைய மற்றொரு கவிதையையும் குறிப்பிட்டிருக்கிறார். திருச்சியில் நடந்த தி.மு.க மாநாட்டுக்குத் தொண்டர்களை அழைத்து எழுதிய கடிதத்தில், 'சாவா சந்திப்போம்; வாழ்க்கை நமக்கென்ன, பூவா புறப்படுவோம்; புல்லியரைத் தூள் செய்வோம்' என்ற என் கவிதை வரியை எடுத்துக்காட்டி எழுதியிருக்கிறார். ஒரு முறை நேரில் சந்திக்க முயன்றேன். முடியாமல் போய் விட்டது.

வெளிவந்தபோதும் அப்படி ஒரு விமரிசனம் வரும் என்று நான் நினைத்தேன். ஆனால் இடையிடையே, 'நிலத்தை மீட்கப் போனேன், 'நான் ஏங்கல்ஸின் மாணவன்', 'புரட்சியில் மலர்ந்த சோவியத் பூமியின், கூட்டுப் பண்ணைகளைப் படங்களில் பார்த்து மலைக்கும், ஓர் இந்திய உழவனைப் போல்.....' என்ற வரிகளை இணைத்திருந்தேன். அதனால் முற்போக்கு வட்டத்தில் வரவேற்பே இருந்தது. தி.க.சி. பாராட்டிக் கடிதம் எழுதினார். 'தேசம் தழுவும் பொதுவுடைமைக்கு, வரவேற்புரை எழுதும் போதும், தேகம் தழுவும் உனக்கு - என் தனியுடைமைக்கு, வாழ்த்துரை எழுதும் போதும்' என்ற வரியை மட்டும் 'இளவேனில்' கடுமையாக விமர்சனம் செய்து எழுதினார். பொதுவாகப் பொதுவுடைமைச் சார்புப் பத்திரிகைகள் பாராட்டி எழுதின.

சோவியத்தை நான் ஆழமாக நேசித்தேன் அந்த அமைப்பு சிதறி உடைந்தபோது என் கனவுலகம் உடைந்ததுபோல் இருந்தது. தி.மு.க. திராவிட நாடு கோரிக்கையைக் கைவிட்ட போது ஏற்பட்டதுபோல் மனத்தில் கலவரம் ஏற்பட்டது.

சோவியத் சிதைந்ததற்குக் கொர்ப்பச்சேவ் கட்டுப்பாடுகளைத் தளர்த்தியது தான் காரணம் என்று கருதுகிறேன். மேலும் மக்களுக்கும் மேற்கத்திய கன்ஸ்யூமரிஸத்தில் ஒரு மோகம் இருந்ததும் ஒரு காரணம். மேலும் அளவுக்கு மீறிய அதிகாரத்தைப் பயன்படுத்திச் சில அடிப்படை மனித உணர்வுகளை ஒடுக்கினார்கள். உள்ளே குமுறிக் கொண்டிருந்த எரிமலை வெடித்துவிட்டது என்று கூறினாலும் அதுவும் உண்மைதான். சோவியத் காலப் போக்கில் ஒரு 'ப்யூரக்ரேட் ஸ்டேட்' ஆக மாறிப் போய் விட்டது.

கவிதைக் குறித்து என்னுடைய கருத்தையும் இங்கு குறிப்பிடுவது முக்கியமானது என்று கருதுகிறேன். ஆங்கிலத்தில் Prose Poem என்பதைத் தான் நாம் வசன கவிதை என்கிறோம்; 'Free Verse' என்பதை 'இலகு கவிதை' என்றோ 'சுயேச்சைக் கவிதை' என்றோ கூறலாம் என்கிறார்கள். நான் 'கட்டற்ற கவிதை" என்று குறிப்பிட விரும்புகிறேன்.

கட்டற்ற கவிதையில், மரபுக்கவிதையில் காணும் எதுகையும் மோனையும் இருக்கும்; ஒலி நயம் இருக்கும். உணர்ச்சி இருக்கும். யாப்புக் கட்டுப்பாடு பெரும்பாலும் பின்பற்றப் படுவதில்லை. 'புதுமைப் பித்தன் கவிதைகளை' நாம் இந்தவகையில் தான் சேர்க்க முடியும். கவியரங்கங்களில் பாடியவற்றின் தொகுப்பாக வெளிவந்துள்ள 'கவியரங்கில் கலைஞர்' என்னும் நூல் இதற்கு மற்றுமோர் உதாரணம்.

வசன கவிதையில் (Prose Poem) ஒலி நயமோ எதுகை மோனையோ இருக்க வேண்டிய அவசியமில்லை. 'நுட்பமான உணர்ச்சியும் சொல்லில் கவிதை வெளிச்சமும் இருந்தால் போதும்; வசனத்தின் உருவத்தையும், கவிதையின் உள்ளடக்கத்தையும் கொண்டு பிறப்பதே வசன கவிதை என்று நாம் குறைந்த பட்ச அளவு கோலை வைத்துக் கொள்வது தவறல்ல' என்னும் என்.ஆர். தாசனின் கருத்தை நான் ஏற்கிறேன். பாரதியின் வசன கவிதையைப் பார்த்தால் இந்த இலக்கணம் புரியும். பாரதிதாசன் 'காதல் வாழ்வு' என்னும் பொருளில் தம் இரண்டாம் தொகுதியில் சேர்த்துள்ள பகுதியும் 'அமைதி' என்னும் நூலும் வசன கவிதை வகையைச் சார்ந்தவை. கண்ணதாசன் வசன கவிதைகள் எழுதுவதில் நிகரற்றவர் என்பதில் தடையில்லை. அந்தக் காலத்தில் 'போய்வருகிறேன்' என்று அரசியல் பின்புலத்தில் எழுதிய வசன கவிதை இன்றும் என் மனத்தில் நிற்கிறது. அவரது 'ஞானமலர்களு'ம் 'புஷ்பமாலிகா'வும் பாராட்டுக்குரியன. என்னைப் பொறுத்த வரை கண்ணதாசனை அவரது வசன கவிதைகள் மூலமே ஒரு நல்ல கவிஞர் என்று இனங்கண்டு கொள்ள முடிந்தது.

எனது 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்' என்னும் நூலும் வசன கவிதை வகையைச் சார்ந்ததே.

கட்டற்ற கவிதை, வசன கவிதை - இந்த இரண்டையும் தமிழ்க் கவிதையின் உட்பிரிவுகளாக ஏற்கலாம். புதுக் கவிதைக்காரர்கள் எழுதும் கவிதைகளை இப்பிரிவுகளுள் அடக்கலாம். இதைவிட்டுப் 'புதுக்கவிதை' என்று அவர்கள் தனியாக ஒரு பெயர் கொடுக்கும்போது தான் குழப்பம் ஏற்படுகிறது. புதுக்கவிதை என்பது இந்த நூற்றாண்டுக் கவிதை அனைத்தையும் குறிக்கும் பொதுச்சொல். 'சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொற் புதிது' என்று தன் கவிதையின் இயல்பைக் கூறி அதற்கு நவ கவிதை (புதுக் கவிதை) என்று பெயர் சூட்டுகிறான் பாரதி - தான் இந்த நூற்றாண்டுக் கவிதையின் முதல்வன் என்ற முறையில். ஆக புதுக்கவிதை என்பது Modern Poetry என்னும் விரிந்த பொருளில் கவிதை, கட்டற்ற கவிதை, வசன கவிதை ஆகியவற்றையும் உட்கொண்டுள்ளது. எனவே ஒவ்வொரு படைப்பாளியும் தன் படைப்பு எந்த வகையைச் சேர்ந்தது என்பதைத் தெரிந்திருக்க வேண்டும்.

என்னுடைய கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள் எனும் கவிதைத் தொகுதி என் வாழ்க்கை அனுபவத்தின் பிரதிபலிப்பு எனலாம். கல்லூரி மாணவனாக இருந்தபோது எனக்கு நேர்ந்த அனுபவத்தில் மலர்ந்ததுதான் கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள். இதில் காதல்

என்பதை இருந்தாலும் அதை வெறும் மானுடக் காதலாகச் சொல்லாமல் ஓர் ஆன்மீகப் பரிமாணமும் தந்திருக்கிறேன். பெண்ணை வெறும் பெண்ணாக அல்லாமல் ஓர் இலட்சிய சமூக அமைப்பின் - பரிபூரணத்தின் குறியீடாகக் கையாண்டிருக்கிறேன்.

'உலகப்பன் பாட்டைப் படித்துவிட்டு
நிலத்தை மீட்கப் போனேன்
நிலத்தைப் பறிக்கப் போகிறேன்
என்று என்னைக் கைது செய்தார்கள்
'என் புரட்சி வாய்ந்த
மனத்தைப் பறித்துப் போகிறாயே
இந்த நாட்டுச் சட்டம்
உனக்குச் சாதகமாகத் தானே இருக்கிறது.

(கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்)

என்று நிகழ்வின் குறியீடாகவும் கையாண்டிருக்கிறேன்.

சமுதாயத்தின் நோய்க்கிருமிகளைப் பார்க்கிறபோது சங்கடப் படுகிறேன். கோபமும் வருகிறது. ஒரு சுகாதாரமான சமுதாய ஆசைதான் இந்த 'ஊசிகளை' உருவாக்கியது என்னைப் பொறுத்தவரை இலக்கிய உப்பரிகையில் உலாவுவதை விடச் சமுதாய நடை பாதைகளைச் செப்பனிடுவதையே முக்கியமாகக் கருதுகிறேன். 'ஊசிகள்' கவிதை நூல் முழுவதற்கும் 'Epilogue' ஆக இதைச் சேர்த்திருக்கிறேன். அதனால் மற்றவற்றோடு இது Symmetrical ஆக அமைய வேண்டிய அவசியமில்லை.

'தேவ பாஷையில்
தேர்ச்சி மிக்க
சாஸ்திரி ஒருவர்
சபையில் சொன்னார்
ஜாதி வேண்டும்
ஜாதி வேண்டும்
உடனே சீறி
ஒரு தமிழ் மறவர்
ஓங்கிக் கத்தினார்
"ஓய் ஓய், இனிநீர்
ஜாதி வேண்டும்
என்றால் பொறுமையாய்

இருக்க முடியாது என்னால்.........
சரியாய்ச்
சாதி வேண்டும்
என்றே சாற்றும்.......... (ஊசிகள்)

என்று 'தமிழ்ப்பற்று' குறித்து எழுதியிருந்தேன். இதுபோன்று குத்தலாக - வேகம், சுரண்டலாமா, வறுமையே வெளியேறு, மேயர் மகன் தோட்டி மகனுக்குக் கூறியது, சாதாலோ காதல், சிவப்பு நாடா, ஜனநாயக சோஷலிசம் போன்ற பல கவிதைகள் இதில் இடம் பெற்றுள்ளன.

'மூன்றும் ஆறும்' என்ற கவிதைத் தொகுதி பல கவியரங்குகளில் வழங்கிய என்னுடைய கவிதைகளின் தொகுப்பாக வெளியிடப்பட்டது. 'எதிர்காலத் தமிழ்க் கவிதைத் திறனாய்வு நூல் 1985 இல் வெளியிடப்பட்டது.

நான் பணியாற்றிய சிவகங்கை மன்னர் கல்லூரியில் பிரச்சினைகள் உண்டாகிப் போராட்டம் வெடித்தபோது இருமுறை நான் வேலையிலிருந்து நீக்கப்பட்டேன். இதனால் நிரந்தரமாக வேலை போய்விட்டால் என்ன செய்வது என்ற பயம் வந்துவிட்டது. அதனால் நான் விரும்பிய பதிப்புத் துறையை தேர்ந்தெடுத்தேன். அதற்கு அப்துல் ரகுமான் அவர்களும் ஒரு காரணம். 'அபி'யின் 'மௌனத்தின் நாவுகள்' கவிதைகளை வெளியிட விரும்பி சில பதிப்பாளர்களை அணுகியபோது, 'கவிதையா? விற்காதே' என்று அவர்கள் புறக்கணித்ததைக் கண்டு கொதித்துப்போய், 'நாமே பதிப்பித்தால் என்ன?' என்று அப்துல் ரகுமான் அவர்கள் கூறினார்கள். பதிப்பகத்திற்கு 'அன்னம்' என்ற பெயரும் அவர்தான் சூட்டினார். அவரும், நானும் ஆளுக்குக் கொஞ்சம் பணம் போட்டு 'அன்னம்' தொடங்கினோம். 'மௌனத்தின் நாவுகள்' முதல் தொகுப்பாய் வெளிவந்தது. இன்றும் கூட அபியை நான் 'கம்பெனிக் கவிஞர்' என்று வேடிக்கையாய் சொல்வதுண்டு. இப்படி விளையாட்டாய்த் தொடங்கியது வினையாகிவிட்டது. நான் அதிலேயே மூழ்கிப் போனேன். அதனால் எழுத முடியாமல் போய்விட்டது. அதனால் எனக்கு வருத்தம் தான். 'அன்னம்' பொருளாதார வகையில் தோல்விதான் என்றாலும் தரமான புத்தகங்களை அழகாக வெளியிட்டவர்கள் என்ற பாராட்டைப் பெற்றிருப்பது ஆறுதலாக இருக்கிறது.

'அன்னம்' இரண்டு சாதனைகளை நிகழ்த்திக் காட்டியது. ஒன்று, புதுக்கவிதைக்குக் களம் அமைத்துக் கொடுத்தது. 'வானம்பாடி' பத்திரிகையாக இருந்து புதுக்கவிதைக்குப் பரவலான கவனத்தைப் பெற்றுத் தந்தது. 'அன்னம்', பதிப்பகமாக இருந்து அதே பணியைச்

செய்தது. 'கவிதை என்றால் விற்காது' என்ற கருத்தை உடைத்தது. இரண்டு, கரிசல் இலக்கியத்தைப் பிரபலப்படுத்தியது. கி. ராஜநாராயணனின் படைப்புகள் மட்டுமல்லாமல் இன்னும் 5,6 பேர்களுடைய நூல்களை 'அன்னம்' வெளியிட்டது.

அன்னத்திலிருந்து 'அன்னம் விடுதூது' எனும் திங்களிதழ் தொடங்கினோம். இது சிற்றிதழாக இல்லாமல் 'மிடில் மேகஸை'னாகக் கொண்டு வர வேண்டுமென்று நினைத்தேன். ஆசிரியர் கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம்; சிறப்பு ஆசிரியர் ரகுமான்; நான் பதிப்பாசிரியர். முதல் இதழை மட்டும் சென்னையில் மூவரும் கூடிச் சேர்ந்து உருவாக்கினோம். வணிக ரீதியாக எங்களால் வெற்றி பெற முடியாததால் ஓராண்டுக்குப் பிறகு 'அன்னம் விடுதூது' நின்றது. நாங்கள் வியாபாரிகள் அல்லவே. கையைச் சுட்டுக் கொண்டது தான் மிச்சம். ஏஜெண்டுகள் பணம் தராமல் ஏமாற்றி விட்டார்கள். விளம்பரங்களும் பெற முடியவில்லை. அதனால் கையைக் கடிக்க ஆரம்பித்தது. தாங்க முடியாது என்ற நிலை வந்தபோது வேறு வழியின்றி நிறுத்திவிட்டேன்.

கவிஞர், உரையாளர், கல்லூரி ஆசிரியர், பத்திரிகை ஆசிரியர், ஆசிரியர் போராட்டத்தின் பிரதிநிதி, பதிப்பாளர், அச்சக உரிமையாளர் என்று பல பணிகளை மேற்கொண்டு எனக்கான அடையாளங்களை பதிவு செய்திருக்கிறேன். இருந்த போதிலும் நிரந்தமாக நிற்கும்படி ஒரு நல்ல இலக்கியம் படைக்க வேண்டும் என்ற ஆசை இருக்கிறது. வசன கவிதையில் நாடகமாகவோ, காவியமாகவோ ஒரு நூல் எழுதும் எண்ணம் இருக்கிறது. அதிகமாகப் படைக்காமல் போனதை இதன் மூலம் ஈடு செய்ய விரும்புகிறேன்.



# தணிகைச்செல்வன்

நான் என் முதல் கவிதையை எழுதியபோது என் வயது பதின்மூன்று. அது ஒரு திருமண வாழ்த்துக் கவிதை. அந்தக் காலத்தில் அது அசாதாரண திருமணம். திராவிடர் கழகச் சிந்தனை வீச்சு எங்கள் சிற்றூரின் இளைஞர்களையெல்லாம் கவ்விப் பிடித்துக் கருஞ்சட்டைக் காரர்களாக மாற்றியிருந்த அந்த நாளில் ஊர்க்கட்டுப்பாட்டை மீறி, புரோகிதரையும் சடங்குகளையும் புறக்கணித்துக் காஞ்சி கலியாண சுந்தரனார் தலைமையில் நடந்த சுந்தரேசன் - பவுனாம்பாள் திருமணத்தில் என் வாழ்த்துக் கவிதை வேறொருவரால் ஒலிபெருக்கியில் வாசிக்கப் பட்டபோது கிடைத்த கைத்தட்டல்தான் என் கவிதைக்குக் கிடைத்த முதல் அங்கீகாரம்.

எங்கள் சிற்றூர் உறைகாட்டுப்பேட்டை செங்கல்பட்டிலிருந்து ஐந்து கல் தொலைவில் உள்ளது. இடையில் உள்ள பாலாற்றைக் கடந்து (வெள்ளம் வந்தால் படகில்) செங்கல்பட்டு செயிண்ட் கொலம்பஸ் உயர்நிலைப்பள்ளிக்குத் தினமும் நடந்து சென்றே பள்ளி இறுதி வகுப்பு (1951ல்) தேறியவர்கள் எங்கள் ஊரில் இரண்டே பேர். இருவரில் நான் ஒருவன்.

என் பதினான்காவது வயதில் நான் எங்கள் ஊர் நெசவாளர்களின் வறுமையைக் கருவாக வைத்து. வேலையின்மையால் அநாதையாகிப் போன ஒரு சிறுவனைப் பற்றி எழுதிய சிறுகதை. தியாகபூமி என்ற வார இதழில் வெளிவந்தது (பின்னாளில் நான் வாசித்த ரகுநாதனின் பஞ்சும் பசியும் - என்ற கைத்தறியாளர் பட்டினிப் போரைப் படம் பிடித்த சிறந்த நாவல் என்னை வெகுவாகப் பாதித்தது).

என் தமிழாசிரியர் திரு. பஞ்சாட்சரம் (இன்று ஓய்வு பெற்ற நீதிபதி) என் சிறுகதைக்கு அளித்த பாராட்டு என்னை ஏராளமாக எழுதத் தூண்டியது.

சுந்தரேசன் போன்றோருடன் இணைந்து எங்களூர்த் துவக்கப் பள்ளியில் நாங்கள் உருவாக்கிய 'பழைய மாணவர் கழகம்' எங்கள் பேச்சுப் பயிற்சிக்கு மேடையாகவும், அறிவுப்பசிக்கு நூலகமாகவும், இலக்கியச் சிந்தனைகளுக்கு விவாத அரங்காகவும் செயல்பட்டது.

'எது கவிதை' என்று அன்றே நாங்கள் நடத்திய ஒரு விவாத அரங்கில், 'வானத்தின் பாட்டு - நிலா' என்ற காண்டேகர் நாவலில் வரும் வரி ('வெண்முகில்' என்று நினைவு) ஒன்றினைப் படித்துக்காட்டி 'இது கவிதை அல்லவா?' என்று நான் கேட்டதும், 'உரைநடை எப்படிக் கவிதையாகும்?' என்று என் கருத்துக்குப் பலத்த மறுப்பு எழுந்ததும், நான் உணர்ந்ததைத் தெளிவுப்படுத்த முடியாத அந்த வயதில் (16) நான் வாயடங்கிப் போனதும் இன்றும் என் நினைவில் பசுமையாக உள்ளன.

என் கவிதை, சிறுகதை முயற்சிகள், நாடகங்கள் படைப்பதில் விரிவுபெற்றன. திராவிட முன்னேற்றக் கழகத்தின் துணை அமைப்பாக எம்மூரில் உருவான 'இளங்கோ நாடக மன்றம்' நான் கதை வசனம் பாடல்கள் எழுதி இயக்கிய பல நாடகங்களை அரங்கேற்றியது. அறிஞர் அண்ணா தலைமை தாங்குவதாக இருந்த 'பலிபீடம்' என்ற முதல் சரித்திர நாடகம், அவர் வராமையால் மாவட்டச் செயலாளர் கே.டிஎஸ். மணி தலைமையில் நடந்தது. (அண்ணா அவர்கள் முதல்வராக இருந்தபோது மதுராந்தகத்தில் நடந்த இருதுருவங்கள் என்ற என் நாடகத்துக்குத் தலைமை வகித்து எனது தொடக்க கால எதிர்பார்ப்பை நிறைவேற்றிவிட்டார்.)

ஒரு முறை எங்களூர்த் திரை அரங்கில் 'ஊர் சிரிக்கிறது' என்ற என் நாடகம் நடந்து கொண்டிருந்தபோது, எங்கள் பகுதியின் காங்கிரஸ் தலைவர் ஒருவர் (என் நாடகத்தின் மையப் பாத்திரமே அவர்தான்) தூண்டுதலால் தென்னங்கீற்றால் வேய்ந்திருந்த அந்தத் திரையரங்குக்கு வானவெடி வீசித் தீ வைக்கப்பட்டது. நாடகம் முடிகிற நேரத்தில் பற்றிய தீயில் திரையரங்கு முற்றிலும் சாம்பலாகிவிட்டது. நல்லவேளையாக உயிர்ச்சேதமில்லை. அந்தச் சம்பவமும் அது தொடர்பாக நான் சந்தித்த வழக்கும் 21 வயதில் என் இலக்கிய வரலாற்றில் பெற்ற ஆரம்ப விழுப்புண்கள்.

எம் ஊரின் 'கழகக் கொட்டகையில்' (கழக அலுவலகத்தின் இடுகுறிப் பெயர்) கிடைக்கும் 'குடியரசு', 'விடுதலை', 'திராவிடநாடு', 'தமிழ் நிலம்' (அண்ணல் தங்கோ நடத்திய தனித்தமிழ் இதழ்) 'பொன்னி' (முருகு - சுப்பிரமணியனின் இலக்கிய இதழ்) மணிமொழியாரின் 'போர்வாள்' நாவலரின் 'மன்றம்', என்.வி. நடராசனின் 'திராவிடன்', கலைஞரின் 'முரசொலி', கவிஞரின் 'தென்றல்', ஆசைத் தம்பியின் 'தனியரசு', மதியழகனின் 'இனமுழக்கம்' சி.பி. சிற்றரசு வெளியீடுகள், புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் 'குயில்', பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையாரின் 'விருந்து' ஆகிய அனைத்தையும் வரிவிடாமல் படிப்பதும், அவற்றில் அடிக்கடி வெளியாகும் கவிதைகளை, குறிப்பாகக் 'குயில்' தரும்

கவிதைகளை ஆழ்ந்து உள்வாங்கிக் கொள்வதும் என் தினசரிக் கடமைகளாகும்.

ஆர்வமிகுதியால் 'நிலா' என்ற கையெழுத்துப் பத்திரிக்கையை என் வகுப்புத் தோழனுடன் சேர்ந்து எழுதிச் சுற்றுக்கு விட்ட நிகழ்ச்சி நான் பத்தாம் வகுப்பு படிக்கையில் நடந்தது. அந்த ஆண்டோடு அந்த இதழ் இறந்துவிட்டது. செங்கல்பட்டிலிருந்த நூலகங்களும் அவற்றின் நூலகர்களும் தந்த ஆதரவால் விடுமுறை நாட்கள் தவிர மற்றெல்லா நாட்களும் எனது இருப்பிடம் நூலகமாயிற்று. சங்க இலக்கியங்களால் தமிழறிவும் நவீன இலக்கியங்களால் படைப்பறிவும் பெறும் வாய்ப்பாக அந்நாட்கள் எனக்கமைந்தன.

1958 ஜனவரி ஆறாம் நாள்! தந்தை பெரியாரை மற்றும் தமிழ்நாட்டுத் தலைவர்களை முட்டாள்கள் என்று தூற்றியமைக்காகப் பிரதமர் பண்டித் நேருவுக்குக் கருப்புக் கொடி காட்டி எதிர்ப்புத் தெரிவிக்க தி.மு.க. தேர்ந்தெடுத்த நாள். அன்றைய தினம் சென்னை வந்த பிரதமருக்குக் கருப்புக் கொடி காட்டியவர்களில் நானும் ஒருவன் என்று குற்றஞ்சாட்டி வழக்கு தொடர்ந்து என்னை அரசுப் பணியிலிருந்து நீக்கியது அன்றைய காங்கிரஸ் ஆட்சி. பணி நீக்கம் என் படைப்பு ஊக்கத்தை மிகுதியாக்கும் தூண்டுகோலாயிற்று.

கவிஞரின் 'தென்றல்' மற்றும் 'கண்ணதாசன்' இதழ்கள், கலைஞரின் 'முரசொலி', பழ. நெடுமாறனின் இலக்கிய இதழ் 'குறிஞ்சி', ஜீவாவின் 'தாமரை', அரு. ராமநாதனின் 'காதல்', என அந்தக் காலக்கட்டத்தில் வெளியான பல இதழ்களில் கவிதைகளும் சிறுகதைகளும் எழுதினேன்.

என் கவிதைகளைப் படித்து ஊக்குவிக்கும் சிந்தனையாளர் குழு ஒன்று இலக்கிய வட்டம்போல் செயல்பட்டது. சுந்தரேசன், சோலை, சண்முகம், சின்ன அண்ணாமலை, பெரிய அண்ணாமலை, கு.மு. இளங்கோ, துரை, மகாதேவன், போடி பாண்டியன் (திருமணத்துக்குப் பிறகு போடிக்கே சென்றுவிட்டார்) ஆகியோர் அடங்கிய அந்தக்குழு நள்ளிரவு வரை ஈஸ்வரன் கோயில் கோபுர வாசலிலோ, குளக்கரையின் மதிற்சுவரிலோ அமர்ந்து அரசியல், இலக்கியம் அனைத்தையும் விவாதிக்கும்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் முதல்தொகுப்புக் கவிதை நூல்தான் என் பதின்பருவத்தில் என்னை ஆழமாகப் பாதித்த முதல் கவிதை இலக்கியம். அந்த முழு நூலும் மனப்பாடம் ஆகும் அளவுக்கு

அவர் கவிதைகளில் நான் கரைந்துபோனேன். அடுத்து அறிமுகமான மகாகவிபாரதி என் சிந்தனையில் புதிய சாளரங்களைத் திறந்தவன்.

பெரியார் சிங்காரவேலர், அண்ணா, அம்பேத்கர், கலைஞர், காண்டேகர், புதுமைப்பித்தன், மு.வ., தாகூர், சரச்சந்திரர், தகழி, ஷெல்லி, பெர்னாட்ஷா, டால்ஸ்டாய், கார்க்கி, செகாவ் ஆகியோரின் படைப்புகளால் உண்டுபடுத்தப்பட்டிருந்த என் சமூகப் பார்வை, பொதுவுடைமைக் கட்சியின் தலைசிறந்த எழுத்தாளரும், மாபெருந் தியாகியுமான தோழர் மாயாண்டி பாரதியின் நெருங்கிய நட்பால் மேலும் விரிவடைந்தது. மார்க்சியப் பார்வைக்கும் மாயாண்டியார் நட்புக்கும் வித்திட்ட மூலவன் இராயப்பேட்டைத் தோழர் சி.கே. சிவசங்கரன் ஆவார். இந்தத் தோழர்களால் ஏற்பட்ட தாக்கம் மார்க்சிய நூல்களைத் தேடிப் படிக்கும் ஆர்வமாகப் பரிணமித்தது.

இந்த ஆர்வத்துக்கான அடித்தளத்தைத் திராவிடர் இயக்கம் ஐம்பதுகளிலேயே என்னுள் ஊன்றிவிட்டது. மேதினம், காரல்மாக்ஸ், ஏங்கல்ஸ், லெனின், ஸ்டாலின், மா-சே-துங், சன்யாட்சென், சீனப்புரட்சி, ரஷ்யப்புரட்சி, இங்கர்சால், வால்டேர், ரூசோ - ஆகிய பல்வேறு தலைப்புகளில் சிங்காரவேலரும், பெரியாரும் அண்ணாவும், குத்தூசி குருசாமியாரும் திராவிட இயக்க ஏடுகளில் எழுதிய கட்டுரைகளும், தூக்கிலிடப்பட்ட கம்யூனிஸ்ட்டுகள், சேலம் - கடலூர்ச் சிறைகளில் சுடப்பட்ட பொதுவுடைமைவாதிகள் ஆகியோர் குறித்து கலைஞர் ஆற்றிய உணர்ச்சிமிக்க சொற்பொழிவுகளின் வெளியீடுகளும், கம்யூனிஸ்ட்டுகள் பற்றியே அறிந்திராத என் போன்றோரிடம் அக்கட்சியின் வரலாற்றையும் தலைவர்களின் துணிவாற்றலையும் அறிமுகப்படுத்தின.

அறுபதுகளின் துவக்கத்தில் தமிழ் உணர்வும் பொதுவுடைமை வேட்கையும் இணைந்த ஒரு புதுக் கவிஞனாகப் பரிணாமம் பெற்றேன். இந்தியா முழுமையும் உழவர்களும் உழைப்பாளர்களும் சுரண்டப்படுவது ஒரு பெருங்கொடுமை. இந்தக் கொடுமையை எதிர்க்கும் பொதுவுடைமை இயக்கம்தான் இந்திய மக்களின் விடிவுக்கு வழிகாட்டி - என்று இந்தியப் புரட்சியை நோக்கி என் திசையைத் திருப்பிய காலம் அது.

நூபுர மாதர்கள் ஆடிடும் கோயிலில்
நூலிழை மார்பினர் தயவில்,
ஆபரணங்கள் அணிந்தகற் சிலையில்
ஆலய தீபச் சுடரில்,

சோபிதம் கண்டால் சொர்க்கமுண்டாம் எனத்
தோழர்களே மயங்காதீர்

என்று தென்றலில் பார்ப்பனீயத்தையும் ஆத்திகத்தையும் சாடி எழுதிய நான்,

சரித்திரம் சுழலும்போதும்
சமுத்திரம் குமுறும்போதும்
பொறுத்தவள் பொங்கும்போதும்
புயல்மழை சீறும்போதும்
பறித்தவள் ஆதிக்கத்தைப்
பசித்தவன் எதிர்க்கும்போதும்
மறித்தவன் வென்றதில்லை
மறுப்பவன் நின்றதில்லை

என்று தீக்கதிருக்கு எழுதலானேன்.

தமிழிலக்கிய வரலாற்றில் எழுபதுகள் முழுமையும் மிகத் தீவிர கவிதை இயக்கமாக இருந்தது. வானம்பாடி மூலம் புதுக்கவிதை இயக்கம் வேர்பிடித்தது. அதன் மறுபக்கம் பொதுவுடைமைச் சிந்தனை என்ற புதுவரவு தமிழ்க் கவிதையில் தலை எடுத்தது. திராவிடச் சார்பு, மார்க்சிய சார்பு என்று இரு சார்புகளால் வசீகரிக்கப்பட்ட எழுபதுகளின் பத்தாண்டுகளும் தமிழில் புத்தாண்டுகளாகவே இருந்தன.

ஜனநாயக இயக்கங்கள் / பேச்சுகள் / எழுத்துகள் முற்றாக தடை செய்யப்பட்டிருந்த அவசர நிலைக் காலத்தில் இலக்கியக் கூட்டங்கள் மட்டும் நடத்த அனுமதிக்கப்பட்டிருந்த சிறுவாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு இலக்கிய மேடைகளையே எமர்ஜென்சியை எதிர்க்கும் போர்க்களங்களாக மாற்றுவது என்ற உத்திக்குத் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் மிகச் சரியான அமைப்பாகச் செயல்பட்டது.

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தை மதுரையில் தொடக்கிய 16 பேரில் நானும் ஒருவன். அவசர நிலைப் பிரகடனத்தின்போது 1975ல் தமுக்கம் அரங்கில் நடந்த அதன் முதல் மாநாட்டுக் கவியரங்கின் தலைமை ஏற்று இறுதியில் இருபது நிமிடங்கள் நான் நிகழ்த்திய கவிதை வீச்சு பெருத்த ஆரவாரத்துக்கிடையே முடிந்தபோது, மேடைக்குப் பின்னால் என்னை அழைத்து மார்க்சிஸ்ட் தலைவர் தோழர் ஏ. பாலசுப்பிரமணியன் கூறினார், 'தணிகை! எச்சரிக்கையா இருங்க. ஊருக்குப் போவதற்குள் நீங்கள் கைதாகலாம்.' என்று கூறினார்.

அதே போல் கைது நடந்தது. நான் என்று நினைத்துக் காவல்துறை வேறொரு தோழரை (டாக்டர் திம்மையா) கருங்குழியில் கைது செய்ததும் அவருக்குக் கவிதை எழுதவராது என்று தெரிந்தபின் வெறுத்துப்போய் விடுவித்ததும் தனிக்கதை.

அவசரநிலை அமுலில் இருந்த அந்த இருபது மாதக்காலத்தில் தமிழகமெங்கும் நான் பங்கேற்ற இலக்கியக் கூட்டங்கள் - சரியாகச் சொன்னால் எமர்ஜென்சி எதிர்ப்புக் கூட்டங்கள் - எண்ணிக்கை 217 ஆகும். 'கோழியே வாழிய' என்ற என் கவிதை செம்மலரில் வெளிவரக் கூடாது என்று அரசால் சென்சார் செய்யப்பட்டபோது அதே கவிதை தோழர் செந்தில்நாதனின் 'சிகரம்' இதழில் வெளிவந்து சாகசம் நிகழ்த்தியது.

கோழியே
வானத்தைப் பார் நிமிர்ந்து
வல்லூறுப் பறவை ஒன்று
பூனைப் போல் கூர்ந்த கண்கள்
புலிநகம் இவற்றால் சின்னச்
சேனையாம் உனது குஞ்சுச்
சிமிழ்களை விழுங்கப் பார்க்கும்
------------------------------

உறவுகள் நமக்குள் ஒன்று!
உயிர்களைக் காக்கும் போரில்
சிறகுகள் பறிபோனாலும்
சீறுவாய் கோழி! வாழி!
------------------------

போராடிப் பெற்றவற்றைப்
போராடி மீட்க வேண்டும்;
போராடி மீட்டவற்றைப்
போராடிக் காக்க வேண்டும்
போராடும் வழியை விட்டால்
புதுவாழ்வு என்பதற்கு
வேறென்ன வழி உனக்கு
விடியலைக் காண்பதற்கு?

என்ற கேள்வியோடு அந்தக் கவிதை முடியும்.

சமூக சேவகி சேரிக்கு வந்தாள் என்ற என் கவிதைத் தொகுப்பில் 'கோழியே வாழிய' கவிதையைச் சேர்த்ததுடன். ஒரு அடிக் குறிப்பும் சேர்த்தேன். நெருக்கடி நிலைக் காலத்தில் பிரசுரிக்க அரசு தடை செய்த

இந்தக் கவிதையில் வெடிகுண்டு எங்கே இருக்கிறது என்று நீங்களும் தேடிப் பாருங்களேன் - என்பதே அந்த அடிக்குறிப்பு.

அவசரநிலை திரும்பப் பெறப்பட்ட பிறகு, என் கவிதைக் களப்போர், வேறு பல தளங்களுக்கும் விரிவடைந்தது. ஜனநாயக வாலிபர் சங்கம், ஜனநாயக மாதர் சங்கம், இந்திய மாணவர் சங்கம், ஆசிரியர் - கூட்டணி, அரசு ஊழியர் சங்கம், விவசாயிகள் சங்கம், மின் தொழிலாளர், போக்குவரத்துத் தொழிலாளர், பஞ்சாலைத் தொழிலாளர், கைநெசவுத் தொழிலாளர், மற்றும் இந்தியத் தொழிற்சங்க மையத்தின் அனைத்துப் பகுதித் தொழிலாளர் நடத்திய பேரவைகள், மாநாடுகள், பொதுக் கூட்டங்கள் - ஆகியவற்றில் 1975 முதல் 1985 வரை - பத்தாண்டுக் காலம் நான் பங்கேற்காத மேடைகள் மிகக் குறைவே.

அப்போதெல்லாம் கவியரங்குகளில் நான் பாடியதைக் காட்டிலும், மக்கள் திரள் மத்தியில் சிறப்புக் கவிதை அல்லது கவிதை வீச்சு அல்லது கவிதை உரை என்ற பெயரால் நான் மட்டுமே 'உரையிடையிட்ட கவிதை' என்ற ஒரு கலப்பு வடிவத்தில் வழங்கிய நிகழ்ச்சிகளே ஏராளம். கோவை மாவட்டத்தில் எழுபதுகளின் துவக்கத்தில் தொடங்கி வேகமான வளர்ச்சியைப் பெற்ற சோஷலிச வாலிபர் முன்னணி (பின்னாளில் உருவான ஜனநாயக வாலிபர் சங்கத்தின் முன்னோடி) என்ற அமைப்பின் எல்லாப் பேரவைகளிலும் என் கவிதை உரை கட்டாயம் இருக்கும். இந்து ராம், மைதிலி சிவராமன், நான் - இந்த மூவர் அணி அநேகமாகக் கோவை மாவட்ட நிகழ்ச்சிகள் அனைத்திலும் இடம் பெற்றிருக்கும். நுழைவுக் கட்டணம் வசூலித்து என் கவிதை உரை நிகழ்ச்சி நடத்தப்பட்ட கூட்டங்களும் கோவைப் பகுதியில் நடந்ததுண்டு. இவற்றுக்கெல்லாம் மூலசக்தியாக இருந்தவர் தோழர் கே. ரமணி.

அடித்தளச் சமூகப் பிரிவுகளைச் சேர்ந்த தமிழ் மக்கள் மத்தியில் என் கவிதைகளை உரசிப் பார்த்தே அவற்றின் சமூகப் பயன்பாட்டை நான் சோதித்திருக்கிறேன். என் கவிதை உரைகளின் முத்தாய்ப்பாக நான் முடிக்கும் வரிகள் இவை:

அமைதியின் பேரால் இன்னும்
எத்தனை ஆண்டுக் காலம்
இமை மூடிக் கிடக்க வேண்டும்?
எண்ணினேன்; எண்ணும்போதே
குமுறினேன்; கொந்தளித்தேன்
கொடுங்கோலின் பிடியை மீறத்
திமிறினேன்; இதனை வீழ்த்தத்
திறனில்லா வரை நமக்குத்

தமிழும் ஏன்? இலக்கியம் ஏன்?
சரித்திரப் பெருமைகள் ஏன்?

நொடிக்கொரு சட்டமிட்டு
நொறுக்கிடும் ஆதிக்கத்தின்
கொடிக்கு இங்கே நாட்டை ஆளும்
கொற்றம் ஏன்? கோட்டைகள் ஏன்?
அடித்திடச் சீறுகின்ற
ஆற்றலர் வர்க்கமே, நீ
வெடித்திடும் முழக்கம் எங்கே?
வெறி எங்கே? தூங்கும்போதும்
துடித்திடும் தோள்கள் எங்கே?
துரோகத்தைத் தூள் படுத்திப்
பொடித்திடும் தடக்கை எங்கே?
போர் எங்கே? என்று சேனை
நடத்திடும் தாள்கள் எங்கே
நரம்பெங்கே? நாளமெங்கே?

அறுத்தெறி தளையை! இந்த
அடிமைச் சங்கிலியைத் தூளாய்
உடைத்திட வா! வா! என்று என்
உதிரமே கொப்பளிக்க
அழைக்கிறேன் தோழா! உன்னை
அணைக்கிறேன் வாராய்! வாராய்!

என்று உணர்ச்சியின் உச்சஸ்தாயியில் முடிக்கிறபோது அரங்கமே பல நிமிடங்களுக்கு ஆர்ப்பரிக்கும் ஒவ்வொரு நெஞ்சும் தீப்பொறி ஏந்தியபடி ஊர்திரும்புவதைக் காணும்போது என் கவிதை பிறந்ததன் பயனை அடைந்ததாக நான் கருதியதில் தவறுண்டா?

மக்களுக்காக எழுதுகிறேன் என்று கூறி புத்தகங்களில் சிறைபட்டுப் போன அறிவு ஜீவிக் கவிதைகளும், அலங்காரக் கவிதைகளும் ஆற்றிய பணியை விட, ஆயிரக்கணக்கிலும், லட்சக்கணக்கிலும் குவிந்த எளிய மக்களின் கூட்டங்களில் அவர்களை எழுச்சியுறச் செய்த என் கவிதைகளில் அலங்காரமோ அறிவுஜீவித்தனமோ குறைவுதான். ஆனால் அவற்றில் அறச்சீற்றம் இருந்தது. அடிப்படை மாற்றத்தைக் கோரிய அடித்தளக் கோபம் இருந்தது.

மக்களுக்கு எட்டாத உயரத்தில் உள்ள நட்சத்திர விடுதி உணவாக இல்லாமல், அவர்கள் குடிக்கும் கஞ்சியின் உப்பாக என் கவிதை இருந்தது.

புதுக்கவிதையா - மரபுக் கவிதையா என்று அடித்துக் கொண்டவர்களுக்கு இடையே நின்று நான் கூறினேன். இரண்டுமே மக்களிடம் போய்ச் சேர்கிறதா என்று கவனியுங்கள். அது ஒன்றுதான் நீங்கள் கவிஞன் என்பதற்கு சாட்சி.

மரபு - புதுசு -
இரண்டிலும் கனி உண்டு;
இரண்டிலும் சருகு உண்டு.
சருகுகளை மிதித்துச் சென்று
கனிகளைப் பறித்தெடுப்போம்
சருகுகளைக் காற்று
பெருக்கித் தள்ளிவிடும்
காலக் காற்று.

என்ற என் கவிதை வரிகளை இங்கே சிலம்பொலியார் எடுத்துக் காட்டினார். இந்த சர்ச்சையில் சிக்காமல் அவர் என் கருத்தோடு இணங்கி நிற்பது எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது.

தணிகையின் கவிதைகள் கோஷங்களாக இருக்கின்றன என்ற விமர்சனங்களுக்கு மத்தியில் நான் கோஷங்களைக் கவிதையாக்கிக் கொண்டிருந்தேன். பல்லாயிரக்கணக்கில் மக்கள் பங்கேற்கும் ஊர்வலங்களில் 'ஜிந்தாபாத்' கோஷம் மட்டுமே முழங்கிக் கொண்டிருந்த நிலைமை எழுபதுகளில் மாறியதில் என் பங்கு கணிசமானது. இன்றும் கூடத் தொழிற்சங்க இயக்கங்கள் அந்த முழக்கங்களை மறக்கவில்லை - என்பதொன்றே நானும் என் கவிதையும் அவர்கள் வியர்வையின் பகுதியாகிவிட்டோம் என்ற பெருமிதத்தைத் தருகிறது.

சிக்காகோவின் வீதியிலே
சிந்திய தோழர்கள் குருதியிலே
நனைந்து வந்த செம்மலரே.
நிமிர்ந்து நிற்கும் செங்கொடியே,
வீர வணக்கம்! வீர வணக்கம்!

என்று அன்று நான் எழுதிய முழக்கத்துடன் துவங்கும் தொழிலாளர் போராட்டங்களை ஊர்வலங்களை - தர்ணாக்களை இன்றும் காணலாம். பிரச்சினைகளைக் கவிமுழக்கங்களாக்கி ஊர்வலத் தோழர்களுக்கு உரமூட்டிய வரிகளைத் தொகுத்தால் அது ஒரு பெரிய நூலாகும்.

கணவனைப் பறித்ததாலே
கண்ணகி சீற்றம் நியாயம்;
துணியினைப் பறித்ததாலே

திரௌபதி சபதம் நியாயம்;
மனைவியை இழந்ததாலே
ராமனின் யுத்தம் நியாயம்
அனைத்தையும் இழந்த எங்கள்
ஆவேசம் நியாயம்! நியாயம்!

என்ற எனது வரிகளைக் கோவையிலும், மதுரையிலும், சென்னையிலும், வேறு பல சிற்றூர் - பேரூர்களிலும் சுவர்களில் எழுதிவைத்து ஜனநாயக இயக்கத்துக்கு அவற்றைப் பரப்பியபோது - அந்தப் பகுதிகளில் பயணம் செய்கையில் நானே அந்த வரிகளைப் படிக்க நேர்ந்தபோது - அவற்றை எழுதிய முகந்தெரியாத அந்தப் போராளிகளை எண்ணி நான் நெகிழ்ந்திருக்கிறேன்.

செப்புச் சுரங்கங்களுக்கு உள்ளேயே சென்று சுரங்கத் தொழிலாளர்களுக்காகக் கவிதை வாசித்த பாப்லோ நெருடாவால் பெருமளவு பாதிக்கப்பட்ட நான், அவர் பாதையில் நடக்க முயன்றதன் அடையாளமாகக் களப்பணியில் கவிதையைச் செயல்படுத்தும் நெடும்போரில், அதை ஆயுதமாக ஏந்த வைப்பதில் நான் ஊசி முனை அளவேனும் இங்கு வெற்றி பெற்றிருந்தால் அந்த விருதைவிட வேறு எந்த விருது என் கவிதையைக் கவுரவப்படுத்த முடியும்?

இதுவரை என் கவிதைத் தொகுப்புகள் எட்டும், கட்டுரை நூல்கள் இரண்டும் வெளிவந்துள்ளன. தொகுக்கப்படாத கவிதைகள் நிறைய கைவசமுள்ளன. அவை தவிர கவியரங்குகள் - தனிமேடைகள் இவற்றுக்காக எழுதப்பட்டவை, 5000 பக்கங்களாவது தேறும்.

பாட்டுத்தான் ராகத்தின் தாய்;
பாவம்தான் பரதத்தின் தாய்;
ஊற்றுதான் நதிகளின் தாய்;
உழைப்புதான் உலகத்தின் தாய்;
நேற்றுதான் இன்றையின் தாய்;
மாற்றமே புதுமையின் தாய்;
வறுமைதான் புரட்சியின் தாய்!

'நாங்கள் அரி(பகவான்)ஜனங்களாம்' என்ற தலைப்பில் தலித்துகளின் மீது கடந்த பாலியல் தாக்குதல் முதல் பல்வேறு தாக்குதல்களையும் பட்டியலிட்டு மாநில வாரியாக இந்தியாவில் நடந்த அடக்குமுறைகளைக் கவிதையாக்கியிருந்தேன். செம்மலரில் அந்த நெடுங்கவிதை பிரசுரமானதும் கோலார் சுரங்கத் தொழிலாளர்கள் அதை அச்சிட்டு ஆயிரக்கணக்கில் அங்கே விநியோகித்தார்கள் (மார்க்சிஸ்ட்

கட்சியும் அதைத் தனிப் பிரசுரமாக வெளியிட்டது). கம்யூனிஸ்ட் இயக்க வரலாற்றிலேயே ஒரு கவிதைச் சிற்றேட்டைக் கட்சி வெளியீடாகக் கொண்டு வந்தது. 'நாங்கள் அரி(பகவான்)ஜனங்களாம்' கவிதையைத்தான். 1978ல் மார்க்சிஸ்ட் கட்சியின் மாநில மாநாட்டின் துவக்க நிகழ்ச்சியில் பொதுவுடைமை இயக்கத் தியாகிகளாகப் போன வரலாற்று நாயகர்களை வரிசைப்படுத்தி நான் வாசித்த உருக்கமான கவிதை. தோழர் ராமமூர்த்தியின் கண்களிலும் கண்ணீரை வரவழைத்தது என்பதோடு மறுநாளே அந்தக் கவிதை சிறுநூல் வடிவில் மாநாட்டில் விநியோகப்பட்டது. என்பது அக்கட்சி எனக்களித்த உயர்ந்தபட்ச அங்கீகாரம். என்னால் இயக்கம் பெற்ற எளிய உபகாரம்.

நாகர்கோயிலிலிருந்து சென்னை வரை பல கல்லூரிகளில் நான் கவிதை பாடியிருந்தாலும், 'ஒரு துண்டு இந்தியாவும் நானும்' மதுரைப் பல்கலைக் கழகத்தில் பாடமாக வைக்கப்பட்டதால் தமிழ் இலக்கியம் பயின்ற மாணவர்கள் பலர் முனைவர் பட்டத்துக்காக என் கவிதைகளை ஆய்வு செய்ய என்னை அணுகினார்கள். முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் தம் முனைவர் பட்ட ஆய்வுக்காக என் கவிதைகளைப் பயன்படுத்தியதாகக் கூறுவதுடன் சந்திக்கும்போதெல்லாம் என் கவிதை வரிகளையும் நினைவாற்றலோடு சொல்லி மகிழ்வதுண்டு.

1983.

சிங்களப் பேரின வாத அரசின் அடக்குமுறைக்கு ஆளான ஆயிரக்கணக்கான ஈழத்தமிழர்கள் குண்டுகளால் உடல் சிதறிக் கிழிபட்ட நிலையில் தெருவோரங்களில் அழுகி நாறியதும், இலட்சக்கணக்கான தமிழர்கள் வீடிழந்து புலம்பெயர்ந்து கடல் மரணங்களை மீறித் தப்பித் தாய்த் தமிழகத்துக்கு அகதிகளாக வந்ததும், இங்குள்ள தமிழர்கள் நெஞ்சில் ஜெயவர்த்தனா மீது சீற்றப்புயலை எழுப்பிய காலம் அது.

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் சென்னை - செங்கைப் பொறுப்பாளர்கள் என்ற முறையில் தோழர் செந்தில்நாதனும் நானும், இதர தோழர்களுடன் கலந்துபேசி, சென்னையில் இலங்கை அரசின் சிங்கள இனவெறிப்போக்கை எதிர்த்து ஒரு கண்டனக் கூட்டம் நடத்த முடிவெடுத்தோம். முடிவைப் பொதுச் செயலாளர் தோழர் முத்தையா அவர்களுக்குத் தெரிவித்தோம்.

அந்தக் கூட்டம் நடைபெறக் கூடாது என்று பொதுச் செயலாளர் வாயிலாகக் கட்சிமேலிடம் எமக்கு உத்தரவிட்டது. இது குறித்துத் தலைமை கூறிய விளக்கம், ஈழச் சிக்கல் என்பது இலங்கையின் உள்நாட்டுப் பிரச்சினை. அந்நியர்கள் அதில் தலையிட உரிமை இல்லை - என்பதுதான்.

இதே அளவுகோலை பாலஸ்தீனத்துக்கும், பங்களாதேசத்துக்கும் கட்சி கைக்கொள்ளாதது ஏன்? என்ற எம் கேள்விக்கு இன்று வரை விடை இல்லை.

இலங்கையில் மட்டுமல்ல. இந்தியாவிலும் தேசிய இனப்பிரச்னை மார்க்சிய-லெனினிய வெளிச்சத்தில் மறு ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டும் என்று கோருவதற்காகக் கூடிய முற்போக்கு எழுத்தாளர் சங்க முன்னோடிகள் பலர் வெளியேற்றப்பட்டார்கள். அதில் முக்கியமானவர்கள் நான், கவிஞர் மணியரசன், எழுத்தாளர் அஸ்வகோஷ், (ராஜேந்திர சோழன்), புலவர் கி.த. பச்சையப்பன், நெய்வேலி பாலு, சிதம்பரம் பழனி, முனைவர் வேணுகோபால், கவிஞர் கந்தர்வன் இன்னும் பலர்.

தமிழ்த் தேசிய இனத்தின் தன்னுரிமைப் போர் என்பதுதான் (Right to self-determination) இந்த மண்ணுக்கான மார்க்சியம். இனப் புரட்சியின் வழியில்தான் இந்தியப் புரட்சி சாத்தியமாகும். இந்தியச் சிறையிலிருந்து தேசிய இனங்கள் விடுதலை பெறுவதுதான், இந்த நாட்டின் இரண்டாவது சுதந்திரப்போர். ஜனநாயகப் புரட்சியின் இன்றைய உள்ளடக்கம் தன்னுரிமைப் போருக்கு முன்னுரிமை தருவதுதான் - என்று நாங்கள் முன்மொழிந்த திட்டத்தை ஏற்றுக் கொண்டவர்கள் தோழர் மணியரசன் தலைமையில் புதிய அமைப்பைக் கண்டார்கள். தமிழ் தேசப் பொதுவுடைமைக் கட்சி மலர்ந்தது.

ராஜேந்திர சோழன், நான் - தமிழ்க் கலை இலக்கியப் பேரவைக்குப் பொறுப்பேற்றோம். 'தமிழர் கண்ணோட்டம்' மாத இதழ் வெளி வரத் துவங்கியது. எனது புதுப் படைப்புகளை அது வெளியிடுகிறது.

மணியரசன் நூல்களும், ராஜேந்திர சோழன் படைப்புகளும், எனது கவித் தொகுப்புகளும் வந்து கொண்டிருக்கின்றன. இளைஞர்கள், மாணவர்கள், உழவர்கள், தொழிலாளர்கள், மகளிர், வணிகர்கள், கலைஞர்கள், கவிஞர்கள், எழுத்தாளர்கள், பத்திரிக்கையாளர்கள் ஆகியோர் மத்தியில் களப்பணியில் என் கவிதையின் செயல்பாடு முன்னேறி இருக்கிறது.

சின்னத் திரைக்கான குறும்படங்கள், இனப்புரட்சிக்கான ஒலிப் பேழைகள் - ஆகியவற்றைத் தயாரித்துள்ளேன். முனைவர் கே. ஏ. குணசேகரன் பாடியுள்ள நாங்கள் அரி(பகவான்)ஜனங்களாம் என்ற என் பாடல் தலித் தமிழர்கள் மத்தியில் நல்ல பாதிப்பை உருவாக்கியிருக்கிறது என்று தோழர் குணசேகரன் கூறுவதுண்டு.

வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைக் கூட சமூக அக்கறையோடு அணுகினால் சரியான வகையில் பயன்படுத்த முடியும் என்று காட்டியிருக்கிறேன்.

நான் தலைமையேற்ற அல்லது பங்கேற்ற கவியரங்குகள் எத்தனை என்ற கணக்கு என்னிடம் இல்லை. ஆனால் சில கவியரங்குகள் நினைவு கூரத்தக்கன.

பாவலரேறு பெருஞ்சித்திரனார் தலைமையில் மதுரை தியாகராசர் பொறியியற் கல்லூரியில் நான் பாடிய கவிதை - சிவகங்கையில் கவிஞர் மீரா நடத்திய பாரதி நூற்றாண்டு விழாக் கவியரங்கில் கலைஞர் முன்னிலையில் பாடிய கவிதை (இறுதியில் கலைஞர் ஆற்றிய சொற்பொழிவில் என்னை மேற்கோள்காட்டிப் பாராட்டியதை நான் மறப்பதற்கில்லை. அவரது உரை முரசொலியிலும் வந்தது).

கவிஞர் கண்ணதாசன் தலைமையில் சேலத்தில் பாடிய, கவிதை ஆகியவை குறிப்பிடத்தக்கவை. 'தலைவர் வணக்கம்' பாடியபோது கவிஞர் கண்ணதாசன் அவர்களை விமர்சனத்தோடு வணங்கிய அந்தக் கவிதையை அவர் மிகவும் ரசித்தார்.

'நாளுக்கோர் தலைமை மாறும்;
நடைமாறும்; நடக்கும்போதே
தோளுக்குத் துணைகள் மாறும்;
தொழில் மாறும்; எனினும் கவிதைப்
பாலுக்குச் சுவை மாறாமல்
பழந்தமிழ் மாறாது எழுதுங்
கோலுக்குத் தலைவா!
இந்தக் கூட்டத்தின் தலைவா! வணக்கம்.'

என்பதே அந்தக் கவிதை.

நெருக்கடி நிலை நாட்களில் குமுதத்தில் அவர் வாரந்தோறும் எழுதிய அரசியல் கவிதைகளுக்கெல்லாம் 'செம்மலரில்' சுடச்சுட நான் எதிர்க் கவிதைகள் எழுதியதைப் படித்திருந்தாலும், அந்தக் கடுமையான விமர்சனங்களுக்கு முகங்கோணாமல் நேரில் சந்திக்கும்போது அவற்றை மறந்து பண்போடு பழகிய பெருங்கவிஞர் அவர்.

எல்லா அரங்குகளிலும் ஒரு கவிப்போராளியாகவே நான் செயல்பட்டேன். திரைப்படத் துறையும் அதில் அடக்கம். என் பதினேழாம் வயதில் நான் எழுதிய 'பலிபீடம்' நாடகத்தை ஏ.வி.எம். நிறுவனத்துக்கு அனுப்பி, பதில் வராததால் நேரில் சென்று கதை இலாகாவில்,

திரு. வலம்புரி சோமநாதனைச் சந்தித்து. 'சரித்திரக் கதைகள் இப்போது தேவையில்லை' என்ற பதிலையும் பலிபீடத்தையும் பெற்றுக் கொண்டு ஊர் திரும்பியதோடு என் ஆரம்பகால திரைக் கவர்ச்சி அணைந்து போயிற்று.

ஆனால் 1980ல் தோழர் கு. சின்னப்ப பாரதி எழுதி, 'அன்னக்கிளி' செல்வராஜ் இயக்கி. இளையராஜா இசை அமைத்த 'புதிய அடிமைகள்' என்ற படத்திற்குப் பாட்டெழுத அழைக்கப்பட்ட போது, அழைப்பை ஏற்று சென்னை சென்றேன். எல்டாம்ஸ் விடுதியில் என்னுடன் அன்றைய பிரபலத் திரைப்பாடலாசிரியர் ஒருவரும் தங்க வைக்கப்பட்டார். தத்தகார ஓசையில் இருந்த பாட்டின் மெட்டு அடங்கிய ஒலி நாடா தரப்பட்டது. ஒலி நாடாவை இயக்கி மெட்டின் ஓசைக்கேற்ப வார்த்தைகளையும் வரிகளையும் நிரப்பவேண்டியது என் வேலை.

கொல்லி மலை கிராமத்துப் பெண் ஒருத்தி பட்டாளத்திலிருந்து ஊர் திரும்பும் தன் காதலனின் வரவை எதிர்நோக்கிப் பாடுகிறாள். பாட்டுக்குத் தரப்பட்ட சூழல் இது.

கொல்லி மலையில் ஏலம் விளைவதை நான் அறிவேன். ஏலப்பூ, பூப்பது ஒரு இளம்பெண்ணின் எதிர்பார்ப்பு. பூப்பதற்குக் குறியீடாக இருக்கும் என்று கருதி என் பல்லவி வரிகளை இப்படி அமைத்தேன்.

ஏலப்பூச் சரம் பூக்குதே
ஏழைப்பூ எதிர்பார்க்குதே

பாடல் எழுத அதிக நேரம் பிடிக்கவில்லை. நான் எழுதி முடித்துவிட்டேன் என்று தெரிந்ததும். அந்தப் பிரபலப் பாடலாசிரியர் அதை வாங்கிப் படித்து பார்த்தார்.

'நல்லா வந்திருக்கு தணிகை. இசைக்குப் பாட்டெழுதியது மாதிரி இல்லை. ஒரிஜினல் பாட்டு போலவே எதுகை மோனைகள் பொருத்தமாக உள்ளன. பல்லவி பிரமாதம்' என்று பாராட்டினார்.

நான் எழுதியப் பாடலைச் 'சின்னப்பாரதியிடம் ஒப்படைத்து விட்டு நான் என் ஊருக்குப் போய்விட்டேன். பாடல் பதிவின்போது பிரபலப் பாடலாசிரியர்தான் இசை அமைப்பாளருடன் இருந்தார். அன்று என்னால் சென்னை செல்ல இயலவில்லை. சில நாட்கள் கழித்துச் சென்ற போது அந்தப் பாட்டின் ஒலிநாடாவைப் போட்டுக் காட்டினார் இயக்குநர். பாடியிருந்தவர் எஸ். ஜானகி.

ஏழைப்பூ எதிர்பார்க்குதே
ஏழைப்பூ எதிர்பார்க்குதே

என்று ஒரே தொடர் பல்லவியின் இரண்டு வரிகளுக்கும் பாடப்பட்டிருந்தது. ஏலப்பூச் சரம் பூக்குதே என்று கதை நிகழ்வின் சூழலுக்காக எழுதிய ஒரு கவித்துவ வரி எடுக்கப்பட்டுவிட்டிருந்தது. நான் இயக்குநரிடம் என் ஏமாற்றத்தைத் தெரிவித்தேன். அந்த வரி யாரால் எடுக்கப்பட்டது என்று இயக்குநருக்கும் தெரியவில்லை.

புதிய பாடலாசிரியரைப் போட்டியிலிருந்து விலக்கப் பழைய பெருச்சாளிகள் பல தந்திரங்கள் செய்வதுண்டாம். அவற்றில் இது ஒன்று. புதியவர்களை வரவேற்கும் பரந்த நெஞ்சு கவித்திறன் குறைந்தவர்களிடம் காணப்படுவது அரிது.

எனது இரண்டாவது திரைப்பட அனுபவம். இலக்கியவாதிகள் சிலரின் கூட்டு முயற்சியில் உருவான 'ஊமை ஜனங்கள்'. நாவலாசிரியர் திண்டுக்கல் செல்வராஜின் நவீனம். தேநீர் ஜெயபாரதியின் இயக்கத்தில் கங்கை அமரன் இசையில். பாக்கியராஜ் (சில காட்சிகளில் மட்டும்) நடித்து 'ஊமை ஜனங்கள்' என்ற பெயரில் வெளிவந்தது. தேயிலைத் தோட்டத் தொழிலாளரின் கதை அது.

> வெகுகாலம் இங்கு பாயுதெங்கள் வேர்வை
> ஒரு நாளில் காணவேண்டும் நல்ல தீர்வை

என்று துவங்கும் ஒரு பாடலை,

> அடிபடவும் இடிபடவும்
> மிதிபடவும் கொடுமைதரும்
> ஆதிக்கம் பொடிபடாதா?

என்று இன்னொரு பாடலும் உண்மையிலேயே கேட்கச் சிறப்பாக அமைந்திருந்தன. எனினும் பாடலின் வெற்றி படத்தின் வெற்றியோடு சம்பந்தப்பட்டது என்ற பட்டறிவு பிறகுதான் கிடைத்தது.

இந்த அனுபவங்களுக்குப் பிறகு, திரைப்பாட்டை விடத் தெருப் பாட்டின் மூலமாகவே மக்களைச் சந்திக்க முடியும் என்ற நம்பிக்கையில் வீதிக்கு வந்துவிட்டேன்.

ஒடுக்குமுறைக்கு ஆளான உழைக்கும் தமிழர்களால்தான் தமிழும், தமிழினமும், தமிழ்த் தேசமும் விடுதலை பெற முடியும் என்று நான் உறுதியாக நம்புவதால், அந்த மக்களுடனேயே நானும் என் கவிதையும் பயணம் செய்து கொண்டிருக்கிறோம்.



# வைத்தீஸ்வரன்

ஒரு கவிஞன் தன் கவிதைகளைப் பற்றிப் பேசுவதை விட அவன் கவிதைகளே அவனுக்காகப் பேசுவதுதான் உண்மையான அனுபவங்களைக் கொடுக்கும் என்று நான் நம்புகிறேன். படைப்புப் பற்றி கலைஞனின் சுய அபிப்பிராயங்கள் என்றைக்குமே. மிகத் தீர்மானமான, முரண்பாடற்ற விஷயமாக வெளிப்பட்டதில்லை. இது தான் என்னுடைய கலைத் தத்துவப் பார்வை என்று ஒரு கலைஞன் பிரகடனப்படுத்திக் கொண்ட பல கோட்பாடுகள், காலப்போக்கில் ஒன்றுக்கொன்று முரண்பட்டு. அடையாளமற்று மாறி விடுவதை நாம் பார்த்து வருகிறோம். இந்தத் தவிர்க்க முடியாதத் தன்மையில், சிலசமயம். கலைஞனிடம் கொண்ட நம்பகத்தன்மையைச் சந்தேகப்படக்கூடிய சாத்தியங்களும் ஏற்பட்டு விடுகின்றன.

இப்படித் தீராமல் முரண்பட்டுக் கொள்வதுதான் ஒரு கலைஞனின் அடிப்படை இயல்பு என்பது வேறு விஷயம்.

கலைஞனின் பேச்சை விட அவன் கலைப்படைப்புகளே நம்பிக்கைக்குப் பாத்திரமானவை, நிரந்தரமானவை, நிஜமானவை.

இருந்தாலும் இன்று சில பொதுவான ஆர்வங்களினால் ஒரு நட்புறவின் தூண்டுதலினால் இன்று நாம் நேருக்கு நேர் சந்தித்துக் கொள்வதும். எனக்கும். ஒரு வேளை உங்களுக்கும் என் கவிதைகள் ஏற்படுத்திய பொதுவான அனுபவங்களைப் பற்றி பேசுவதும் சந்தோஷமான விஷயம்தான்.

என் கவிதைகள் மூலம் நான் உங்களுக்கு அறிமுகமானவன். என் கவிதைகள் மூலம். எழுப்பப்பட்டிருக்கும் என்னுடைய உருவம், என் ஆளுமையின் வடிவம், நிஜத்தில் நானாக இல்லாமல் இருக்கலாம். அந்த உருவம். நான் விரும்பும் கனவுகளில் அடையாளமாக அல்லது தோற்றுப்போன ஒரு இலட்சிய மனிதனின் அடைய விரும்பும் இலட்சிய உலகத்தின் உருக்கமான கற்பனையாக இருக்கலாம். இதை ஏன் சொல்கிறேன் என்றால், கலைஞன் சில சமயங்களைத் தவிர, மற்ற நேரங்களில் சாதாரண மனிதனிலிருந்து வேறுபடுவதில்லை. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும். ஒரு கவிஞனோ கலைஞனோ ஒளிந்து

கொண்டிருக்கிறான். ஒரு குழந்தையின் சிரிப்பையும், பூக்களின் மலர்ச்சியையும், வறுமையின் வேதனையையும், சாவின் துன்பத்தையும் கண்டு மனம் நெகிழ்ந்து போகாதவர்கள் யாரும் இருக்க முடியாது. கவிஞனும் இப்படித்தான் நெகிழ்ந்து போகிறான். ஆழ்ந்து பாதிக்கப்படுகிறான். இத்தகைய பாதிப்பு கவிஞனை சும்மா இருக்க விடுவதில்லை. இந்த நிகழ்வின் உணர்வுகளை, மீண்டும் தன் சிந்தனை மூலமாக, மொழியின் மூலமாக எதிரொலிக்க விரும்புகிறான். அப்படி எதிரொலிக்கும்போது, இத்தகைய நிகழ்வின் மூலம் வாழ்க்கையின் பொதுவான அர்த்தத்தை அல்லது அழகைக் கண்டறிய முயல்கிறான். தனக்கு மட்டும் நேருகின்ற இந்த இன்பமோ, துன்பமோ சாவோ மனித குலத்திற்கே பொதுமையானது என்பதைக் கண்டறிந்து உணர்த்த முயல்கிறான். இப்படிப்பட்ட உந்துதல்களால் வெளிப்பட்ட இலக்கியமோ, கவிதையோ ஒரு சிறந்த அனுபவத்தைக் கொடுப்பதற்கு காரணம் ஒவ்வொரு வாசகனுக்கும் தெரிந்த முகங்களோ அடையாளங்களோ அங்கே அவனுக்குக் கிடைப்பதால்தான். என் சுயசரிதை அப்படியொன்றும் மகத்துவம் வாய்ந்த வரலாறு அல்ல. நான் வாழ்ந்த விதத்திற்கும், வாழ நினைத்தற்கும் ஏகப்பட்ட வித்தியாசங்கள் உண்டு.

கோவை மாவட்டத்தில் நான் பிறந்தேன். இளம் வயதுவரை சேலத்தில் படித்து வளர்ந்தேன். என் தந்தை சைக்கிள் வியாபாரத் தொழிலில் ஈடுபட்டிருந்தார். சிறுவயதில் என்னை அவருடன் கடைக்குக் கூட்டிக் கொண்டு போவார். அங்கே சைக்கிளின் வெவ்வேறு பாகங்கள் பல பெட்டிகளில் வந்திறங்கும். ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதது போல இருக்கும். இந்த இயந்திர பாகங்களை என் தந்தை ஒழுங்குபடுத்தி, பூட்டிப் பிணைத்து ஒரு முழுமையான வாகனமாக வடிவப்படுத்தும் இலாகவத்தை நான் உற்சாகத்துடன் பார்த்துக் கொண்டிருப்பேன்.

அடுத்து சேலத்தில் என்னைக் கவர்ந்தது அதன் மலைகள். பிற்காலத்தில் மலைகள் பற்றிய சிறுகதையும், சில கவிதைகளும், எழுதியது இந்த நினைவின் தாக்கத்தினாலோ என்று எண்ணத் தோன்றுகிறது.

சேலத்தைச் சுற்றிச் சூழ்ந்து நிற்கும் சேர்வராயன் மலைகள் எனக்கு எப்போதும் மகிழ்ச்சித் தரக்கூடிய இயற்கைக் காட்சி, வானத்துக்கு அரைகுறையாய் நீலப்பாவாடை கட்டியது போல் தோன்றுகிற ஒவ்வொரு மலைக்குன்றுகளின் மீதும் ஏறியிறங்கி சறுக்க வேண்டும் போல் இருக்கும்.

என் வீட்டில் ஜன்னலை எந்தப்பக்கம் திறந்தாலும் ஏதாவது மலைக்குன்றுகள் அடைந்து கிடப்பதைப் பார்க்கலாம். வளருகின்ற எட்டு ஒன்பது பிராயத்தில், நான் சுவாச உபாதைக்கு (ஆஸ்துமா) உட்பட்டு

அவதிப்பட்டேன். குதித்துக்கூடி விளையாடும் ஆசைகளை என் கற்பனையில் தான் பூர்த்தி செய்து கொள்ள முடிந்தது.

என் வயதுக்கொத்த இனிய நண்பன் ஒருவன் இருந்தான். தமிழ் மேல் ஆசையுள்ளவன். தமிழ் சினிமாக்களைப் பற்றியும். தமிழ் வகுப்பில் நடத்தியப் பாடங்களைப் பற்றியுமே நாங்கள் இருவரும் மிகுதியாகப் பேசிக் கொண்டிருப்போம். வகுப்பில் ஆசிரியர் விவரித்த காளமேகம், ஒட்டக்கூத்தன், கம்பராமாயணச் சுவைகளை மீண்டும் படித்து அதன் வர்ணனைகளை சுவைப்பது எங்களுக்கு ஆர்வமூட்டுவதாய் இருந்தது.

முக்கியமாக கம்பனின் வர்ணனைகள் அப்போது திகட்டவே திகட்டாது. விம்மும் கொங்கைகளும், காணாமல் போன கொடியிடையும், பரந்த அல்குலும் எங்களுக்கு கிளர்ச்சியூட்டும் விஷயங்கள். முக்கியமாக, தமிழ் ஆசிரியர், அல்குலுக்கு வெளிப்படையாக அர்த்தம் சொல்லாமல் மழுப்பி விடுகிறார் என்பது எங்களை மேலும் கிளுகிளுப்பூட்டும்.

பன்னிரண்டு வயதளவில், நானும் நண்பர்களும் சேர்ந்து தமிழில் கையெழுத்துப் பத்திரிகை நடத்தினோம். அநேகமாக கதையும் கவிதையும், என்னுடையதாக இருக்கும். கட்டுரைகளை நண்பன் எழுதுவான். பெரியவர்களிடம் கொடுத்து வற்புறுத்திப் படிக்கச் சொல்வோம். அவர்கள் படிப்பதற்குக் கூலி இரண்டு அணா. சிலர் வாங்கி வைத்துக் கொண்டு, படிக்காமலேயே ஒரணா கொடுத்து விடுவார்கள். சிலர் நாங்கள் பத்திரிகையை எடுத்துக் கொண்டு அணுகும்போது காசைக் கொடுத்துவிட்டு நகருவார்கள். நாங்கள் விடுவதில்லை. பிடிவாதமாக ஓரிரண்டு கதைகளை அவர்களுக்குப் படித்துக்காட்டி விட்டுத்தான் காசை வாங்கிக் கொள்வோம்.

பத்திரிகை ஆண்டு மலரை அழகாகத் தயாரித்து, அப்போது கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜாஜிக்கு வாழ்த்துச் செய்திக்காக அனுப்பி வைத்தோம். 'சேலம் சிறுவர்களுக்கு' என்று தன்னுடைய ஆசிகளை எழுதி, அன்புடன் அரசாங்க முத்திரையுடன் திருப்பி அனுப்பியிருந்தார். எங்களுக்கு ஆச்சரியமும், மகிழ்ச்சியும் அளவிட முடியாமல் பொங்கியது.

அடுத்த பசுமையான இளம் நினைவு, ஆகஸ்டு 15, 1947. தேசம் விடுதலை பெற்ற முதல் கொண்டாட்ட விழா. கடைகடையாக தேசியக் கொடிகள் விற்பனைக்கு வைத்திருந்தார்கள். பட்டுக்கொடி, பருத்திக் கொடியென்று துணிகளின் தராதரங்களும் வேறு. விலைமலிவானக் கொடியை வாங்கி கட்டினால், சாயம் சீக்கிரம் வெளுத்துவிடும் என்று நல்ல தரமான பட்டுக் கொடியை வாங்கிவந்து எங்கள் வீட்டு மொட்டை

மாடியில் கொடிக்கம்பம் கட்டி, ஆகஸ்ட் 14 சரியாக இரவு 12 மணிக்கு கொடியேற்றி நானும் நண்பர்களும் வீர வணக்கம் செலுத்தினோம். ஒரு மாத காலத்திற்குள்ளாக கொடியை காக்கைகள் பலவிதமாக அலங்கோலப்படுத்தி விட்டுப் பறந்தன. ஆரம்பத்தில் பார்ப்பதற்கு ரொம்ப விசனமாக இருந்தது. பிறகு பார்த்துப் பார்த்து பழக்கமாகிவிட்டது.

எனது ஏழாம் வகுப்புத் தேர்வில் தமிழில் முதல் பரிசு பெற்றபோது எனக்குக் கிடைத்த பாரதியாரின் கவிதைகளின் சிறுசிறு பிரசுரங்கள், அழ. வள்ளியப்பாவின் பாப்பா பாட்டுக்கள் படிக்கக் கிடைத்தன.

1948-ல் மகாத்மா காந்தி சுட்டுக்கொல்லப்பட்டார். அப்போது நான் 8-ம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தேன். காந்தியின் அகோர மரணத்தால் நாடே அதிர்ந்து போயிருந்தது. வானொலியில் அவருடைய இறுதி ஊர்வலத்தின் வர்ணனையும் நேருஜியின் குமுறலையும் கேட்டவர் அனைவரையும் உலுக்கியது.

நான் எட்டு வரிகளில் காந்திஜியின் பரிதாப மரணத்தின் சோகத்தை கவிதையாக எழுதியிருந்தேன். எங்கள் தமிழ் ஆசிரியரிடம் காட்டினேன். அந்தக் கவிதையின் கடைசி இரண்டு வரிகள்,

"விடுதலை தந்த தந்தை
வெதும்பி விழுந்தாரே!"

என்று முடியும். தமிழாசிரியர், என்னைப் பாராட்டிவிட்டு கடைசி வரியை இப்படி மாற்றிப்போடு என்று அடித்து எழுதினார்.

"விடுதலை தந்த தந்தை
சுடுதலை ஏற்றாரே"

என்று. எனக்கு இது சரியில்லை என்று தோன்றியது. ஆனால் ஆசிரியரை எதிர்க்கும் நக்கீரத் துணிச்சல் அப்போது எனக்கு இல்லை. அந்தக் கால கட்டத்தில்தான் சினிமாவில் அடுக்குமொழி வசனங்கள் ஒரு பரபரப்பான அம்சமாக ஜனங்களை பீடித்துக் கொண்டிருந்தது.

தமிழ் ஆசிரியர்களும், இத்தகைய பாதிப்புகளுக்கு விதிவிலக்கானவர்கள் அல்ல என்று பிறகு உணர்ந்து கொண்டேன்.

சூழ்நிலை காரணமாக, 1950-லிருந்து நாங்கள் சென்னைக்கு நிரந்தரமாகக் குடியேறிவிட்டோம். மலைசூழ்ந்த பெட்டகமாக இருந்த சேலத்தை விட்டு, வானத்தை அவிழ்த்துப் போட்டது மாதிரி வெறிச்சென்று பரந்து கிடந்த சென்னையும், கடற்கரைக் காற்றும் உப்பின் மணமும்

வித்தியாசமான உவப்பைக் கொடுத்தன. அப்போது சென்னை வீதிகள் நகரத் தெருக்களாக இருந்தாலும் சுகமாக உலாவத் தகுந்த விசாலத்துடன் காற்றுக்கருப்பு ஏதும் இல்லாமல் இ.ருந்தன. அதில் வாகனங்கள் ஒன்றிரண்டு அமைதியான அன்னங்கள் போல் ஓடிக் கொண்டிருக்கும் கடற்கரையில், நிலாவையும். கலங்கரைச் சுழல் விளக்கையும் தவிர வேறு வெளிச்சக் குழப்பங்கள் கிடையாது.

தெருக்களில் அங்கங்கே தெலுங்கு கலந்த கொச்சைத் தமிழும், வார்த்தைகளை எதிர்பாராத இடங்களில் நீட்டிப் பேசும் பேச்சொலிகளு:ம காதில் விழும்.

அந்தக் காலக்கட்டத்தில் எனக்கு படிப்பதற்கு நிறையப் புத்தகங்கள் கிடைத்தன. எனது ஒன்றுவிட்ட சகோதரர் ஒரு புத்தகப் புதையலே வைத்திருந்தார். கல்லூரியில் படிக்கத் தொடங்கிய காலத்தில், டால்ஸ்டாய், பெர்னார்ட் ஷா, இப்சன், ஷெல்லி, கீட்ஸ், டாஸ்டவஸ்கி இப்படிப் பல ஆங்கிலப் புத்தகங்களின் பரிச்சயம் கிட்டியது. தமிழில் கல்கி, புதுமைப்பித்தன், வ.ரா.மு. வரதராசனார், பாரதியார் கவிதைகள், தேசிய விநாயகம்பிள்ளை, ச.து.சு. யோகியார், காண்டேகர், பிரேம்சந்த் இன்னும் எத்தனையோ புத்தகங்கள் கிடைத்தன. எது இலக்கியம், எது இலக்கியமல்ல என்ற கேள்விகள் அப்போது எனக்கு அப்பாற்பட்ட பிரச்சனைகள். தமிழைப் படிக்க வேண்டுமென்ற தனியாத ஆர்வமும், ஒவ்வொரு புத்தகமும் எனக்கு கொடுக்கும் அனுபவத்தின் ஈர்ப்பும் தவிர வேறு எதுவும் அவசியமாயிருக்கவில்லை.

அந்தக் காலகட்டத்தில் எனக்கு ஏற்பட்ட இன்னொரு அருமையான வாய்ப்பு என்னைச் சுற்றி இருந்த நாடகச் சூழல்.

என்னுடைய தாய்மாமன் எஸ்.வி. சகஸ்ரநாமம் அப்போது நாடகத் துறையில் தீவிரமாக ஈடுபட்டிருந்தவர். ஓரளவு புத்துணர்ச்சியூட்டியவர். தேசபக்தர், பாரதியின் பாஞ்சாலி சபதத்தையும், குயில் பாட்டையும் அற்புதமான கவிதை நாடகமாக, நூதன அரங்க நிர்மானத்துடன் மேடையேற்றியவர்.

அன்றைய மறுமலர்ச்சி எழுத்தாளர்களான பலரையும் நாடகத் துறைக்கு அழைத்து பரிமளிக்கச் செய்தவர். வ.ரா.வின் அபிமான நண்பராக இருந்து, அவர் வாழ்வின் இறுதிவரை, அவருக்கு உதவிகள் செய்தவர். தி. ஜானகிராமன், பி.எஸ்.ராமையா, கு. அழகிரிசாமி, கோமல் சுவாமிநாதன் ஆகியோரின் நாடகங்கள் அவர் மூலம் மேடையேற்றப் பட்டன. திரிலோக சீதாராம் அவர்கள், பல நாட்கள் எங்களுடனே தங்கி,

'பாஞ்சாலி சபதம்' நாடகத்தைத் திருப்பி திருப்பி உணர்ச்சி ததும்பப் பாடிக் காட்டுவார். ஹரேந்திரநாத் சட்டோபாத்யாயா, புகழ்பெற்ற கலை மேதை, கவிக்குயில் சரோஜினி தேவியின் சகோதரர் ஒரு முறை எங்கள் நாடகக் குழுவுக்கு பேச வந்தார். அவரை நான் 'Do you understand Tamil?' என்று கேட்டேன். 'I don't misunderstand it' என்று பதில் கூறிய மின்னல் சாதுரியம் எனக்கு என்றுமே மறக்காத விஷயம்.

என் கல்லூரி வாழ்க்கைக்குப் பிறகு, நாடக நடிப்புத் துறையில் சில வருடங்கள் ஈடுபட்டிருந்தேன். ஆனால், நடிப்புத் துறை எனது உள்ளத்தோடு ஒட்டாத விஷயமாக அடிக்கடி உறுத்திக் கொண்டே இருந்தது. நடிப்பு, ஓவியக்கலை, இலக்கியம் என்று என் ஆர்வங்கள் மாறி மாறித் தாவிக் கொண்டிருந்த என் வாழ்க்கையின் குழப்பமான சில வருஷங்கள் என் உள்ள வளர்ச்சிக்கு மிக முக்கியமான காலங்கள்.

அப்போது எனக்குள் எழுதிப் பார்த்துக்கொண்ட கவிதைகள், கதைகள் சுயவிசாரங்கள் நிறைய உண்டு. கலைகள் மூலமே வாழ்க்கையை பார்த்துக் கொண்டு, மனம் லயித்து நிற்க வேண்டுமென்று ஒரு சாத்தியமில்லாத வெறிக்கனவு, அடிக்கடி தோன்றும்.

அன்றாட ஜீவனத்துக்கு இப்படிப்பட்ட கனவுகள் செல்லாக் காசுகள், இந்த நடைமுறை உண்மையை, இலட்சியத்தோடு சமரசம் செய்து கொள்ள வேண்டிய கட்டாயத்தை நான் பல மன உளைச்சல்களுக்குப் பின்தான் புரிந்து கொண்டேன்.

இப்படிப்பட்ட கட்டாய சமரசந்தான், மனிதன் தப்பித்துக் கொள்ள முடியாத வாழ்க்கையின் தளை என்பதும், இந்தத் தளைகளின் மூலமாகவே மனிதன் எவ்வாறு விடுதலை அனுபவிப்பது சாத்தியம் என்பதும் நான் பிறகு தேர்ந்துகொண்ட ஞானங்கள், இதுவே நமது வேதத்தின் வழி, உபநிடதத்தின் சாரம் என்பது எனக்கு பிற்காலத்தில் வியப்பையும் நமது முன்னோர்களுடைய சிந்தனைகளின் மேல் பிரமிப்பையும் ஏற்படுத்தியது. என்கவிதைகளில் இந்த அடிப்படை உண்மைகள் நான் விரும்பியோ, விரும்பாமலோ, ஒரு அடிநாதமாக ஊடுபாவுகிறது. ஆனால் இதையே ஒரு கோட்பாடாக எடுத்துக்கொண்டு விட வேண்டாம்.

ஒரு மணி அரிசிக்கு ஓயாமல் ஏமாந்து
ஊருக்கு சீட்டெடுக்கும் ஒரு கிளி
பஸ்ஸுக்குள் தொங்கும் என்னைத்
தெரிந்தவன் போல் சீட்டியடிக்கிறது.

- எனக்குள் ஒரு கிளி

நடமாடும் விசிறியாக
ஊருக்கு மலர்ச்சி தந்து
பூங்காவில் சிறைப்பட்டு
வளையும் வட்டமான சோகம்
கொக்குக் கண்களை
சிவப்பாக்கும் சிலசமயம் - கொக்கு வாழ்வு

நெட்டைத் தவளையாம் சுவற்றில்
நீட்டி முழக்கி என்னை சாவுக்கு நகர்த்தும்
கடிகாரமே நொறுங்கு - மா
காலத்தை அளக்க வெறும்
பித்தளைக்கா விலை கொடுத்தேன் - ஏவல்

இந்தக் கவிதை வரிகள், மனிதனுடைய தளைகளையும், அதிலிருந்து விடுபடப் பாடுபடும் கனவையும் தெரிவிப்பதாக நினைக்கிறேன்.

1961-ல் 'எழுத்து' பத்திரிக்கையில் புதுக்கவிதை என்ற முத்திரையுடன் என் முதல் கவிதை 'கிணற்றில் விழுந்த நிலவு' வெளியாகியது. 'எழுத்து' பத்திரிகை, நாடகக் குழு நண்பராயிருந்த திரு. திரு. கோமல் சுவாமிநாதன் மூலம் எனக்கு அறிமுகமாகியது.

அன்று பரவலாக வெளிவந்து கொண்டிருந்த வாராந்திர மாதாந்திர பத்திரிக்கைகளிலிருந்து, 'எழுத்து' வேறுபட்டு நின்றது. அதில் பிரசுரமான இலக்கியக் கட்டுரைகளும், தத்துவப் பார்வைகளும் மூளையைக் கசக்கும் விதமாக, சிந்தனையைத் தூண்டும் விதமாக இருப்பதைக் கண்டு எனக்கு அதை கவனிக்கத் தோன்றியது.

ஏற்கனவே எழுதி வைத்திருந்த பல கவிதைகளில் 'கிணற்றில் விழுந்த நிலவை' 'எழுத்து'க்காக அனுப்பி வைத்தேன். இக்கவிதை சந்திரகிரஹணத்தின்போது தோன்றியது. எதுகை, சீர் சந்தங்களோடு எழுத ஆரம்பித்து இடையில் சில இடங்களில் தளைகளை மீறி வெளிப்பட்டது. ஆனால் இந்த மீறல் கவிதையின் அழகைப் பாதிக்கவில்லை என்று தோன்றியது. புதுக்கவிதையின் ஆரம்ப இயக்கத்தில் ஒரு முக்கியத்துவம் வாய்ந்த கவிதையாக பின் வந்த 'எழுத்து' இதழ்களிலும் மற்ற பத்திரிகைகளிலும் வெளிவந்த விமர்சனப் பார்வையிலிருந்து தெரிந்து கொண்டேன்.

ஆனால் என்னைப் பொறுத்த வரையில், என் மூலம் வெளிப்பட்ட புதுக்கவிதைகள் பிரக்ஞை பூர்வமாக கவிதையின் மரபு வடிவத்தையும், இலக்கணங்களையும் மீறிப் படைக்க வேண்டுமென்ற

ஒரு குழு மனப்பான்மையுடன் செயலான விஷயங்கள் அல்ல. கூடிய வரை இந்த வாதப்பிரதிவாதங்களின் இரைச்சலுக்கு மீறிய ஒரு கவித்துவ உண்மையை. இயல்பான சுதந்திரமான சொல்லாட்சியை நான் கண்டறிய ஆசைப்பட்டேன்.

சுமார் 60-லிருந்து இன்றுவரை புதுக்கவிதையின் தோற்றம். வளர்ச்சி, மாற்றம் அவற்றின் பலவித சித்தாந்தப் பிரிவுகள் இவைகளைப் பற்றி விஸ்தாரமாக இங்கே பேச முற்பட நான் விரும்பவில்லை. கடந்த 30, 40 ஆண்டுகளாக இதுபற்றி நிறையவே விமர்சனங்களும், விவாதங்களும், சண்டைகளும், சவால்களும், கணிப்புகளும், நிராகரிப்புகளும், பேசப்பட்டும் எழுதப்பட்டும் வந்திருக்கின்றன.

'குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியன் ஈங்கில்லை
தலை இறங்கப் போட்டு வெட்டுதற்கோ
கவி ஒட்டக் கூத்தனில்லை
விளையாட்டாய் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைகளுண்டு
தேசம் எங்கும் புலவரெனத் திரியலாமே!'

என்று 'படிக்காசுத் தம்பிரானோடு' சேர்ந்து கொண்டு புதுக்கவிதையைப் படித்தவர்களும்

'பண்டைக் கவிநயங்கள் பண்ணி வைத்த சித்திரத்தின்
ஜீவத் துடிப்பகற்றி, சொல்மாற்றி
சந்தத்தை வைத்து சிலம்பாடி.....
நாட்டில் பண்டிகைகள் நாலாயிரத்துக்கும்
அச்சேறும் பத்திரிகை அத்தனைக்கும் ஆண்டுதோறும்
செத்தாலும் தொடர்ந்து வரும் சேமநிதி போல்
வளரும் சப்பாத்திப்புதர்.'

என்று கவிஞர் தி.சோ. வேணுகோபாலனும் ஏனையோரும் மரபுவழிக் கவிதைகளைச் சாடிய போராட்டங்களும், அறுபது, எழுபதுகளின் கவிதை இலக்கியத்தின் மிக சுவாரஸ்யமான கட்டங்கள்.

முடிவில் புதுக்கவிதை நிலைத்துவிட்டது. எழுத்து பத்திரிகையை தொடர்ந்து, நடை, கசடதபற, கணையாழி, ஞானரதம், எனப் பல பத்திரிகைகள் புதுக்கவிதைக்கு ஊக்கமும், பரவலான அறிமுகமும், கொடுத்தன. அதைத் தொடர்ந்து வானம்பாடிக் கவிஞர் குழுவும், முற்போக்கு சித்தாந்த பத்திரிகைகளும், புதுக்கவிதையின் வடிவ

சுதந்திரத்தை அவரவர்களுடைய கருத்துக்களுக்கு ஒரு வலிமையான வடிகாலாக, பயன்படுத்திக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

மரபு - மரபை மீறுதல் என்ற ஆரம்பப் போராட்டங்களைத் தாண்டி, மரபை மீறினாலும், மனதின் கசப்பையே பாடுகிறார்கள். வாழ்வின் அழகைப் பாடுவதில்லை என்று ஒரு சாராரும், அழகைப் பாடினால் மட்டும் போதுமா, மனிதனின் வறுமையை வியர்வையை, மிதிபடும் அவலங்களை உழைப்பின் உயர்வைப் பாட வேண்டும் புதுக்கவிதை என்று இன்னொரு சாராரும் கணைகளை மூலைக்கு மூலை எறிய ஆரம்பித்தார்கள்.

பக்திக் காலத்திலும், காவியக் காலத்திலும், மன்னர்களின் புகழ்பாடி பொற்கிழி வாங்கிப் பிழைத்த காலத்திலும் கவிதை இலக்கியம் எப்படி ஒரு கருத்து வட்டத்துக்குள் சிறைப்பட்டுப் போனதோ, அதே போல், தற்காலக் கவிதைகளுக்கு புதிதாக இன்னொரு நவீனக் கோட்பாட்டு வட்டங்கள் உருவாகும் நிலைமை ஏற்பட்டுவிட்டது.

உண்மையில், இந்த வட்டங்களைப் போட்டுக் கொண்டால் தான் கவிதைகள் இத்தகைய கருத்துக்களை எதிரொலிப்பது சாத்தியமா? என்று எனக்கு கேட்கத் தோன்றியது.

ஒரு பூவின் அழகை ரசித்துக் கவிதை பாடுவதற்கு நான் ஏதாவது குழுவை சார்ந்திருக்க வேண்டுமா? அடிபட்டு மிதிபட்டு வேதனைப்படும் மனிதனைக் கண்டு துன்பப்படுவதற்கும், அதன் காரணங்களைக் கண்டு கோபப்படுவதற்கும் எனக்கு ஏதாவது குழுவின் அங்கீகாரம் வேண்டுமா? மனிதன் என்ற ஒரு தகுதி போதாதா?

உலகில் நேரும் அத்தனை இன்ப துன்பங்களுக்கும் எனக்கு முழுப் பொறுப்பு உண்டு என்ற சுரணையுடன் இந்த மானிடத்தை நேசிக்கும் மனிதனாக நான் வாழ்ந்தால் போதாதா? இந்த அடிப்படை மனித நேயத்தின் வெளிப்பாடாக எதிரொலிக்கும் கவிதைகள், கவிதைகளில்லையா? என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

என் கவிதைகளுக்கு அடிப்படை இது ஒன்றுதான். எனக்கும் உலகத்திற்கும் மிகுந்த அன்னியோன்யமான உறவும், விளையாட்டும் உண்டு. உலகத்தின் சிருஷ்டிகள் அத்தனையும் எனக்கே சொந்தமானவை போல் அவற்றை என் கவிதைகளில் எப்படி வேண்டுமானாலும் உருமாற்றிக் கொள்வதில் கர்வமும், ஆனந்தமும் கொள்கிறேன்.

மலைகளின் வளைவுகளை, ஆணழகுப் போட்டிக்காரனின் தசைகளாக பாவிப்பேன். இருளில் மரங்களின் உருவம் மயிலாகத் தோகை

விரித்தாடுகிறதென்று சொல்லுவேன். கோடை சூரியனை கொதித்தெழுந்த முள்ளம்பன்றி என்று சாடுவேன் - இறகொடிந்து எழும்பத் தவிக்கும் காகத்தைப் பார்த்து வயதான பறவைக்கு

'வானம் ஒரு சறுக்குப் பாறை.
உயரப் பறக்கும் குடும்பங்கள் -
உதவியற்ற தூரத்துப் பறப்புகள்........

என்று அனுதாபப்படுவேன்.

பாளைகள்
காற்றில் 'இச்' சென்று மோதவும்
கிழக்கே பறக்கும் பெருக்கல் குறிகள்,

என்று குருவிகளின் பாய்ச்சலை சூசகமாகப் பாடுவேன்.

கொட்டும் மழையை, வானுக்கும் ஊருக்குமாய் பிணைந்து கொண்ட ஈரச்சங்கிலிகள் என்று பெயர் சூட்டி மகிழ்வேன்.

குளத்தில் அலைகளில் குழம்பும் நிலவொளியை நோயாளி துப்பிய கோழையாய் அசூயைப்படுவேன்.

மனிதக் கால்கள் ஆயிரங்களுக்கு அடியில், இரண்டு முழக் கூந்தலுக்குள் சுருண்டு முனகும் நிஜமான ஒரு மனிதனின் ஈன ஒலிகளை கேட்க நமக்கு எத்தனை யுகங்களாகும் என்று அன்றாட வறுமையின் கோரத்தைக் கண்டு கொதித்துப் போனேன்.

நாய் வாழ்வுக்கு இலாயக்கற்ற தூய்மையை நீ பெற்றது தவறென்று தோன்றவில்லை. ஆனாலும் இன்று நீ புழுப்பிடித்து மடியக் கிடக்கும் பொருத்தமற்ற நோய்த் துடிப்பை நியாயப்படுத்த சக்தியற்ற நாய்தான்! என்று மனிதனின் இலட்சிய ஒழுக்க வாழ்வுக்கும் அதற்கு எதிர்மறையாக அவனுக்கு நேரும் வாழ்வுத் துன்பங்களுக்கும் காரணம் காண முடியாத திகைப்பைக் கவிதையாக்குவேன்.

முன்பின் முரணாகிப் பிறந்துவிட்ட கர்ணனைப் போல தெருவில் திரிகிறான். அவன் முதுகோடு முளைத்துவிட்ட மூட்டைக் கவசமொன்று அவன் படிவை வளைக்க இரண்டுகால் மிருகமானான் என்று குப்பைகள் பொறுக்கி ஜீவனம் நடத்தும் சக மனிதர்களின் அவலங்கண்டு பாதிப்படைவேன்.

ஆக புதுக் கவிதையின் அடிப்படை இலக்கணம், மிக உன்னதமான தூய்மையான சுதந்திரமும், பொறுப்பான முழுமையான

மனித நேயமும் தான். மரபை மீறுவது - மீறாமலிருப்பது என்ற மேலோட்டமான பிரச்சினைகள் அல்ல, அப்படி எதையுமே அடியோடு நிராகரிப்பது எந்தக் கலைஞனுக்கும் சாத்தியமும் அல்ல - காரியக் குருடனாக இருந்தாலொழிய......

காலங்காலமாக நம் உயிரணுக்களின் மூலம் கடத்தப்படும் சிந்தனை அல்லது ஞாபகத்தின் தொடர்ச்சிதான் உண்மையான மரபு. சிந்தனைகளை வெளிப்படுத்த உபயோகமாகும் மொழியும். வடிவக்கட்டுக்கோப்பும் மறைந்து வளர்ந்து மாறக் கூடிய புறப் போர்வைகள்தான்.

சங்க காலத்துக் கவிதை மொழிகளை, வடிவங்களை பக்தி காலத்தில் தொடர்வதில்லை. வெண்பாக்களும் விருத்தங்களும் பெரும்பாலும் பிற்காலத்தில் பரிணாமமாகிய பாட்டியல்கள், எதுகை மோனை சந்த இயல்களை, அகநானூறு, புறநானூற்றுக் கவிதைகள் ஒரு கட்டாய அலங்காரமாகப் பயன்படுத்தவில்லை. கவிப்பொருளின் வீரியத்தை தூக்கி நிறுத்த, எதுகை மோனைகளை அவர்கள் ஒரு சுமைதாங்கியாகக் கையாளவில்லை. ஆக மாறிவிடும் இயல்புகளையே அளவுகோல்களாக வைத்துக்கொண்டு, உண்மையானக் கவிதை அனுபவத்தை அல்லது அதன் கண்டுபிடிப்பை நழுவவிட்டு விடுகிறோம்.

இந்தத் தொடர்ச்சியில்தான் "எப்போதும் நீ நடக்கும் தெருவில் ஆகாயமும் வழக்கமாய் நீலமாய்த்தான் இருக்கும். அதையாவது பச்சையாக மாற்றிப் பாரேன் நாளைக்கு" என்ற கவிதை வரிகள் எனக்குத் தோன்றியது.

மரபு என்பது என் அகத்தில் காலம் பூசிய சூட்சும அரிதாரம்...... மரபுகள் எனக்கு மரவுரி ஆடைகள் அல்ல...... தரித்துக் கொண்டு குலுக்கிக் காட்டுவதற்கு என்று என் கவிதையில் சொல்ல முற்பட்டேன்.

அடுத்ததாக, இலக்கியம், கலைகள், கவிதைகள் இவற்றினால் சமுதாயத்திற்கு ஏதாவது உபயோகமுண்டா? அல்லது சமுதாயத்திற்கு உருப்படியாக உபயோகமுள்ள இலட்சியங்களோடு எழுதப்படும் எழுத்துக்களெல்லாம் இலக்கியமாக, கவிதைகளாக ஆகிவிடுகின்றனவா? மேலும், இதுவரையில் காலங்காலமாக எழுதப்பட்டு வந்துள்ள இலக்கியங்களெல்லாம் எந்த அளவில் சமுதாயத்தை அல்லது சமுதாயத்தை உருவாக்கும் மனிதர்களை உருப்படியாக பாதித்திருக்கின்றன. நமது அமர இலக்கியங்கள் அத்தனையும், பலவீனங்கள் எதுவுமற்ற இலட்சிய மனிதனையே சித்தரித்து, ஆராதித்து, சமுதாய மக்கள் பின்பற்ற வேண்டிய உதாரண புருஷனை, உன்னத வாழ்க்கை முறைகளைக் காட்டியிருக்கின்றன.

ஆனால் சமுதாயம் ஒரு இராமனையோ, கிருஷ்ணனையோ மட்டும் உதாரணங்களாகக் கொள்வதில் நாட்டம் காட்டுவதில்லை. இராவணனும், கம்சனும் கூட சமுதாயத்திற்கு மிகப் பிடித்தமான வாழ்க்கைப் பாத்திரங்கள் இராமனை பூசைக்கும், பூசலுக்கும் பயன்படுத்திக் கொண்டு, இராவணனாகவும், கம்சனாகவும் வாழவே ஆசைப்படுகிறார்கள் மக்கள். இவ்வளவு உபதேச இலக்கியங்களுக்குப் பிறகும், நாட்டில் கொலைகளும், கற்பழிப்பும், கள்ள நோட்டும், தீயெரிப்புகளும் மேலும் சுதந்திரமாக நடைபெறுகிறதென்றால், உள்ளபடி இலக்கியங்கள் சமூகத்தில் எதற்குத்தான் உபயோகமாகின்றன. இப்படிக் காலங்காலமாக இலக்கியங்கள் கூறும் உன்னத நோக்கங்கள், தவறாமல் சமூகத்திடம் தோல்வியடைந்து கொண்டே வந்திருப்பதைப் பார்க்கிறோம்.

எனினும் இலக்கியங்கள் தோன்றுவது, நின்று போய்விடவில்லை. கவிஞனின் மனமும் கைகளும் ஓய்ந்து போய்விடவில்லை.

மனிதன் என்ற உன்னதமான அறிவு ஜீவிக்கு கனவு காணும் இயல்பு இருக்கும்வரை, இலக்கியமோ கவிதைகளோ எழுதப்படுவதில் இடைவேளை இருக்காது.

பாரதி கண்ட சமுதாயக் கனவுகள் அநேகமாக இன்று தோற்றுப் போய்விட்ட நிலையிலும், மீண்டும் புதிய கவிஞன் புதிய நம்பிக்கையுடன் கனவுகளைத் தொடருகிறான்.

கவிதைகளை ஓரளவு காலத்தின் மனசாட்சி, மனித குலத்தின் மனசாட்சி என்று சொல்லத் தோன்றுகிறது. சுய சௌகரியங்களுக்கு மனசாட்சியின் குரல் எந்த அளவுக்கு தொந்தரவு இல்லாமல் இருக்கிறதோ அந்த அளவுக்குமட்டும் தான் அதற்கு மதிப்பு கொடுக்கப்படும். (இப்போது அரசியலிலும் இப்படித்தான் மனசாட்சிக் கொள்கை செயல்பெறுகிறது) இலக்கியத்தையும் சமூகம் இப்படித்தான் பட்டும்படாமல் பாராட்டுகின்றன.

'பின் புத்தனும் ஏசுவும் எதற்கு சொன்னான்
அடுத்தவனை நேசி என்று..................
அவனால் உனக்கு உபகாரங்கள்
ஆயிரம் இருக்கும்
அதை மட்டும் நீ யோசி
நீ ஒரு நகர வாசி'

என்று 'உபதேசம் நமக்கு' என்ற என் கவிதை சொல்லுகிறது.

அல்லது இலக்கியமும் சமுதாயமும் வாழ்க்கை வண்டியை இழுக்கும் இரட்டைக் காளைகள் என்றும் சொல்லலாம். இரண்டும்

ஒன்றையொன்று ஒட்டாமல் இணைகோடுகளாகத் தான் ஓடிக்கொண்டு இருக்கின்றன. ஒன்றின் வேகமோ வேகக்குறைவோ மற்ற காளையை ஏதோ ஒரு வகையில் பாதிக்கிறது. ஆனால் இரண்டும் வண்டியை ஏறுமாறாக இழுத்துக் கொண்டுதான் போகின்றன. வாழ்க்கை ஓடிக்கொண்டுத்தான் இருக்கிறது.

செய்யுளியலிலிருந்து. மாறுபட்டுக் கிளைத்த இந்த புதுக்கவிதையின் குறிப்பான அங்கங்களாக சில தன்மைகளை இங்கே நினைவுபடுத்திக் கொள்ளலாம் படிமம் (Image), தத்துவ உவமம் (Metaphor), குறியீடு (Symbols) முதலிய உத்திகளை புதுக்கவிதை அழுத்தமாக உபயோகப்படுத்திக் கொள்கின்றன. வழக்கத்திற்கு மாறான வார்த்தைக்கோர்வைகள், அவைகளால் நினைவுகளைச் சற்று சலனப்படுத்தக் கூடிய பாதிப்புகள், அர்த்தமுள்ள இடைவெளிகள் (Pauses) பூடகத் தன்மை இவையும் நன்கு கையாளப்படுகின்றன.

மேலும், சங்கக் கவிதைகளின் உத்தியாகச் சொல்லப்படும் உள்ளுறை உவமம் என்ற வெளிப்பாட்டு முறை, புதுக்கவிதைப் படைப்பில் நான் விரும்புகின்ற பார்வைக்கு மிக அற்புதமாக ஒத்துப் போகிறது. ஒரு கவிப்பொருளை மொத்தமான ஒரு காட்சிப் பிரக்ஞையுடன் பார்த்து உணர்வோடு விவரிக்கும் கலைப்பாங்குதான் சங்க காலத்தையும், தற்காலத்தையும் நெருக்கமாக உறவுப்படுத்துகிறது.

அடுத்தது இன்றைய கவிஞனுக்கு வெளிப்பாடுகளில் முக்கியமான பிரச்சனை மொழிதான். இன்றைய அறிவியல் விரிவும், விஞ்ஞானமும் நிறைய சாதனங்களை வாழ்க்கையில் நிரப்பிவைத்து விட்டன. இந்த சாதனங்களை இயல்பாகக் கவிதையில் பேச, நமக்குத் தமிழ் வேண்டும். தமிழ் வார்த்தைகள் வேண்டும். எல்லோரும் அடையாளங்கண்டு, மக்களின் பேச்சியல்போடு வித்தியாசமற்று கரைந்துபோகக் காலமும் வேண்டும்.

ஜீவனத்துக்கு தமிழ் மொழியைக் கற்க வேண்டிய தேவையில்லை என்ற சூழலில் உருவாகும் இன்றைய இளந் தலைமுறைகள், தமிழ் இனி மெல்லச்சாகுமோ என்று நம்மை பயமுறுத்துகிறார்கள்.

இப்போது நம் நாட்டிலேயே நாம் புலம்பெயர்ந்து விட்டது போன்ற சூழல் உருவாகி வருகின்றது. திரைப்படப் பாடல்கள் இந்தச் சூழலை மேலும் ஊதிவிடுகின்றன.

மாற்றங்களைக் கண்டு நாம் பயந்து விடத் தேவையில்லை. கலாச்சார மாற்றங்கள் எப்போதும் வட்டமான சுழற்சித் தன்மை கொண்டது.

நிரந்தரமான கலைப்படைப்புகள், மீண்டும் மீண்டும் நிகழ்காலத்தை திரும்பி வந்து தொட்டுக்கொண்டே இருக்கும்.

இன்னும் நிறையப் பேசிக்கொண்டே போகலாம். ஆனால் ஆரம்பத்தில் நான் சொல்லியது போல, கவிதைக் கோட்பாடுகள் பற்றி நிறையப் பேசுவது, கவிதையின் ரசனைக்குத் தடையாகவும் ஆகிவிடலாம்.

என்னுடைய கவிதை வெளியீடுகள் பற்றிய குறுகிய விவரம் - 1970-ல் முதல் கவிதைத் தொகுப்பு 'உதயநிழல்' - பிறகு 1994-ல் 'நகரச் சுவர்கள்' என்ற கணிசமான தொகுப்பும், 1997-ல் 'விரல் மீட்டிய மழை' என்ற கவிதைகளின் தொகுப்பும் வெளிவந்தன. 1990-ல் 'கால்முளைத்த மனம்' என்ற என் சிறுகதைகளின் தொகுப்பு வெளியிடப்பட்டது.

கடைசியாக 'பேச்சுவாழ்வு' என்ற என்னுடைய கவிதை இப்படித்தான் முடிகிறது.

'பேச்சு என்பது சத்தம் என்ற
அணர்த்தத்தால்,
சத்தமற்ற பேச்சின் பொருளை
இன்னும் நாம்
அறியவில்லை போலும்!'.



# த. பழமலய்

"புதியன கண்டபோது விடுவரோ புதுமை பார்ப்பார்" - என்றார் கம்பர் தொல்காப்பியரும் 'விருந்து' என்னும் புதுமை பற்றிப் பதிவு செய்துள்ளார் காலந்தோறும் யாப்பு என்கிற ஊடகத்தில் நம் "அம்சொல் நுண்தேர்ச்சிப் புலவர்கள்" கண்டு காட்டி வந்த புதுமைகள்தாம் 'பா' வகைகள் மற்றும் 'பா' வினங்கள் என்பதை நாம் அறிவோம். தாண்டகம் (விருத்தம்) சிந்து...... என்பவையெல்லாம் இடைக்காலப் புதுமைகள் என்றால், புதுக்கவிதைகள் இன்றைய புதுமைகள்.

தமிழர்கள் இயல்பிலேயே புதுமை நாட்டம் உடையவர்கள். இந்த ஆக்கப் பண்பு வரலாற்றில் தமிழர்களுக்குத் தோல்விகளைப் போலவே வெற்றிகளையும் தந்து வந்திருக்கிறது. சமணம், பவுத்தம், இசுலாம், கிறித்துவம் என்றும் சமசுகிருதம், தெலுங்கு, பிரெஞ்சு, ஆங்கிலம் என்றும் புதுமைகளைச் செரித்துக் கொண்டு சீரிளமைத் திறம் கூடி வருபவள் நம் தமிழ் அன்னை. அகத்திய முனிவரைப் பற்றிச் சொல்லப்பட்ட "சுவாகா கதை" நம் அருமைத் தமிழுக்கு முழுக்கவும் பொருந்துவது.

இந்த வகையில் வாழையடி வாழையென வரும் தமிழ்க் கவிஞர் திருக்கூட்ட மரபில் ஒருவனாகிய யான் கவிதைகளில் புதிய முயற்சிகளின் வரவை இருகை நீட்டி வரவேற்றுத் தழுவி நிற்பவனாகத்தான் இருக்க வேண்டும்; இருக்க முடியும். "புதியன விரும்பு" - என்பது இந்நூற்றாண்டின் பெருங் கவிஞர்களுள் ஒருவராகிய நம் பாரதியாரின் அறிவுரையும் அல்லவா!

## இளமைப்பருவம்

தென்னார்க்காடு (இப்போது கடலூர்) - திருச்சிராப்பள்ளி மாவட்டங்களின் இடை எல்லைப் பகுதியான வெள்ளாற்றங்கரையை ஒட்டிய திட்டக்குடி, செந்துறை என்னும் ஊர்களுக்கு இடைப்பட்ட அழகிய சிற்றூர் 'குழுமூர்'. கீழஓடை, யானைவாரி ஓடை, ஏரி, குளங்கள், தோப்புகள், நன்செய், புன்செய் எனச் சூழ்ந்த ஊர். சிவன் கோவில், பெருமாள் கோவில், சிறு தெய்வங்களின் கோவில்கள் என்று உள்ள ஊர். புதிய சேர்க்கையாக எல்லாம் முந்தைய பழைய வரலாற்றை

உடையதாக ஆளுயரம் புத்தர் சிலை உள்ள வெளி "புத்தர் அவை" என வழங்குகிறது. இதன் அண்டையில் இருந்த ஒரு கூரை வீட்டில்தான் (இப்போது தட்டோட்டு வீடு) - புத்தர் பெருமான் திருமுன்பில்தான் - நான் பிறந்தது (3.2.1943).

விருத்தாசலம் எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டு வழங்கும் பாடல் பெற்ற திருத்தலமான திருமுதுகுன்றத்தின் இறைவன்தான் பழமலைநாதர். வடமொழியில் 'விருத்தகிரீசுவரர்' என்பார்கள். என் பெற்றோர், எங்கள் தமக்கையார் பிறப்புக்குப் பிறகு ஓர் ஆண்மகவுக்காக முழுநிலவு நாள்தோறும் திருமுதுகுன்றம் வந்து வணங்கி வழிபட்டு நின்று வேண்டிக் கொண்டார்களாம். அதனால்தான் நான் பழமலை.

குழுமூர், ஊரை ஒத்த மக்கள் தொகை கொண்ட 'சேரியை' உடையது. ஊரில் கார்காத்த வேளாளர் மற்றும் படையாச்சிகள் பெரும்பான்மையினர். ஒரு பெரிய செருக்கான பிற தொழில் குடியினர் யாவரும் எங்கள் ஊரில் உண்டு. மகமதியர், கிறித்துவர் என்போர் மதம் மாறியவர்கள்; மகமதியர்கள் ஊரிலும், கிறித்துவர்கள் சேரியிலுமாக உள்ளனர்.

என்னுடைய முதல் பத்தாண்டுகள் (1943-54) குழுமூரில் கழிந்தன. 52-54 ஆண்டுகளில் குலக்கல்வி முறை என்று பகுதி நேரம் பயின்றவன். மீதிநேரம் கொல்லைக் காவல், மாடு மேய்த்தல் - என்று தந்தையாருக்கும் பயிர்த் தொழிலில் உதவியாக இருந்தவன்.

பிறகு திருமுதுகுன்றத்தில் ஓர் ஆறு ஆண்டுகள் (1954-60) பிள்ளை இல்லாமல் போன எங்கள் அத்தைக்கு வளர்ப்புப் பிள்ளையாக இருந்து உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்தேன். பிறகு சிதம்பரம் - அண்ணாமலை நகரில் (தொடர்ந்து ஆறு ஆண்டுகள் 1960-66) ஓராண்டு புகுமுக வகுப்பும் ஐந்தாண்டுகள் தமிழ் இலக்கியமும் பயின்றேன். தந்தையார் என்னைப் பொறியியல் படிக்க வைக்க மிகவும் ஆர்வம் கொண்டிருந்தார். ஆனால் கணக்கு சரியாக வராத நான், தமிழ் இலக்கிய வகுப்பில் சேர்ந்துவிட்டேன். அப்பா நிறுத்திவிடுவாரோ என்று அஞ்சிப் பொறியியல் படிப்பதாகச் சில ஆண்டுகள் ஏமாற்றிக் கொண்டு வந்தேன். பிறகு அது தெரியவந்தபோது, 'எழுத்தாளராகிச் சம்பாதிக்கலாம்' என்று அப்பாவுக்குச் சமாதானம் சொன்னேன்.

உயர்நிலைப்பள்ளிப் படிப்புக்காக விருத்தாசலம் வந்தேன். விருத்தாசலம் சாத்துக்கூடல் சாலை ஆலமரத்துத் திரௌபதி அம்மன் கோவில் பாரதம், கூத்து, அரவான் களபலி, தீமிதி - யாவும் என்னைக் கவர்ந்திருக்கின்றன.

மாசிமகம், வசந்த விழா. சிலைகள். ஓவியங்கள் என்று தான் 'பெரியகோவில்' அறிமுகமானது. கோவில் வழிபாட்டில் ஓர் கலாச்சார இடைவெளி இருந்தது. அது முன்னேறியவர்களுக்கும் மிகவும் பிற்படுத்தப்பட்டவர்களுக்குமானது. என்னுடைய உயர்நிலைப்பள்ளி ஆண்டுகளில் (54-60) கையெழுத்து ஏடுகள் - மலை பொங்கல் மலர் - 59 (ஐந்தாம் படிவம்), மலை கவிதை கையெழுத்தேடு - 60 (ஆறாம் படலம்) தயாரித்திருக்கிறேன். முந்தியவர்களைப் பார்த்துத் தயாரிக்கப்பட்ட இந்த ஏடுகளில் படைப்புகள் யாவும் என் கவிதைகளே. சுற்றுக்கு விட்டிருக்கிறேன். கடகட வண்டி......... கடலாணி வண்டி......... என்று கண்டியங்குப்பத்து நண்பன் பழனியப்பனின் மிதிவண்டியைப் பற்றி எழுதினேன். கவிதையை விட மிதிவண்டிப் பிரபலமாகிவிட்டது!

அய்ந்தாண்டு பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியப் படிப்புதான் நான் கவிதைகள் எழுதக் காரணமாக இருந்ததாக உணர்கிறேன். நான் இவ்வாறுதான் இசைத்தமிழ்க் கலைஞனாகவோ கூத்துத் தமிழ்க் கலைஞனாகவோ இல்லாமல், இயல் தமிழ்க்கலைஞனாக உருவாகியிருக்கிறேன்.

பல்கலைக்கழக ஆண்டுகளில் (1960-66) கல்லூரி மாணவர் களுக்கு இடையிலான மரபுக்கவிதைப் போட்டிகளில் கலந்து கொண்டு ஆறு முதல் பரிசுகளை வென்றிருக்கிறேன். கவிமணி பத்தாம் ஆண்டு நினைவுக் கவிதைப் போட்டி ஒன்று. கவியரசு கண்ணதாசனாரின் தாயார் பெயரிலான சுழற்கோப்பை ஒன்று என சிலவற்றைக் குறிப்பிடலாம்.

**கவிதை உலகில் நுழைந்த அனுபவம்**

விருத்தாசலம் உயர்நிலைப்பள்ளியில் அப்போது புதிதாகப் பணியில் வந்து சேர்ந்தவரும் எங்கள் கணித ஆசிரியருமான வே.சபா நாயகம் அவர்கள் இன்றும் சிறுகதை, புதினம், பகுப்புரைகள் என்று எழுதிக் கொண்டிருக்கும் எங்கள் வட்டார மூத்த எழுத்தாளர். வகுப்பில் இவர் புதுமைப்பித்தனின் கதைகளைச் சுவைபடச் சொன்னதைப் போலவே கவிமணியின் கவிதைகளையும் சொல்லியிருக்கிறார். இதனால்தான் உள்ளூர் கிளை நூலகத்திலும், பிறகுப் பல்கலைக் கழக நூலகத்திலும் நான் பெரும்பாலும் கவிதைத் தொகுதிகளைத் தேடிப் பிடித்துப் படித்தேன். பெ. தூரனின் 'மின்னல் பூ', கவிமணியின் 'மருமகள்வழி மான்மியம்' என்ற கவிதைத் தொகுதிகளைப் படித்தேன். பெ. தூரன் அவர்கள் கவிதைகளுக்குக் குறிப்புகள் எழுதியிருந்தது படிப்பதற்கு உதவியாக இருந்தது. இந்த முறையை நான் என் கவிதைத் தொகுதிகளில் பின்பற்றியுள்ளேன்.

பல்கலைக் கழகத்தில் எங்கள் பேராசிரியர் மு. அண்ணாமலை அவர்கள் ஒரு பெயர் பெற்ற ஆளுமையுள்ள கவிஞராக இருந்து எங்களுக்குப் பாடம் நடத்தியது, நான் கவிஞன் ஆவதிலேயே கவனம் உடையவனாக இருந்ததற்குக் காரணமாயிற்று அவராலேயே அவரைப் போலவே எனக்கும் ஆய்வுப் படிப்பில் அக்கறை இல்லாமல் போனது

புதுமைப்பித்தனைத் தேடிப் படித்தேன். அவரைக் கவிஞராகவே ஏற்றுக் கொண்டேன் பேராசிரியர் மெய்யப்பன் அவர்கள் இலக்கியச் செய்திகளாக நிறையச் சொல்வார் அவருடைய நண்பரும் பேராசிரியருமான சிற்பியின் 'சிரித்த முத்துகள்', 'நிலவுப் பூ', ஆகிய தொகுதிகளைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். அது என்னை ஊக்குவிப்பதாக இருந்தது.

அப்போது மாணவர்களிடையில் மூத்தக் கவிஞராயிருந்த நண்பர் பொற்கோ, 'வாழ்க்கைப் பூங்கா' என்ற தலைப்பில் கவிதைத் தொகுதி ஒன்று வெளியிட்டிருந்தார். அறையில் மேசைமீது காவியங்கள் இயற்றி அடுக்கி இருந்தார். அவருடைய இலக்கிய ஆளுமை என் போன்றவர்களுக்குக் கவிதை இலக்கியத்தில் ஆர்வமூட்டுவதாய் அமைந்தது. புலவர் படிப்பு படித்துக் கொண்டிருந்த பல்லடம் சாமி மாணிக்கம் அவர்களின் 'ஆயிரம் பூ' என்ற கவிதை நூல் படிக்கக் கிடைத்தது. நண்பர்கள் க.ப. அறவாணன், இளம்பாரதி போன்றவர்களின் அறைக்குச் சென்று அவர்களுடைய கவிதைகளைக் கேட்டேன். நண்பர்கள் அரங்கசாமி, யுத்தப்பள்ளம் திருநாவுக்கரசு, உதயம் நடராசன், சாரநாதன்..... ஆகியோரிடம் என் 'பிள்ளைக் கவிதைகளை' நான் படிக்கக் கொடுத்து விமரிசனங்கள் கேட்டதெல்லாம் ஒருவகையான வன்முறைதான்!

சாரநாதன் என்று நினைக்கிறேன். பேய் இருந்ததாக நம்பப்பட்ட மரம் ஒன்றில் என் கவிதைப்பிரதியை ஒட்டி வைத்துவிட்டான். படிக்கப் பயந்து கொண்டு ஓடிவிடுமாம்! அல்லது திரும்ப வராதாம்!

இது ஒருபுறம் இருக்க, எங்கள் பேராசிரியர் மெய்யப்பன் அவர்களோ "பழமலை" - என்பது ஒரு கவிஞனுக்குப் பொருத்தமான பெயர்தானா என்று தனக்குத் தானே கேட்டுக் கொள்வார். புனை பெயரோ என்று நினைக்கிற அல்லது கேட்கிற அளவுக்கு அது எனக்குப் பொருத்தமான பெயராக அமைந்துவிட்டது என்றே நினைக்கிறேன்.

1965-66 வாக்கில் எழுத்தாளர் சி.சு. செல்லப்பா அவர்கள், புதிய புதிய புத்தகங்களின் கட்டுகளோடு எங்கள் பல்கலைக்கழகம் வந்து எங்கள்

தமிழ்த்துறையில் பேசினார். அப்போதுதான் 'எழுத்து' இதழ், 'புதுக்குரல்கள்' தொகுதி அறிமுகம் கிடைத்தது. என்றாலும் நான் புதுமைப்பித்தன், ரகுநாதன் ஆகியோரைப் பின்பற்றி அவர்கள் நடையில் தான் 1970 வரை எழுதிக் கொண்டிருந்தேன். அவ்வளவுக்குத்தான் தமிழ்க் கவிதையின் யாப்பு நெகிழ்ச்சி அடைய முடியும் என்று நம்பினேன். புதுக்கவிதை உரைநடையின் ஒரு வடிவமாக - இருப்பதைப் பிறகுதான் கண்டு கொண்டேன். அம்மா, ஆதிமூலம் ... போன்ற தலைப்பிலான கவிதைகளை மறு ஆக்கம் (முறையே 1978, 1979) செய்துதான் பிறகு வெளியிட்டேன் (1986).

எழுத்துலகம் காவிரி நாடன், கடலூர் கா.பொ. இளம்வழுதி, கவிஞர் தெசிணி, சுரதா......... போன்றோரின் தொடர்பில் பொதுவாகக் கவிதை குறித்தத் தேடுதல்கள் எனக்கு முதன்மையாக இருந்தன.

'இளங்கோவின் நரிகள்', 'பெண்கொலை நன்னன்' - என்று புதுமைப்பித்தன் நடையில் நீண்ட கவிதைகள் இயற்றியிருக்கிறேன். காத்தவராயன், மதுரைவீரன், நல்லதங்காள் கதைகளைக் காவியங்களாக எழுதவும் திட்டமிட்டிருந்தேன். அந்தக் கதைகளுக்கு அவைதாம் சரியான வடிவங்கள் என்று இன்று உணர்கிறேன். பிறகுதான் கவிதையில் எழுத நினைத்திருந்த இந்தச் சிறுகதை, பெருங்கதை கரைகள் யாவும் உடைந்தன. மரபாகவும் இல்லாமல் புதுமையாகவும் இல்லாமல் இவை மனநிறைவு தராதனவாய் இருந்தன. இங்குப் பாரதிதாசனார் கண்ணகி, மணிமேகலை பற்றி எழுதிய காப்பியங்களை நினைவு கூறலாம்.

பல்கலைக்கழக ஆண்டுகளில் 'இயற்கைப்பித்தன்' என்று புனை பெயர் வைத்துக் கொண்டு 'வோர்ட்ஸ் வொர்த்து' போல எழுத ஆவல் கொண்டு சில எழுதினேன். எங்கள் ஆங்கிலப் பேராசிரியர் 'ஜிப்பா சீத்தாராமன்' அவர்களிடம் பாடல் கேட்டவர்கள் அந்தக் கவிஞர்களாகவே ஆகியிருப்பார்கள். பல்கலைக்கழகத்தின் இயற்கைச் சூழலும் இந்தத் தூண்டலும் நான் 'குரோட்டன்களோடு கொஞ்ச நேரம்' என்கிற தொகுதியைப் பிற்காலத்தில் உருவாக்கப் பல காரணங்களில் சில காரணங்களாக இருக்கலாம்.

மாணவர் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் (1965) மாணவனாக இருந்து கலந்து கொண்டது, களத்தில் நிற்கும் புறநானூற்றுக் காலத்துக் கவிஞனாகவே நான் என்னைக் கருதிக் கொள்ள வைத்தது. திணை, துறை குறிப்பிட்டு உடனுக்குடன் கவிதைகள் எழுதினேன். மாணவர் இராசேந்திரன் நினைவுக் கூட்டங்களில் உருக்கமுடன் கவிதைகள் படித்தேன். அந்த நாட்களில் கவிஞர்கள் காமராசன், காளிமுத்து

ஆகியோரின் கவிதைகள் உடனுக்குடன் எங்களுக்குக் கிடைத்துக் கொண்டிருந்தன. 'தென்மொழி' இதழில் பெருஞ்சித்திரனார் எழுதிவந்தார்.

'நிகழ்ச்சிக் குறிப்புக் கவிதைகள்' என்று என் கவிதைகளைப் பற்றி ஒரு பேட்டியில் (புதிய பார்வை: பிப். 97) கவிஞரும் விமரிசகருமான பிரம்மராசன் குறிப்பிட்டுள்ளார். மெய்தான். இதற்கானப் பின்னணியை இந்த என் கள அனுபவங்கள் எனக்குத் தந்திருக்கின்றன.

சிற்றூரையும் பயிர்த்தொழிலையும் பின்னணியாகக் கொண்ட எனக்கு ஞானக்கூத்தன் எழுதியவையும் - இன்குலாப் எழுதியவையும் கூட - அந்நியமாகவே இருந்தன. நான் எதை எழுத வேண்டும் என்பதில் தீர்மானம் இல்லாதவனாக 1977-78ல் தருமபுரியில் இருந்த ஆண்டில் கோயில், குளம், வரலாற்றுச் சின்னங்கள் என்று தேடிச் சுற்றிக் கொண்டிருந்தேன். தருமபுரி பெருமை உடையது என்று ஒரு பயண நூலாக எழுதத் திட்டமிட்டுச் செய்திகள் திரட்டினேன். விழுப்புரம் வந்த பிறகு கூவாகம், மேல் மலையனூர் என்று திரிந்து 'நரபலி திருவிழாக்கள்' என்றும் ஓர் நூல் எழுதினேன். 'நீரிடங்களும் பெண் தெய்வ வழிபாடும்' மதுரைப் பல்கலைக்கழகத்திற்கு ஆய்வேடாக (எம்.பில்.) எழுதியது (1980). 'அண்ணன் குப்புசாமி இன்னும் ஆழமானவர்' என்று ஒருவரின் வாழ்க்கைக் குறிப்புகளை அவரைக் கவனித்து எழுதினேன். திருக்குறளைப் பரப்பிய நகைச்சுவை அறிஞர் திருக்குறளார் வீ. முனிசாமி அவர்களைப் பற்றி உடன் இருந்து கவனித்து எழுதினேன். என் தேடுதல்களுக்கும் திறமைகளுக்கும் இவை இறுதி முடிவுகளா, இடைப்பட்ட பயிற்சிகளா என்று தெரியவில்லை.

தருமபுரியில் இருந்த ஆண்டில் (1977-78) மீட்சி பிரம்மராசன், சிவகுமார் இருவருந்தான் நான் 'சனங்களின் கதை'யை எழுதலாம். இப்படி எழுத வருகிறது என்பதை எனக்கு இனமறிந்து அடையாளம் காட்டியவர்கள். தமிழ்ப் புதுக்கவிதைக்கு நான் மட்டுமே வழங்கக் கூடியதாக இது இருப்பதை நானும் உணர்ந்தேன். சனங்களின் கதையைத் தொடுத்தேன்.

வேறு காரணங்களாலும் சொந்தமாக வெளியிட முடியாமல் இருந்தது. திருவண்ணாமலை மருத்துவர் து. சுப்பராயன், சிதம்பரம், பேராசிரியர் பி. கனகசபை ஆகியோர் சிறு பண உதவியும் செய்திருந்தனர்.

பேராசிரியர் பா. கல்யாணி இயக்கிய 'புரட்சிப் பண்பாட்டு இயக்கத்தில் கிடைத்த அறிமுகத்தில் பேராசிரியர் அ. மார்க்சு முன் வந்தார். கவிஞர் பொதிய வெற்பனைக் கொண்டு 'தோழமை : 7' என்று 'சனங்களின் கதை' கவிதைத் தொகுதி வெளிவந்தது (1988).

அ. மார்க்சு, 'சனங்களின் கதை'யில் கவிதைச் சாமர்த்தியங்கள் இன்மையைக் கண்டார். வேறு தகுதிகளால் இதனை வெளியிடத் துணிந்தார்.

இதற்கு முன்பாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு ஆய்வு மாணவராக வந்திருந்த இலங்கைப் பேராசிரியர் நுஃமான் அவர்களிடன். தோழர் ரவிக்குமார் மூலமாகத் தொடர்பு கிடைத்துக் கையெழுத்துப் பிரதியை அவர் கருத்துரைக்காகக் கொடுத்திருந்தேன். சில திருத்தங்கள் செய்து கொடுத்து நான் மகாகவியின் கவிதைகளைப் படிக்க வேண்டும் என்றார். மகாகவியின் கவிதைகளோ மரபான கவிதைகளைப் புதுக்கவிதை அடிகளில் எழுதியவனாக இருந்தன. பதிப்பித்தனவாக என்பது சரியாக இருக்கும்.

திரு. இராமநாதன் செட்டியார் தலைமையில் இயங்கிய புலவர் துறை ஆசிரியர் பெருமக்கள். உலக ஊழியனார், நடேச முதலியார் ஆகியோரை நெருங்கி ஐயங்கள் கேட்டிருக்கிறேன்.

திருவாளர்கள் தண்டபாணி தேசிகர், தெ.பொ.மீ., கா.சு. பிள்ளை, கவிஞர் மு. அண்ணாமலை, எனத் தமிழ் இலக்கியத்துறை ஆசிரியர்களிடம் பாடம் கேட்டேன்.

பிறகு தொடர்ந்து 1966 முதல் அரசுக் கலைக் கல்லூரிகளில் பகுதி ஒன்று தமிழ்ப் பாடங்கள் நடத்தும் விரிவுரையாளராக இருந்து வந்தேன். குறைந்தது திருமுதுகுன்றம் அரசுக் கலைக் கல்லூரியில் இருந்து தமிழ் இலக்கியம் கற்றுக் கொடுத்து ஒரு சில மாணவர்களையாவது என் விருப்பத்திற்கு உருவாக்க முடியாமல் போனதை இன்று ஒரு குறையாக உணர்கிறேன்.

என் வளர்ப்பைப் பற்றி குறிப்பிட்டுச் சொல்ல ஒன்றுமில்லை என்றே தோன்றுகிறது. இருக்குமானால் அவை 'என் சனங்களின் கதை' (1988) தொகுதியில் சொல்லப்பட்டிருக்கிறது. சராசரி சிற்றூர்ப் பையன் ஒருவனைப் போலத் தான் வளர்ந்தேன். வளர்க்கப்பட்டேன். அப்போது சத்துணவுத்திட்டம் இல்லை. இருந்திருந்தால் எங்களுக்கு உதவியாகத் தான் இருந்திருக்கும்!

எங்கள் தந்தையார் மற்றும் தாய்வழியினர் ஊரில் ஆண்டுதோறும் தெருக்கூத்து நடத்துவார்கள். தந்தையார் நாயனார். மாமன்மார்கள் 'காமுட்டி' (காமம்மூட்டி) கோயிலில் நாடகம் நடத்துவார்கள். ஊரில் தீமிதி. திருவிழாக்கள். திருவாதிரை. ஆடிப்பெருக்கு. பொன்னேர் என்று நடக்கும்.

எங்கள் தாய்வழிப் பாட்டனார் சிக்குப் பலகையில் வைத்து இராமாயணம் படிப்பார். பக்கத்துவீட்டுத் தாத்தா தன் பார்வை போனதால் கட்டிலில் கிடந்து தன் பெரிய எழுத்துக் கதைப் புத்தகங்களை என்னைப் படிக்கச் சொல்லிக் கேட்பார். வேலை செய்து கொண்டே கேட்டுக் கொண்டிருக்கும் கணபதி பண்டாராம். திருத்தங்கள் சொல்வார். குழுமூரில் எனக்கு வாய்த்த கலை இலக்கியச் சூழல் இதுதான்.

சிற்றூர் மக்களைப் பற்றிய 'சனங்களின் கதை'த் தொகுதியின் வெற்றியைப் பாரதிராசா மற்றும் இளையராசா ஆகியோரின் வெற்றிகளோடு சேர்த்துப் பார்க்கலாம். அக் காலக்கட்டத்தில் (80களில்) தமிழ்ப் புதுக்கவிதை உலகம் - படிமம். குறியீடு. இருண்மை என்று ஒரு தேக்கத்தில் இருந்ததும் பிறிதொரு காரணம்.

திருமுதுகுன்றம் 'நிறங்கள்' கலை இலக்கிய அமைப்பினர் குறிப்பாக உடன் சாலை மாணாக்கர் கவிஞர் பல்லடம் சாமி மாணிக்கம். கடலூரில் என்னிடம் பயின்ற மங்கலம்பேட்டை மாணவர் பேராசிரியர் பக்கிரிசாமி - 'குரோட்டன்களோடு கொஞ்ச நேரம்' - வெளிவர உதவியாக இருந்தவர்கள் (1991).

அடுத்து வந்த. 'இவர்கள் வாழ்ந்தது' (94) சனங்களின் கதையின் நீட்சியாகவும் விரிவாக்கமாகவும் இருந்தது. இதையும். 'நிறங்கள்' தான் வெளியிட்டது.

சனங்களின் கதையின் இரண்டாவது பதிப்பை (1996) சென்னை தாமரைச் செல்வி பதிப்பகம் வெளியிட்டிருக்கிறது.

94-க்குப் பிறகு எழுதியுள்ளவற்றை இனிமேல்தான் கொடுத்து வெளிக்கொணர வேண்டும். இவை பெரும்பாலும் இதழ்களில் வந்திருப்பவை. பல நாள் வீடுகட்டிய அனுபவங்களை சொல்வனவாக இருக்கின்றன.

நான் என் கவிதைகளை இதழ்களுக்கு அனுப்பி வைக்கும் அனுபவம் குறித்துச் சொல்வதும் இங்குப் பொருத்தமானது. ஒன்பதாவதோ பத்தாவதோ படித்த ஆண்டுகளில் குமுதம் வாரஇதழ். 'குமுதம்' என்கிற சொல் இடம் பெற்றிருக்கும் இலக்கியச் சான்றைக் கேட்டிருந்தது. அப்போது எங்கள் தமிழ்ப்பாடப் புத்தகத்தில் நளவெண்பாப் பாடல் பகுதியில் ஒரு வெண்பா இருந்தது. அனுப்பி வைத்தேன். வேறு யாரோ ஒருவர் அனுப்பிய அதே பாடலை வெளியிட்டிருந்தார்கள். எனக்கு ஏமாற்றமாய்ப் போனது. இந்த அனுபவத்திற்குப் பிறகு வெளியீட்டு உறுதி இருந்தால்தான் நான் இதழ்களுக்கு அனுப்புவது என்று உறுதியாக

இருந்தேன். இது தவறானதுதான். வளரும் ஒருவர் இதில் மானம் கருதுவது தன் வெளியீட்டு வாய்ப்பைத் தானே கெடுத்துக் கொள்வதாக முடியும். 'எழுத்து' உலகமும் 'வானம்பாடி' உலகமும் எனக்கு வேற்று முகங்கள் என்பது போல வேற்று உலகங்களாக இருந்தன. இந்த இடைப்பட்ட காலத்தில் எனக்கான வெளிப்பாட்டுத் தளத்தை நான் தேடிக் கொண்டுதான் இருந்தேன். அன்றைய 'மீட்சி' இதழோ இன்றைய 'காலச் சுவடோ' எனக்குத் தளமாக இல்லை.

ஏதோ ஒன்றிரண்டு கவிதைகளை அனுப்பி வைத்திருந்தாலும் தொடர்ந்து அனுப்பவில்லை. தனிமைப்படுவதாக அறிந்தாலும் நான் எழுத வேண்டியதாக நினைத்தவற்றை எல்லாம் எழுதிக் கொண்டிருந்தேன்.

பேராசிரியரும் தோழருமான பா. கல்யாணி இயக்கிய 'புரட்சிப் பண்பாட்டு இயக்கம்' நடத்திய 'செந்தாரகை' இதழிலும், 'தோழமை' இதழிலும் கூட என்னால் முழுமையான பங்களிப்புச் செய்ய இயலாமலே இருந்தது. நான் என்றைக்கும் கவிஞர்கள் இன்குலாப்புக்கோ, ஈரோடு தமிழன்பனுக்கோ இணையாக முடியாது. அவர்கள் அப்படி எழுதப் பொருத்தமாக இருந்தார்கள். புறநிலை எதார்த்தத்தில் அவர்களுடன் எனக்கு ஒரு உடன்பாடு இருந்தாலும் அகநிலை எதார்த்தத்தில் எனக்கு பிரச்சினைகள் இருந்தன. அது. ஒன்றை எப்படிச் சொல்ல வேண்டும் என்பது பற்றியதாக இருந்தது.

இன்று சிற்றிதழ்கள், பெருவணிக இதழ்கள் ஆகியவற்றில் எழுதும்படிக் கேட்கிறார்கள். நீர்த்துப் போய்விடக் கூடாது என்கிற எச்சரிக்கையுடன் எழுதி அனுப்புகிறேன். எளிமை, சனநாயகப்பாடு - என்கிற போர்வையில் ஒருவர், இதழ்களின் இயந்திரப்பசிக்கு இறையாகிவிடக் கூடாது. எனக்குக் கிடைத்திருப்பது புகழோ - விளம்பரமோ - இதுவே நாணம் தருகிறது. பணப்பயிர்களில் அக்கறை இல்லாத ஓர் எளிய விவசாயியைப் போல இலக்கிய உற்பத்திகளில் ஈடுபட விரும்புகிறேன். பிரபல்யம், கலைஞனுக்கும் கலைக்கும் ஆபத்து! உச்சவரம்பை இங்கும் அமல்படுத்தலாம்!

எழுத்தைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கு இது பொருந்தாது! ஒருவர் கலை இலக்கியச் செயற்பாட்டைத் துணைத் தொழிலாக - ஒரு பணியாக - வைத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்ல முடியாது. தொழிலில் வணிகத்தில் நேர்மையை வற்புறுத்தலாம்.

### என் கவிதைகளின் நோக்கம், கருப்பொருள்கள் பற்றிய விளக்கம்

கவிதைகளின் பொதுவான நோக்கம் என்றுமே 'விழுமியது நுவலல்' தான் என்றாலும் ஓர் அணியினுடைய அல்லது ஓர் ஆளினுடைய

நோக்கம் குறிப்பிட்ட ஒன்றாக இருக்க முடியும். முற்போக்கு, புரட்சி என்பவற்றுள் நம்பிக்கையுள்ள நான், ஒரு மக்கள் திரள் இவற்றைச் சாதிக்க அதற்கு உந்துதல் தர வேண்டும். அது எங்கு நிற்கிறதோ அங்கிருந்துதான் அதை முன்னோக்கி நகர்த்த வேண்டும். இறுதி வெற்றிகளுக்குப் போவது போலவே இடைநிலை வெற்றிகளுக்கும் நான் உதவ வேண்டும். வர்க்கங்களாகப் பிளவுண்டும், பிளவுபட்டும் வரும் ஒரு சமுதாயத்தில் யாருக்காக எழுதுகிறேன் என்னும் கேள்வி புறக்கணிக்க முடியாது.

சிற்றூர்களும், சிறு விவசாயிகளும் என் நெஞ்சுக்கு நெருக்கமானவர்கள். நான் என்னை எழுதுவது என்பது அவர்களை எழுதுவது. அவர்களை எழுதுவது என்பது என்னை எழுதுவது. நான் எனக்காகவும் இந்த மக்கள் பிரிவினருக்காகவும் எழுத வேண்டும். இதற்கான தகுதி எனக்கு இருக்கிறது. இதை எழுதுவது மட்டுமே நான் செய்கிற உருப்படியான வேலையாகவும் இருக்க முடியும். ஒரு நனைதலில் கரைந்துவிடும் வேசம் போடுவதில் எனக்கு உடன்பாடில்லை. என் குரல் - குயிலோ, காக்கையோ - உண்மையாக இருக்க வேண்டும்.

என் கவிதைகள் மார்க்சியத்தில் ஊன்றி நின்று பெரியாரியத்தைப் பேசுவனவாகவே நம்புகிறேன். என் கவிதைகளின் முதற்பொருள் சிற்றூர்கள் என்றும் சிறு நகரங்கள் என்றும் சொல்லலாம். கருப்பொருள் சிற்றூர் மக்களின் வாழ்க்கையும், சிறு நகரவாசிகளின் இருப்பிடமாகவும் இருக்கிறது. உரிப்பொருளோ ஒரு விடுதலைக்கான போராட்டமாகும். நான் தலித்தியம், பெண்ணியம், சூழலியம், விளிம்புநிலை - என்று புரிந்து கொள்வதும், பேசுவதும் இதில் நாம் வென்றடையத்தான். ஈழத்தமிழர் விடுதலை, சுயநிர்ணய உரிமை - என்பவற்றுள் என் ஈடுபாடு தவிர்க்க முடியாது. பொத்திக் கொள்கிற கைகளையும் கிழித்துக் கொண்டு காதுகளில் நுழைகிற ஓசை அது. வயிற்றிலிருந்து மேலேறி வந்து மூடும் கைகளை எரித்துவிடும் நெருப்பு அது.

வரலாறு என்னை விடுதலை செய்யும். நான் வரலாற்றை விடுதலை செய்ய வேண்டும்.

## கவிஞனும் கவிதையும்

கவிஞன் வேறு, கவிதை வேறாக இருக்க முடியாது. கவிதை எழுதுவது வேசம் போடுவது அல்ல. வெல்ல உருண்டையைப் போல வெளியேயும் உள்ளேயும் ஒன்றாக இருப்பது. போர்வாள் போல அதற்காக வடிவமைக்கப்பட்டதாக இருப்பது.

படைத்தவரையும் படைப்பையும் வேறாகப் பார்க்க வேண்டும் என்பது பானை வியாபாரத்திற்குப் பொருந்தலாம். கலை இலக்கியத்திற்குப் பொருந்தாது. குறிப்பாகத் தன்நிலைக் கவிதைகளுக்குப் பொருந்தவே பொருந்தாது.

குயவர்கூடத் தான் வனைந்தவற்றுக்குப் பொறுப்பேற்க கூடியவர். கவிஞரும் தாம் புனைந்தவற்றுக்குப் பொறுப்பேற்க வேண்டியவர். முகமூடிக் கொள்ளை போல அஞ்சியோ தனிமையில் செய்வது போல வெட்கப்பட்டோ செய்கிற காரியம் அன்று கவிதை. மாறுவேசத்தில் இருக்க நேர்ந்தாலும் ராசா ராசாவாகத்தான் இருப்பான்! வேசம் ஓர் உத்தியாக தந்திரமாகத்தான் இருக்க முடியும். ஏமாற்று இலக்கியம் ஆகாது. பொய்மீசை ஓர் இழுப்புக்குத் தாங்காது.

**கவிதையும் சமுதாயமும் : கவிதையின் சமுதாயப் பணி**

சமுதாயம் தனக்குரிய யாவற்றையும் போலவே கவிதையையும் படைத்துக் கொள்கிறது. அதன் தேவையை நிறைவேற்றாத எதையும் அது ஒரு போதும் வரவேற்பதும் இல்லை, வாழ வைப்பதும் இல்லை.

கபிலர் தேவைப்பட்டதைப் போலக் கம்பர் தேவைப்பட்டார். கம்பர் வேண்டியிருந்ததைப் போலக் கவிமணி வேண்டியிருந்தார். வால்ட் விட்மனின் வரவு இயல்பானதைப் போலப் பாரதியாரின் வரவும் இயல்பானது. இரசூல் கம்சதேவ் போல இங்கே ஒரு பாவேந்தர். நெரூடா முழங்கியதைப் போலவே இன்குலாப்பும் ஈரோடு தமிழன்பனும் முழங்க வேண்டியிருந்தது.

சிக்கல், முடிச்சு, சுளுக்கு - போல இருட்டாக எழுதும் பிரும்மராசன் ஏன்? ஓடை, ஒற்றையடிப்பாதை, உழவு போல வெளிச்சமாக எழுதும் பழமலய் ஏன்? ஏற்றத் தாழ்வான வளர்ச்சியுள்ள ஒரு சமுதாயத்தின் கவிதையில் பூடகமும், வெளிப்படையும் பக்கம் பக்கமாக இருக்கவே செய்கிறது.

இங்குக் கவிதையின் சமுதாயப் பணிதான் என்ன என்கிற கேள்வி சுவையானது.

ஏழாம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தரின் கவிதை இன்னிசையுடன் தமிழ் பரப்பியது. இருபதாம் நூற்றாண்டுப் பாவேந்தரின் கவிதை தமிழியக்கத்தை விரிவுபடுத்தியது. அவ்வையாருக்கு ஒரு பணி இருந்ததைப் போலவே செல்விக்கும், சிவரமணிக்கும், கனிமொழிக்கும், சுகந்தி சுப்ரமணியனுக்கும் ஒரு பணி இருக்கிறது. இலந்தைப் பழம்

பாட்டைக் கேட்ட தமிழர்கள்தாம் 'தூங்காதே தம்பி தூங்காதே' பாட்டையும் கேட்டார்கள்.

தொ.மு.சி ரகுநாதன் கவியரங்கக் கவிதைகள் ஒரு மாதிரி. அப்துல்ரகுமானின் கவியரங்கக் கவிதைகள் ஒரு மாதிரி. அழகிய சிங்கர் ஒரு கவிஞர். அக்கினிப்புத்திரன் (கனல் மைந்தன்) ஒரு கவிஞர்.

இன்று யாப்பின்றியும் உரைநடையிலும் செய்யப்படும் பல்வகைப்பட்ட இலக்கிய வடிவங்களில் ஒன்றான கவிதையின் செயல்தளம் மிகவும் சுருங்கியதுதான். உரைநடையின் சமுதாயப்பணியை மறுக்க முடியாதது போலவே கவிதையின் சமுதாயப்பணியையும் மறுக்க முடியாது.

கவிதை, கவிஞர் - என்பதாலேயே கிடைத்துவந்த இலக்கியப் பெருமை இனிச் சாத்தியம் இல்லை. இந்த இடத்தை "எழுத்தாளர்கள்" என்பவர்கள் பிடித்துக் கொண்டனர். இந்தச் சூழலில் ஒன்று கவிதையாக இருப்பதற்கும் ஒருவர் கவிஞராக இருப்பதற்கும் நிறைய உழைக்க வேண்டி உள்ளது. ஒரு நெருக்கடி தோன்றியுள்ளது. இதில் கவிதை தம் இடத்தைத் தக்க வைத்துக் கொள்வது என்பது அதன் இன்றியமையாமையை அது உணர வைப்பதில்தான் தங்கியுள்ளது.

என்ன இன்றியமையாமை? கவிதை தன் அக அழகான பொருளாலும் புற அழகான உருவாலும் எப்போதும் வேண்டப்படுவதாய் இருத்தல் வேண்டும்.

பன்னாமலும், தொணதொணக்காமலும் ஒருவருடைய இதயத்தோடு நெருங்கி நின்று பேசுவதற்கு கவிதையை விட்டால் வேறு என்னதான் இருக்கிறது?

ஆர அமர இருந்து பேசுவதற்கு அடிகள் நிமிர்ந்த கவிதைகள் என்றால், அவசரமாகப் பேசுவதற்கு 'ஹைகூ' கவிதைகள்.

---

கவியரங்கங்களில் கேட்கப்படும் கவிதைகள் குறைந்து, ஏடுகளில் படிக்கப்படும் கவிதைகள் பெருகிவருவது எதிர்பார்க்கக் கூடியதுதான். இருந்தும் இன்னும் சில காலம் கவிதைகள் சொல்லப்படலாம், கேட்கப்படலாம். இதில் அந்தரங்கம் இன்மை ஒரு குறையாக உணரப்படுவது.

இசைப்பாடல்களில் இல்லாத ஒரு மறைவை - தனிமையை - எழுத்துக் கவிதைகள் வழங்குவன. இதனாலேயே கவிதை மனிதருக்கு இறுதிவரைத் தங்கள் பயணத்தில் துணைவரக் கூடியவை.

தான் தனியாக இருந்து படிக்க முடியாமல் மரணப்படுக்கையில் கிடக்கும்போது, ஒருவர் தான் கேட்கத் திருவாசகம் படிக்கப்பட வேண்டுவது இதனால்தான்.

கடைசிவரை எது வருமோ வராதோ கவிதை வரும்! பெயர் முகவரி எழுதப்படும் மடலாக அது ஒருவருக்கு மன ஆறுதலையோ மனக் கலவரத்தையோ தருவதாக இருக்கும்.

'குரோட்டன்களோடு கொஞ்சநேரம்' கவிதைகள் குறித்துக் கவிஞர் கல்யாண்ஜி ஒரு பேட்டியில் (சுபமங்களா : சூலை 94) குறிப்பிட்டிருந்தார். 'அது அவருக்கும் அடுத்தவருக்கும் படிக்கச் சிபாரிசு செய்யும் புத்தகமாக இருக்கவில்லை. அவருக்கே கூட அவருக்குத் தவறான முகவரியில் சேர்ப்பிக்கப்பட்ட கடிதமாக அது இருந்திருக்கக் கூடும்' என்று குறிப்பிட்டிருந்தார். தன்நிலையாக எழுதப்படும் கவிதைகளுக்கு இது தவிர்க்க முடியாதது. இழுத்துவிடும் மூச்சுக் காற்றுக் கூட யாவரையும் ஒரேமாதிரி திருப்திபடுத்துவது இல்லைதானே! பால் பிடிக்காது, பழம் அலர்ஜி (ஒவ்வாமை) என்பவர்கள் கூட இருக்கிறார்கள். அதுவேறு.

**சமுதாய மாற்றத்தில் கவிஞனின் பங்கெடுப்பு:**

இது நம்முடைய மரபில் உள்ளதுதான். அவ்வையார், கபிலர் போன்றவர்கள் ஆளுவோரை அணுகி இருந்து ஆக்கவகையில் உதவியுள்ளனர். பேகன் மனைவி, நன்னனால் கொலை செய்யப்பட்ட பெண் - கண்ணகி, மாதவி, மணிமேகலை - ஆகியோர் செய்திகளில் நம் கவிஞர்கள் அக்கறை காட்டியுள்ளனர். பொதுவில் கலை இலக்கியச் செயற்பாடுகள் யாவுமே சமுதாய மாற்றத்தில் கலைஞர்களின் பங்கெடுப்புகள்தாம். துணையாக உடன்பாடாகவும், எதிர்மறையாக உடந்தையாகவும் இருக்கிறார்கள்.

திரைப்படத்துறையில் நான் பாடலாசிரியனாகப் போயிருந்தால் பட்டுக்கோட்டையாரின் வாரிசாக இருந்திருப்பேன் என்று நான் நினைப்பதுண்டு. புரட்சிப் பண்பாட்டு இயக்க மேடை நிகழ்ச்சிகளுக்காக அவ்வப்போது பாடல்கள் இயற்றியிருக்கிறேன். மேடைகளில் நானே தனியாகவும் சேர்ந்தும் பாடியிருக்கிறேன்.

'துப்பாக்கிக்காரனின் புல்லாங்குழல் பாடல்கள்' (1985) என்று வெளியிட்டிருக்கிறோம். எங்கள் தமிழ்நாடு அரசுக் கல்லூரி ஆசிரியர் கழகம் மற்றும் ஆசிரியர் - அரசு ஊழியர் சங்கங்களின் போராட்டங்களுக்கும் பாடல்கள் இயற்றிப் பாடியிருக்கிறேன். 'டேப்' என்னும் சிறுபறைதான் இசைக்கருவி!

இந்த நூற்றாண்டில் மாவோ, கோசிமின், நெருடா போன்றவர்களின் பங்கெடுப்புகள் முன்மாதிரியானவை. இவர்களுடைய கவிதைகளைப் போல நம் கவிஞர்களின் கவிதைகள் தொகுத்துக் காப்பாற்றப்பட்டுகின்றனவோ இல்லையோ, எண்ணற்ற கவிஞர்களின் பங்கெடுப்பைக் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது. பாரதியாரின் 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே' என்று தொடங்கும் சிந்துப் பாடல் ஒரு போட்டியில் மூன்றாவது பரிசு பெற்றதுதான். முதல், இரண்டாவது பரிசு பெற்றவர்களும் கவிஞர்கள்தாம். அவையும் கவிதைகள்தாம். கவிதை, 'தாள்' களத்தில் எழுதுகோல் நிகழ்த்தும் 'போர்' அல்ல. அது வைக்கோல் போரும் அல்ல, வெறும் அக்கப்போர் (வீண்பேச்சு)! பாரதியாரின் பெருமை அவர் கவிமணி, கனக சுப்புரத்தினம் ஆகிய அரசு ஊழியர்களைப் பார்க்கவும் நேரடியாகச் சமுதாய மாற்றங்களில் பங்கெடுத்தார் என்பதுதான். அவர் பங்கெடுப்பு என்பது அவருடைய கவிதைகளின் பங்கெடுப்பாகவே இருக்கக் காணலாம்.

வாழ்நாள் நேரத்தின் பெரும்பகுதியை ஒருவர் நாடகம் பாடல்கள் எழுதுவதற்கோ (இப்போது வாய்ப்புகள் மிகவும் குறைவு) திரைப்படப் பாடல்கள் எழுதுவதற்கோ செலவிடுவது என்பது கொடுமையானது. நம்மிடையில் ஒரு சிறந்த கவிஞரான வைரமுத்துவின் பேரில் என் வருத்தமெல்லாம் இதுதான். தன்னிலை விளங்காமல் போகிறது. பொலிகாளையின் விந்து உற்பத்திப் போல ஒருவரிடம் கவிதை உற்பத்தி சாத்தியம் இல்லை. உல்டா-புல்டா (உருட்டல்-புருட்டல்) கவிதை ஆகாது. படிக்கும் புத்தகங்களின் பக்கங்களிலிருந்து பிறப்பதல்ல கவிதை. புதிய புதிய அனுபவங்களிலிருந்து பிறப்பது அது. ஒருவர் தன் எழுத்தையே திருடும் அளவுக்கு அனுபவ வறுமைக்கு ஆளாக நேர்கையில், எழுதாமல் இருந்துவிடுவதே நல்லது. இதுதான் வறுமையில் செம்மை! இலக்கியத் திருடர்களைப் போல இறப்பிற்குப் பிறகும் அவ்வப்போது எழுப்பி விசாரிக்கப்பட்டு, ஒறுப்புக்கு ஆளாகும் திருடர்கள் வேறு யாரும் இலர்!

**கவிதைக் கோட்பாடு :**

இன்று கவிஞர் என்றால் யார்? எவர்? என்பவை கேள்விகள் ஆகின்றன.

கவிபாடுவதற்குக் காரிகை கற்பது போதுமானதாக இருந்த காலமெல்லாம் மலையேறியாயிற்று. கணக்கு புள்ளிக்கு உதவ வேண்டும். சுரைக்காய் கறியாக வேண்டும். அரசியல் சார்பு என்பதைக் குறைத்து மதிப்பிடுவது, பொம்மை மனிதர்கள் - வேடிக்கை மனிதர்கள் - கைக் கொள்ளும் ஓர் இயல்பு. இவர்கள் நெருப்பு என்று சொன்னால் வாய் பற்றிக் கொள்ளும் என்று சொல்லி வாயையும் வயிற்றையும் காப்பாற்றிக்

கொள்பவர்கள். இவர்களுக்கு நெருப்பு வேண்டாம். சுடுதல் கூடாது. ஆனால் இனிய அடிசில் மட்டும் வேண்டும்.

இவர்களும் எலும்பைக் கடிப்பார்கள். அவை தின்று எஞ்சிய எச்சில் எலும்புத் துண்டுகளாக இருக்கும்.

இவர்களுக்குப் போர் வேண்டாம். 'கொள்ளை' வேண்டும். கொள்ளை இல்லாத போரைக் கொச்சைப்படுத்துவதுதான் ஒப்புரவையும் ஓர்வையையும் தனி ஆளை முன்நிறுத்தி இவர்கள் மறுப்பது.

மன்பதைக்காக மனிதரும் பலியாக வேண்டாம். மனிதருக்காக மன்பதையும் பாழாக வேண்டாம். மன்பதையில் மனிதரையும், மனிதரில் மன்பதையையும் இசைவிக்கும் வாதந்ததான் நியாயவாதமாக இருக்கும். இந்தத் தருக்கத்திற்காகவே - இயங்கியலுக்காகவே - கவிதை நமக்கு வேண்டும். இதுவே பொதுவான கவிதைக் கோட்பாடும் ஆகும். என்றாலும் தனிச் சிறப்பாக ஒருவருக்கு ஏதேனும் இருக்கக் கூடும். என்னைப் பொறுத்தவரையில் அது என்ன? பல்கலைக்கழக ஆண்டில் அதிராம்பட்டினம் கல்லூரியில் ஒரு கவியரங்கத்தில் கலந்து கொண்டேன். தோழர் இன்குலாப்பும் கலந்து கொண்டதாக அறிந்தேன். சரியாக நினைவில்லை. பிறகு சில இலக்கிய விழா கவியரங்கங்களில் கலந்துகொண்டு பாடியது "சாமர்த்தியம் காட்டுவதாக" இருந்தது. கைத்தட்டல்கள் வாங்குவதற்கான கவிதை முயற்சிகள் அயர்வளித்தன. பிறகு ஒதுங்கிக் கொண்டேன்.

இன்று கவியரங்குகளில் தலைமை வகிப்பதற்கும் பொறுமை இல்லாமல் போய்விட்டது. பேச்சுக் கவிதைகளைப் போலவே 80 வாக்கில் வந்த எழுத்துக் கவிதைகளும் சோதித்தன. படிமம், குறியீடு, இருண்மை - என்று மருட்டினார்கள். புதுமைப்பித்தன் கிண்டல் செய்தது போலக் கவிதை எழுதுவது கத்தி விழுங்கும் வித்தையாக அச்சுறுத்தியது.

இந்தக் கூத்துகளுக்கு இடையில் நானோ என் மக்களோ எங்கள் பிரச்சினைகளோ இவர்கள் கவிதைகளில் என்ன தேடியும் இல்லாமல் இருந்தது. ஓர் "இட ஒதுக்கீட்டுப் போராட்டத்திற்குக்" கவிதையில் எனக்கு இடம் இருப்பதாகப்பட்டது. கி.ரா. தன் உரைநடையில் செய்ததை நான் என் கவிதையில் செய்ய நினைத்தேன்.

நான் கதைக்கு மாறமுடியாது. இட்டுக்கட்டுவது - கற்பனை - எனக்கு இயலாததாய் இருந்தது. இடையில் நான் பெற்றுக் கொண்டிருந்த அறிவியல் கண்ணோட்டம் மக்களிடையில் உள்ளதை உள்ளபடி சொல்லத் தேவையில்லை என்பதாய் இருந்தது.

நான் எதைச் சொல்வது? எப்படிச் சொல்வது? இவ்வாறான திகைப்புகளுக்குப் பிறகுதான் எனக்கு ஒரு திசைவழி கிடைத்தது. இதற்கிடையில் மார்க்சிய அரசியல் அறிமுகம் எனக்குக் கிடைத்திருந்தது. பேராசிரியர்கள் கல்யாணி, கோச்சடை, கேசவன், மார்க்ஸ், மற்றும் தோழர்களுடன் சேர்ந்து கொண்டேன். இவர்களுடனான தொடர்பு புதிய வெளிச்சமாக இருந்தது. அது நம்முடைய அரை நிலப்பிரபுத்துவச் சமுதாயத்தை உலக அரங்கில் வைத்துப் பரிசீலனை செய்தது.

கவிஞர் இந்திரனின் அறிமுகமும், 'சனங்களின் கதை'க்கு அவர் தந்த முன்னுரையும் என் 'சனங்களின் கதை'யில் ஒரு பிடிமானங்களை உறுதி செய்தன. இரசூல்சம்சுதோவின் கோவேந்தன் மொழியாக்கம் (1975) செய்திருந்த கவிதைகளின் ஒரு சிறு தொகுதியைக் கொடுத்துப் படிக்க சொன்னார். ஒரு பண்பாட்டு மீட்புக்காக நாம் சேர்ந்து தேட வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்திக் கொண்டிருந்தார். 'தமிழ் அடையாளம்', 'தமிழ் அழகியல்' என்று வெகுமக்கள் பக்கம் நின்று நிறையவே பேசினோம். 'அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம்' அப்போது எனக்குள்ளும் வந்திருந்தது. அது நீலவானம்!

நானிலம், ஐந்திணை - என்கிற வகைப்பாடு போதுமான வட்டாரப் பிரதிநிதித்துவம் உள்ள செய்யுள்பாட்டிற்கு வழி வகுப்பதாய் இருப்பது. இதனை இன்று உணர்வு முழுமையுடன் மேற்கொண்டு ஒவ்வொரு வட்டாரத்தினரும் கவிதை படைப்பதுதான், தமிழ்நாட்டுக் கவிதைக்கும் தமிழர் கவிதைக்கும் ஒட்டு மொத்தமான உருவம் கொடுப்பதாய் இருக்கும். நிகழிடங்களுக்கு என் கவிதைகள் இடம் கொடுப்பது இதனால்தான்.

செம்மையான தமிழ், நல்ல தமிழ், தரமான தமிழ், இலக்கியத் தமிழ், எழுத்துத் தமிழ், பொதுத் தமிழ் - என்பவற்றின் பெயரால் தமிழ்ப் பண்பாட்டை, தமிழ் மொழியைக் கிளைகள் கழிக்கப்படும் மரமாக வளர்த்து வருகிறோம். ஒரு மொழி தென்னை மரமோ பனைமரமோ அல்ல. கிளைகளும் விழுதுகளும் ஊன்றும் ஆலமரம். இந்தப் புரிதலினாலேயே என் கவிதைகளில் பேச்சுத் தமிழுக்கு உரிய இடம் கொடுக்கிறேன். அப்படியே பேச்சுத் தமிழிலேயும் எழுதிவிடுகிறேன்.

என் 'கவிதை மொழி'யின் ஒரு கூறு இவ்வாறாக இருக்க, என் 'மொழிநடை' பற்றிப் பார்க்கலாம். கவிதை மொழியின் காரணமாகவே என் மொழி நடை, உரைநடையாகவும், உரைநடையை நெருங்கிய நடையாகவும் அமைகிறது. எனக்கும் என் கவிதைகளுக்கும் 'கணையாழி'யிலும் 'குமுதத்திலும்' எழுதி நல்ல விளம்பரத்தைக் கொடுத்த எழுத்தாளர் சுஜாதாவுக்கு, என் எழுத்துக்களைக் கவிதையாக ஏற்றுக்

கொள்வதில் எந்த முன் கூட்டிய தீர்மானங்களும் தடையாக இருக்கவில்லை. கவிதை எதில் தங்கி இருக்கிறது - என்று முடிவு செய்வதில் இருக்கிறது இது. இறுதியாக மனிதர் என்பதும் கவிதை என்பதும் அக உருவங்களால்தான் தீர்மானமாகிறது. கவிதை ஆணழகனோ பெண்ணழகியோ அல்ல. யாக்கை அகத்து உறுப்பால் பொருள்படுவது போலவே யாப்பும் (கவிதையும்) அகத்து உறுப்பாலேயே பொருள்படுவது.

நிகழிடங்களைப் போலவே நிகழ்வுகளுக்கும் என் கவிதை களமாகிறது. நிகழ்வுகளை நான் பதிவு செய்வது வெறும் ஆவண மதிப்பீடுகளுக்காக மட்டும் அல்ல. தனிமனித அனுபவ வெளிப்பாடுகள் இன்மை என்பது, தமிழ் கவிதையை அப்போதுதான் உடைக்கப்பட்ட சல்லிகளைப் போல அல்லாமல், முனை மழுங்கிய கூழாங்கற்களாக ஆக்கி விடுகிறது. வேறுபடுவதுதான் கவிதை. இது இனங்காணத்தக்கதாய் இருப்பதுதான் கவிதை. நம் நீதிநூல் கவிதைகளின் சுவைக்குறைவுக்குக் காரணம் கவிதையில் காணும் அனுபவங்களுக்குத் தெளிவான முகவரிகள் இன்மைதான். நீதிகளை இப்படித்தான் சொல்ல வேண்டியிருக்கலாம். கவிதைகளுக்குச் சரியான முகவரிகள் இருக்க வேண்டும்.

ஒரு கதையை இவ்வாறு சொல்ல முடியாமல் இருக்கலாம். நாடகத்தில் பெயர் மாற்றங்கள் செய்ய வேண்டியிருக்கிறது.

அகவாழ்க்கைக் கவிதைகளில் "சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறாமை" என்பதில் ஓர் உத்தி - தொழில்நுட்பம் - இருக்கிறது என்பதினும் அடையாளங்கள் அழித்தல் இருக்கிறது. இந்தக் கெடுதல்களுக்கு இடம் கொடுக்க விரும்பாமல் பாடிய கவிதைகள் தாம் அவ்வையார் போன்றவர்கள் பாடியுள்ள 'அகப்புறப் பாடல்கள்'. அவற்றின் அழகே அழகு!

நான் கவிதைகள் எழுதிக் கொண்டிருப்பதில் என்னுடைய பிற சமூக நடவடிக்கைகளைக் கவனிப்பவர்களுக்கு வியப்பு ஏற்படலாம். ஒரு முறை நண்பர் கோவை ஞானி கேட்கவும் செய்தார். ஒருவர் தன்னைத் தேடி அடைவதற்குக் கவிதையைப் போன்ற உபாயம் வேறு ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. நான் ஒரு நல்ல கவிதையை எழுதவில்லை என்றால், நான் என்னைக் கண்டு பிடிக்கவில்லை என்று தான் பொருள். அல்லது கண்டுபிடிக்க என்னில் ஒன்றும் இல்லாத வெறுமை நான் என்பது தான் செய்தி.

ஒன்று கவிதையா, இல்லையா என்பதில் ஒரு தெளிவைப் போலவே ஒரு குழப்பமும் எப்போதும் இருக்கிறது எனக்கு. ஒருவர்

தனக்குச் சோறாக்கிக் குழம்பு வைத்துக் கொள்வது வேறு. பிறருக்கு விருந்து வைப்பது வேறு. விருந்து விருந்தாக இருக்க வேண்டும் என்பதாலேயே பிறர் விருப்பு வெறுப்புகளை அறிந்து படைக்க வேண்டியிருக்கிறது.

நான் என் கவிதை ஒன்றையோ தொகுதியையோ தேர்ந்தெடுக்கப்பட்ட நண்பர்களிடம் கொடுத்துப் படிக்க சொல்லிக் கருத்துகள் கேட்டுக் கொள்வது உண்டு. நேர்ந்துள்ள விடுபடல்களைச் சேர்த்துக் கொள்ளவும், நிறைவை உறுதிப்படுத்திக் கொள்ளவும் இது உதவுகிறது. ஒருவருக்கு அனைத்துப் பொழுதுகளிலும் இது சாத்தியப்படுதில்லை. அப்பொழுதுகளில் ஒருநாள், இன்னொரு நாள் என்று தானே படித்துப் பார்த்துச் சரி செய்து கொள்ள வேண்டியிருக்கும். இது எவ்வளவுக்கு முடிகிறதோ அவ்வளவுக்குக் கவிதை திருத்தப்பாடு - செய் நிவர்த்தி - பெறுகிறது.

கவிதை என்பது கவிஞரால் சொல்லப்படுவதாக மட்டும் அல்லாமல் வாசகரால் 'இல்லது நிரப்பலாகவும்' இருப்பது. கவிஞர்கள் - கவிதை நிகழ்வைத் தங்களுக்கு உள்ளே கொண்டு வெளியே இட்டவர்கள் - செத்துவிடலாம். கவிதைக்கு வாசகர்கள் காலந்தோறும் இருந்து கொண்டே இருப்பது இதனால்தான். இடைச் செறுகல்கள், பாடபேதங்கள் - என்பவை நேர்வதற்கும் இந்த 'இல்லது நிரப்பல்' சிறப்பான காரணமாக இருக்கலாம். இருக்கிறது.

ஒரு கவிதை மனத்தில் எப்படி உருவாகிறது? ஏட்டில் எவ்வாறு வெளியிடப்படுகிறது?

பிற இலக்கிய வகைகளைப் போலக் கவிதை என்பதும் செய்வது தான் (செய்யுள்) கட்டுவதுதான் (யாப்பு). இயற்றுவது, புனைவது, பண்ணுவது, படைப்பது - என்னும் சொற்களும் கவிதையின் உருவாக்கத்தை ஒருவாறு விளக்க உதவுகின்றன.

நிலக்கடலையைச் சான்று வைத்து இதனைப் பார்க்கலாம். கல்லை, வேர்க்கடலை, மணிலா கொட்டை என வழங்கும் இந்தப் பயிர் வியப்பளிப்பது. கொடியில் பூக்கும் பூவிலிருந்து சூலகம் நீண்டு நிலத்துள் புகுந்து, மறைந்து கொண்டு அங்கிருந்து காயாகி நெற்றாகிறது. அங்கேயே அதன் போக்கில் மறைந்திருந்து அழியவும் செய்யலாம். அதன் போக்கிலேயே வெளிப்பட்டு ஆகவும் ஆகலாம். ஆனால் இதனை ஒருவர் பயிர் செய்வது என்பது வேறு. தொழில் ஒரு பயிரைத் தனக்கும் பிறருக்கும் பயன்படுவதாக ஆக்குகிறது.

புலன்களில் பட்டவையும், மனதில் பட்டவையும் அடியில் புகுந்து மறைந்து கொண்டு நினைவுகளாகின்றன. உரிய காலத்தில் கடலைக் கொடியின் விழுதுகளை வெளியே பிடுங்கிக் காய்களை ஆய்ந்து குவிக்கிறோம். இந்த விழுதுகளை வெளியே இழுத்துக் காய்களை ஆய்ந்து குவிப்பதுதான் நினைவு கூர்வதும், நிரல்படச் சொல்வதும் ஆகும்.

நினைவு கூர்வது அகப்பாடு. நிரல்படச் சொல்வது புறப்பாடு. நினைவு கூர்வதும் நிரல்படச் சொல்வதுமான அகப்பாடும் புறப்பாடுந்தான் கவிதை. சொல்லிக் காட்டுவது (எழுதிக்காட்டுவது) நடித்துக் காட்டுவது - என்று காட்டுவதெல்லாம் வெளியிடல்தான். இந்த வெளியீட்டு வகைககளின் ஒன்று தான் கவிதை.

திணை (முதல், கரு, உரி) - நினைவு கூர்தல் என்றால், செய்யுள், யாப்பு - நிரல்படச் சொல்லுதல். நிரல்படச் சொல்லுதலின் நெகிழ்வு, அடர்த்திதான் உரைநடை, யாப்பு நடை என ஆகின்றன. அரையாப்பு நடை, நல்ல நரைநடையும் ஆகாது. புதிய கவிதை நடையும் ஆகாது. அதுவேறு. நிரல்படச் சொல்லும் அழகைச் சாதிக்க யாப்பறிவை வற்புறுத்தியவர்கள், நினைவு கூறும் அழகைச் சாதிக்க எண் வகைமைப் பாட்டறிவை வற்புறுத்தினார்கள். யாப்பும் மெய்ப்பாடும் எண்ணில் அடங்கலாய்ப் பல்கிப் பெருகுவன. கட்டுப்படுத்துவது இலக்கணக்காரர் வேலை அன்று. கண்டு காட்டுவது அவர்கள் வேலை. வேலையாக இருக்க வேண்டும்.

விடுதலை உணர்வுடன் கூடிய வெளிப்பாடுகளைக் கூர்தலறத்தின் (பரிணாம வளர்ச்சி) கூறுகளுள் ஒன்றாகப் புரிந்து கொண்டு ஊக்குவிப்பதுதான் முன்னேற்றம். ஒன்றின் வளர்ச்சி.

ஒரு கவிதை எவ்வாறு எழுதப்படுகிறது என்பதும், எவ்வாறு வெளியாகிறது என்பதும் ஒன்றுதான். இன்னும் எழுதும்முறை, சூழல் - என்று பேசலாம். ஒருவர் வேறுவேறு சுவைகளுக்கு வேறுவேறு மைகளைப் பயன்படுத்தலாம். ஒருவர் இருந்து எழுதலாம். ஒருவர் கிடந்து எழுதலாம். ஒருவர் நின்று எழுதலாம். எனக்கு நேரம் கிடைக்கும்போது எழுதவரலாம். இன்னொருவருக்கு விடியற்காலை வேண்டியிருக்கலாம். சரியாக எழுதாத பேனாவும் மோசமான தாளும் கூடத் தங்கள் பங்குக்குக் கவிதையில் ஒரு குறைக்குக் காரணமாக இருந்துவிடலாம். வேளையில் படுக்கச் சொல்லி, அணைக்கின்ற விளக்குகள் கவிதையையும் இருட்டாக்கி விடலாம்.

ஓர் அறைக் கூட்டத்தில் 'இவர்கள் வாழ்ந்தது' தொகுதியின் மீது கருத்துரைக்கையில் தலித் அறிஞர் பேராசிரியர் ராஜ்கவுதமன் 'பழமலை எழுத இன்னும் என்ன இருக்க முடியும்' என்று கேட்டார். இருக்கிறது. அது காவலர்களால் பாலியல் வன்முறைக்கு ஆளான சிதம்பரம் பத்மினி கதறிய அழுகையின் ஒரு கண்ணீர்துளியில் இருக்கிறது! ஈழத்திலும் உலகெங்கிலும் தங்கள் பிறந்த பொன்னாட்டின் விடுதலைக்காகப் போராடும் ஒரு பகத்சிங்கின் விழித்து நோக்கிய கண்களிலிருந்து சிவந்து புறப்படும் ஒரு தீப்பொறியில் இருக்கிறது.

* * *

பின்குறிப்புகள் :

1. ***குழூமூர்*** *: படை குழுமி மேற்செல்லுதற்கு இடமான ஊர் என்பர்.*
2. ***பழமலை*** *: முதுகுன்றம் என்பதன் இக்கால வழக்கு. விருத்தாசலம் தெருவில் நின்று 'பழமலை' என்று கூப்பிட்டால் யாராவது ஒருவர் 'தன்னையோ' என்று திரும்பிப்பார்க்கக் கூடும்.*
3. ***அமராவதி*** *: அமராபுரம்; தேவேந்திரன் நகரம். சிறுத்தொண்ட நாயனார் கூத்துப்பாட்டில் இப்பெயர் இடம் பெற்றிருந்தது போலும்!*
4. ***திட்டக்குடி*** *: வசிஷ்டக்குடி - வதிட்டக்குடி - திட்டக்குடி*
5. ***வழுதிபிராட்டி*** *: வழுதுபிராட்டி என வழங்குவது. விழுப்புரத்தை அடுத்த ஊர்.*
6. ***சாத்துக்கூடல்*** *: சாற்றுக்கூடல் (சாறு விழா) விருத்தாசலத்திற்குத் தென்மேற்கில் உள்ளதொரு சிற்றூர்.*
7. ***மணவாள நல்லூர்*** *: விருத்தாசலத்திற்கு மேற்கே உள்ள இவ்வூர்க் கோயில்தான் கொளஞ்சியப்பர் கோயில் என்னும் முருகன் கோயில். திருமுன்பின் மண்குதிரைகளும் பக்கத்தை முனிசாமி, இடும்பன் ஆகியோரையும் கொண்ட ஆதிநாள் அய்யனார் கோயில்தான் இது.*
8. ***கண்டியங்குப்பம்*** *: கண்டியர் - பாணர்; புகழ்வோர்; பாடுவோர்.*
9. ***பல்லடம் சாமி மாணிக்கம்*** *: விருத்தாசலம் மாப்பிள்ளையான இவருடைய வீட்டு நூலகம் அரியது. அண்மையில் திருமுதுகுன்றம் தமிழ்ப் பேரவை, திருக்குறள் ஆய்வு மையம் என்று தொடங்கித் தமிழ் வளர்த்து வருபவர்.*
10. ***தெசிணி*** *: தெய்வசிகாமணி என்னும் பெயரின் எழுத்துச்சுருக்கம் என்பர். இந்தப் பெயரில் கவிதை இதழ் ஒன்று வந்து கொண்டிருந்தது.*
11. ***இயற்கைப் பித்தன்*** *: புதுமைப்பித்தன் என்பது போல வைத்துக் கொண்டது. கவிதைப் பித்தன் என்றும் வைத்துக் கொண்டேன்! காசா? பணமா? எழுத்துதானே!*
12. ***முத்துசாமி*** *: குடிசாமி கோயிலில் பிறந்த முடி இறக்கி காதுகுத்தி, அங்குள்ள சாமிகளின் பெயர்களுள் ஒன்றை வேப்பிலைகளை உருவிப் போட்டு*

ஒற்றையானால் இது, இரட்டையானால் இது என்று எண்ணிப் பூசாரி முடிவு செய்வார்.

13. நான் எழுதியுள்ள பிற நூல்கள் :

1. 'யானைவாரி ஓடைக் கரையில்' (மரபிலான நெடுங்கவிதைகளின் தொகுதி)

2. 'அண்ணன் குப்புசாமி இன்னும் ஆழமானவர்'. திருப்பாதிரிப்புலியூர் கதர். அ.வை. குப்புசாமி அவர்களின் 55-ஆவது பிறந்த நாளில் அணுவெளியீடு. இரண்டாவதாக 78-இல் அவரால் வெளியிடப்பெற்றது. இதே நூல் 83-இல் சென்னை சேகர் பதிப்பகத்தாரால் 'நெஞ்சில் நிறைந்தவர்' என்னும் பெயரில் வெளியிடப் பெற்றது.

3. 'திருக்குறளைப் பரப்பிய நகைச்சுவை அறிஞர்' (80இல் தொடங்கி எழுதியது).

4. 'நரபலி திருவிழாக்கள்' (81-இல் எழுதியது).

5. 'நீரிடங்களில் பெண் தெய்வ வழிபாடு' (80-இல் எழுதியது).

6. 'புதிய கவிதைகள் ஒரு விசாரணை' (85-இல் எழுதியது)

1, 3, 4, 5, 6 வரிசை எண் உள்ள நூல்கள் அச்சேற வேண்டியுள்ளது.

14. செந்தாரகை : புரட்சிப் பண்பாடு இயக்கத்தின் மாத இதழ்; 84-87 ஆண்டுகளில் வெளிவந்தது.

15. தோழமை : இருமாத இதழ். 91-92 ஆண்டுகளில் வெளிவந்தது.

16. 'துப்பாக்கிக்காரனின் புல்லாங்குழல் பாடல்கள்' : இது பு.ப.இ. வெளியீடு. மே 85-இல் வெளியானது. 12 பாடல்களைக் கொண்ட சிறு வெளியீடு. கரும்பாயிரிட் புனை பெயர். செந்தாரகை ஆசிரியர் கோவை ஈஸ்வரனும் நீண்ட பயணம் சுந்தரமும் அணிந்துரை எழுதியுள்ளார்.

17. கோமல் சுவாமிநாதன் அவர்களுக்கு என் கவிதைகள் குறித்து ஐயங்கள் இருந்தன. ஆனாலும் சுபமங்களாவுக்கு அனுப்பியவற்றை வெளியிட்டுவிடுவது என்று வெளியிட்டு வந்தார்.

18. உல்டா-புல்டா : உல்டா என்பது உருட்டல் என்பதன் மரூஉ மொழி என்று நினைக்கிறேன். இது சென்னைத் தமிழ். புரட்டல் என்பது மரூஉ மொழியைப் புல்டா எனலாம். உருட்டல்-புரட்டல் இரண்டையும் சேர்த்து உல்டா- புல்டா எனலாம். இது என் சொல்லாக்கம்.

19. அகத்துறுப்பு : புறத்துறுப் பெல்லாம் எவன் செய்யும் யாக்கை அகத்துறும் பன்மி லவர்க்கு (79).

20. இல்லது நிரப்பல் : புறநானூற்றுப் பாடலில் வரும் ஒரு சொற்றொடர்.

21. சென்னையில் நடந்த காங்கிரஸ் மாநாட்டிற்குத் திரு. இராசீவ் காந்தி வருவதை முன்னிட்டு 19.4.88 செவ்வாய் இரவு விழுப்புரம் திரு.வி.க. சாலை நகர்க் காவல் நிலையத்தில் வைக்கப்பட்டோம். 20.4.88 புதன் மாலை உளுந்தூர்ப்பேட்டை நீதிமன்றத்தில் நானும் தோழர் வி. கார்த்திகேயனும் சாமீனில் விடுதலைப் பெற்றோம்.



# கா. வேழவேந்தன்

"இருந்தமிழே! உன்னால் இருந்தேன் - இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்!"

என்று நம் அருமைத் தமிழின் பெருமையைக் கூறி மகிழ்கிறது 'தமிழ்விடு தூது.'

இந்த வரிகளின் தாக்கத்தால் இளமையிலேயே அன்னைத் தமிழின் மேல் ஒரு தனிக்காதல் கொண்டு அதன் அடிமையானவன் நான்.

"பாட்டுத் திறத்தாலே - வையத்தைப்
பாலித்திட வேண்டும்!"

மகாகவி பாரதியின் இப்பாட்டடிகள் என் நெஞ்சில் ஓயாமல் ரீங்காரமிட்டுக் கொண்டே இருந்த காரணத்தால் 'கவிதைதான் நமது கைவாள்' என்று பாட்டுப் பாட்டையில் நடக்கத் தொடங்கினேன்.

தமிழகத்தின் வடகோடியில் ஓடும் ஆரணியாற்றங்கரையில் அமைந்த 'காரணி' எனும் சிற்றூரில் பிறந்த நான், இயற்கையின் தாலாட்டோடு வளர்ந்தேன். என் வீட்டு வாயிற்படியைத் தொட்டு கொண்டு ஓடும் நுரைத்ததும்பிய ஆறும், புறக்கடையில் அமைந்த அல்லியும் கொட்டியும் பூத்த எழிற்குளமும், அதில் துள்ளி விளையாடும் மீன்களும் என் பிஞ்சு நெஞ்சில் கவிதைத் தீயை வளர்த்துவிட்டன.

சென்னை உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்த எனக்கு, அன்னைத் தமிழின் அழகெலாம் கூறி, செய்யுள் செய்யும் இலக்கணம் கற்பித்து, கவிதை எழுதத் தூண்டினார் புலவர் தணிகை உலகநாதன் அவர்கள். பள்ளி ஆண்டு மலரில் என் முதற்கவிதை வெளியாகி பாராட்டினை அள்ளித் தந்தது.

சொந்தமான நம் செந்தமிழ் சோலையைத் தீய்க்க வந்த 'இந்தி' எனும் செந்தீயை எதிர்த்துக் கடும்போர் தொடங்கிய காலம் அது.

என் ஆவேசக் கவிதைகள் தொடர்ந்து திராவிட இயக்க ஏடுகளில் வெளிவந்தன.

செந்தமிழ் தோழி! செந்தமிழ் தோழி!
வந்தது செய்தி! வெந்தது நெஞ்சம்!
பைந்தமிழ் நமக்கோ பரிதி: இந்திப்
பந்த வெளிச்சமா பரிதியை ஒழிக்கும்?
ஆங்கிலம் இந்திக் கயல்மொழி என்றால்
இந்தி தமிழனுக் கென்னவாம் தோழி?
தாய் முலைப்பாலிலே தமிழை மாந்தினோம்!
பேய் விழி கண்டா பின்னால் ஓடுவோம்!
முல்லையைப் பிடுங்கிக் கள்ளியை வளர்ப்பதா?
சிலம்பு, மேகலை செழித்த தமிழை
விலங்கிட வருமாம் வேகாத இந்தி!
சட்டம் அதற்குத் தடியாய் அமையுமாம்!
கட்டிப் போட்டா குட்ட ரோகியைக்
காதல் செய்திடக் கட்டளை இடுவது?
குயிலின் நாவைக் கூறுகூ றாக்கினும்
பயிலுமோ கோட்டான் பாழ்மொழி தன்னை?
மூவாத் தென்றலாம் மூச்சாம் தமிழை
'வாடை இந்தி'யோ வந்தே அழிப்பது?
இழுத்துக் கதவை மூட
விழித்தெழு தோழி, விழித்தெழு தோழி!

இப்படி அன்று இளங்குருதி கொப்பளிக்க என் பாடல்கள் அமைந்தன. தலைமுறைக்கோர் தலைவரான அறிஞர் அண்ணா அவர்கள் 'திராவிட நாடு' ஏட்டின் முகப்பில் தொடர்ந்து என் கவிதைகளை வெளியிட்டு மிகப் பெரும் ஊக்கம் தந்தார்.

அன்று ஒரு நாள் பச்சையப்பன் கல்லூரியின் வகுப்பு முடிந்தபின், விடுதி சென்று அறையைத் திறந்தேன். அறிஞர் அண்ணாவே தன் கைப்பட எழுதிய அந்த அரிய அஞ்சலட்டை என்னை மகிழ்ச்சி மலையின் உச்சிக்கே அழைத்துச் சென்றது.

*அன்புள்ள கவிஞர் வேழவேந்தனுக்கு, தமிழர் திருநாள் மலராக, 'திராவிட நாடு' வெளிவருவதை அறிவீர்கள்; அருள்கூர்ந்து அம்மலருக்கு உங்களின் கவிதையை அனுப்பு உதவ வேண்டுகின்றேன்.*

*அன்பன்*
**அண்ணாதுரை**

என்று எழுதப்பட்ட அந்தக் கடிதத்தை மாணவ நண்பர்களிடமெல்லாம் பெருமிதத்துடன் காட்டினேன். அந்த வாரமே என் கவிதையை எழுதி

எடுத்துக் கொண்டு காஞ்சி நகரில், 'திராவிட நாடு' அச்சகத்தில் நேரில் சென்று அறிஞர் அண்ணா அவர்களைச் சந்தித்தேன்.

'அஞ்சலில் அனுப்பி இருக்கலாமே' என்று அண்ணா கூறினார்.

'இல்லையண்ணா. உங்களிடம் சண்டை போடவே வந்திருக்கிறேன். திராவிடநாடு இதழில் எங்கள் எழுத்து இடம் பெறுமா' என்று ஏங்கிக் கொண்டிருக்கும் என் போன்றோர்க்கு நேரம் செலவிட்டு தாங்கள் தங்கள் கைப்பட கடிதம் எழுதத்தான் வேண்டுமா? அந்த நேரத்தில் இதழில் ஒரு பெட்டிச் செய்தி எழுதலாமே. தாங்கள்' என்று என் ஆதங்கத்தை வெளிப்படுத்தினேன்.

உடனே அண்ணா அவர்கள் பதில் சொன்னார்.

"இல்லைய்யா, நீ ஒரு சுயமரியாதைக் கவிஞன்; நான் உன்னிடம் கவிதை கேட்க வேண்டும்; நீ தர வேண்டும்; இதுதான் முறை" என்றார். அந்த மாமேதையின் பதிலில் நான் கரைந்தே போனேன்.

முப்பத்தைந்து ஆண்டுக்கு முன்னர் நான் எழுதிய 'வேழவேந்தன் கவிதைகள்' எனும் முதல் தொகுதியை, தலைநகரில் அண்ணா அவர்கள் வெளியிட்டு நாவாரப் பாராட்டி வாழ்த்தினர்கள். என் திருமண நாளைவிட மிகுந்த மகிழ்ச்சி பெற்ற நாள் அதுதான்!

கருத்து விதை என்பதன் சுருக்கச் சொல்தான் 'கவிதை' என்பது என் கருத்து.

'கவிதை' பற்றியே நான் எழுதிய கவிதை இது:

'பூச்சிரிப்பால் குழி இழையும் குழவிக் கன்னம்
பூரிக்கும் அன்னைக்குக் கவிதை! வானில்
நீச்சலிடும் நிலவோட்டம் கலைஞனுக்கு
நெஞ்சினிக்கும் உயிர்க்கவிதை! நாவரங்கில்
கூச்சலிடும் சில்வண்டின் இனிய ஓசை
கொஞ்சுதமிழ்ப் பாவலர்க்குக் கவிதை! நாவின்
பேச்சின்றி ஆணழகன் பதித்த பார்வை
பெண்ணெஞ்சைச் சிலிர்க்கவைக்கும் கவிதை என்பேன்!

உதிர்ந்துவிழும் இலைச் சருகு நாளை வாழ்வை
உணர்த்துகின்ற நுண்கவிதை! மறவன் போரில்
எதிர்சென்றே ஏற்றவிழுப் புண்கள் எல்லாம்
எந்நாளும் புகழ்பாடும் கவிதை! வெள்ளிக்
கதிர்வீச்சில் மழைத்திவலை வரைந்து காட்டும்

கவர்ச்சிமிகு வானவில்லோர் கவிதை! பூவில்
சதிராடி உடல்தழுவும் குறும்புத் தென்றல்
தாரத்தின் சக்களத்திக் கவிதை என்பேன்!
மணநாளில் கழுத்தேறும் மாலை, வாழ்வின்
மறைவிளக்கும் புதுக்கவிதை! நித்தம் ஓடிப்
பணம் சேர்க்கும் கருமியின்கை இரும்புச்சாவி
பரிதாபக் கதைபேசும் கவிதை! மண்ணில்
அணங்குகளின் விழியூறும் கண்ணீர் நூறாய்
ஆயிரமாய்ப் பொருள்கூறும் கவிதை! இங்ஙன்
கணக்கிட்டால் உலகத்தின் அணுக்கள் யாவும்
கவிதைகளின் தேக்கமடா! மறுப்பார் எங்கே?'

நாற்பது ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ் ஆட்சி மொழிச்சட்டம் பிறப்பிக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து கல்லூரிகளில் தமிழ் பாடமொழி ஆக்கப்படும் என்ற திட்டமும் அறிவிக்கப்பட்டது. அந்தத் தேன் செய்தியைக் கேட்டவுடன் என்னுள் கிளர்ந்தெழுந்த பாடல் இது;

'கரிகாலா வாஸ்தி கிரேட் கிங்' கென்றிங்கே
கல்லூரிகளில் நேற்றுப் பயின்றோ ரெல்லாம்
கரிகாலர் ஒரு பெரிய அரசன்' என்றே
கனித்தமிழில் பயின்றிடுவார்! இனியுமிங்கே
புரியாத மொழியில்லை; பாடமில்லை!
பொருளியலும், அறிவியலும் கணித நூலும்
தெரிந்துசொலத் தமிழணங்கு நுழைந்தாள்! ஆகா
செகமல்லாம் தமிழ் மணக்க அட்டி ஏது?

இக்கவிதையை என்னுடைய தமிழ் இலக்கிய வகுப்பு மாணவ நண்பர்கள் துண்டுக் கவிதையாக அச்சிட்டு அனைவர்க்கும் வழங்கியதை இன்றும் நினைத்துப் பெருமிதம் அடைகின்றேன்.

ஒருமுறை சுற்றுலாக் கவியரங்கில் பங்கேற்றேன். ஒவ்வொரு கவிஞரும் ஊரைப் பற்றிப் பாடினார்கள். நான் சென்னையைப் பற்றி இப்படி ஒரு கவிதையைப் பாடினேன்.

"புத்தகத்துக் காகிதத்தைத் தின்னும் மாடு
பூமியின்மேல் மக்களையே இழுக்கும் மக்கள்
பொத்தல் இலைச் சோற்றுக்கு நாயினோடு
போட்டியிடும் 'மன்னர்குழாம்'! வைக்கோல் போன்ற
செத்தையிட்டு மூடிய தோல் கன்றால், பாலைத்
திருடுகின்ற கைகண்ட இடையர்! இன்னும்

எத்தனையோ விந்தையெல்லாம் நிகழும் மண்ணை
இதுவரை நீ காணாமல் இருத்தல் நன்றா?

படித்தவரோ சோர்வுடனே இருக்கும்போது
பதற்றமின்றி 'வெரிடையர்டு' என்று சொல்வான்
படியாதான் சோர்வுடனே இருத்தல் கேட்டால்.
பட்டென்று 'படாபேசார்' என்பான்! ஆனால்
அடியோடு இருவருமே 'களைப்பென்கின்ற
அன்னை மொழித் தமிழினிலே பேச மாட்டார்!
கொடுமையடா கொடுமை இது! தமிழோ இங்கே
கூவத்தில் நீச்சலிடும்! என்ன செய்வோம்?"

எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னர், நான் மனம் வெதும்பி எழுதிய இந்த வரிகளுக்கு இன்னமும் ஒரு நல்ல தீர்வு கிட்டவில்லையே என்று நைந்து போகின்றேன்.

'பேனா' தான் உண்மையான 'மந்திரக்கோல்' என்பதை உண்மைப்படுத்த நான் எழுதிய அறுசீர் விருத்தக் கவிதைகள் இவை:

'ஏர்ப்படை சுழன்றால் சோற்றின்
எழில்மணம் நிறையும்! நல்ல
கூர்ப்பேனா சுழன்றால், இங்கே
குவிந்திடும் கருத்துச் செல்வம்!
தேர்ச்சேரன் வாள்வீரத்தை,
செழுந்தம்பி இளங்கோ வால்தான்
பேர்வையம் உணரும் என்றால்
பேனாவா, வாளா தேவை!

எண்ணத்திற் குயிர் கொடுக்கும்,
எழிலுடன் உலவ வைக்கும்!
மண்ணிலே செத்தும் சாகா
மாந்தரை ஆக்கிவைக்கும்!
கண் முன்னால் மறைந்த ஒன்றைக்
காலமும் எதிர்நிறுத்தும்!
பெண் வாயின் ஈரம் போலே
பேனாவின் கருத்தி னிக்கும்!

ஆனானப் பட்ட மன்னர்
ஆதிக்கம் அழிந்த தற்கும்
தேனாகப் பட்ட மாதர்
தெய்வமாய் ஆனதற்கும்

கூனான தாழ்ந்த தோழன்
கோளரி ஆனதற்கும்
பேனாதான் 'மந்திரக்கோல்'
பிழை என்று சொல்வோர் எங்கே?'

காதல் கவிதையே உங்களுக்கு வராதா? இப்படி என் கல்லூரி நண்பர்கள் கேலியுடன் கேட்டனர். அவர்கள் மனநிறைவுக்காக நான் ஆக்கிய கவிதை இது.

சொல்லி அழைக்க ஒரு சொல்லில்லையே! - அவளைச்
சொல்லி அழைக்க ஒரு சொல்லில்லையே!
'கொல்லைக் கரும்பெ'ன்று வள்ளியைச் சொன்னேன்;
கூறுங்கள் நான் 'நுனிக் கரும்பா' என்றிட்டாள்!
'முல்லைச் சரத்'தினைப் பல்லுக்குச் சொன்னேன்;
முடங்கிக் கருகுமோ பல்லென்று கேட்டாள்!
(சொல்லி அழைக்க)

விழிகளைப் பாயும் 'எழிற்கயல்' என்றேன்;
மீனுக்குக் காந்தத்தின் ஆற்றல் ஏதென்றாள்!
'பழக்குலை இதழெ'ன்று அழகோடு சொன்னேன்!
பலநாளும் புளிக்காத பழமெங்கே என்றாள்!
(சொல்லி அழைக்க)

'மாங்காட்டுக் குயிலெ'ன்று வாயாரச் சொன்னேன்;
மழைமேகங் கருப்பா நான் எனக்கேட்டு நின்றாள்!
'பூங்காவின் காந்த'ளை விரலுக்குச் சொன்னேன்;
பொன்வண்ண உகிர்ஏது காந்தளுக்கென்றாள்!
(சொல்லி அழைக்க)

தங்கத்தை மிஞ்சிடும் தமிழ்க்கன்னி என்றேன்,
தளிர்மென்மை தங்கத்திற் கேதென்று கேட்டாள்!
நுங்கென்றே இதழ்களை நோகாமல் தொட்டேன்;
நுகர்ந்தாலும் வற்றாத நுங்கெங்கே என்றாள்!
(சொல்லி அழைக்க)

தனிமையிலே தவமியற்றிக் கவிதை எழுதும் கவிஞர்களுக்கு உரிய பாராட்டும் ஊக்க உரைகளுமே இனிமையூட்டும் பரிசுகள் என்பேன்.

இந்திய மண்மீது சீனநாடு வம்புக்குப் படையெடுத்து வந்த நேரம் அது. தமிழ் எழுத்தாளர்கள் சங்க மாநாட்டில் பாவேந்தர் பாரதிதாசன் தலைமையில் எல்லைப்போர் என்ற தலைப்பில் கவியரங்கம் ஒன்று நிகழ்ந்தது. மாணவனான எனக்கும் பாட வாய்ப்பளிக்கப்பட்டது.

நான் கவிதை பாடும்போது, கூட்டத்தின் ஒரு பகுதியினர் கேளாக் காதினராய் என் கவியைக் கவனிக்காமல் பேசிக் கொண்டிருந்தார்கள். தலைமை ஏற்ற பாவேந்தர், சினந்தோய்ந்த குரலில், 'கூச்சலை நிறுத்துங்கள், இந்த மாணவ நண்பர் என்னதான் பாடுகிறார் என்று கவனியுங்கள்' என்று கூறிவிட்டு, நான் அப்போது சொன்ன கவிதை வரிகளை மீண்டும் பாடச் சொன்னார்.

நான் திரும்பப் படித்தேன்: அந்த வரி இதுதான்.

" 'சூ' வென்றே விலங்குகளை விரட்டுவோம் நாம்;
'சூ' வருவான் என்பதற்கா இச்சொல் கண்டோம்?"

'சூயென்லா'யின் துரோகத்தைச் சாடிய என் பாடல் வரிகளைப் பாவேந்தர் நாவாரப் பாராட்டி 'அழகின் சிரிப்பு' நூலில் வாழ்த்து எழுதிக் கையெழுத்து இட்டுத் தந்தார். அதை மிகப் பெரும் பட்டயமாக மதித்து, பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன். பாவேந்தர் பாராட்டிய பின் அனைவரும் சேர்ந்து கையொலி எழுப்பினர். இதுதான் உலகம் என்று அறிந்தேன்.

அந்த பாவேந்தர் தலைநகர் சென்னையில் தொடங்கிய 'அனைத்துலகத் தமிழ்க் கவிஞர் பெருமன்ற'த்தில் என்னையும் ஒரு செயற்குழு உறுப்பினனாகத் தேர்வு செய்ததை இன்னமும் நினைத்து, நினைத்து மகிழ்கின்றேன். வாழ்நாளில் நான் பெற்ற பேறுகளில் இதுவும் ஒன்று.

ஒரு நாள் கடற்கரையில் படுத்துறங்கிவிட்ட நான், கனவுலகில் 'படைப்பென்'னும் மங்கையைச் சந்தித்து உரையாடினேன். அது பாடலாக உருவெடுத்தது:

'எலுமிச்சைக் கனி நிறத்தில் சில பேரைப் படைத்தாய்;
இருட்டாலே தோல்போர்த்துச் சில பேரை செய்தாய்!
சில பேர்க்கோ குங்குமப்பூ நிறத்தினை ஏன் வைத்தாய்?
சிறுபுத்திக் குறும்பு செய்தாய்! தீராத போரா?
உலகத்தைப் படைத்தவளா, கலகத்தைப் படைத்தாய்?
உன் குற்றம் உணர்ந்தாயா? எனக் கேட்டேன்;
பெண்ணாள் சொன்னாள்
'பல நிறத்து மனிதர்களின் இரத்தத்தின் வண்ணம்
பழச்சிவப்பு நிறந்தானே! எதற்குப் போர்?' என்றாள்!

'வையகத்துப் பசுக்களுக்கோ ஒருமொழியே கொடுத்தாய்!
மண்ணகத்து நாய்க்கெல்லாம் ஒரு குரலே படைத்தாய்!

தையலுரு கொண்டவளே! உனக்கிரக்கம் உண்டா?
சண்டாள மனிதருக்கேன் பலமொழிகள் தந்தாய்?
ஐயய்யோ அதனாலே ஓடுகின்ற குருதி
ஆற்றினிலே நீச்சலிடும் மகிழ்வென்ன?' என்றேன்.
'கையகத்துத் தறிச்சேலை பலவண்ணத் தோடு
காணட்டும் எனச் செய்தேன். இது தவறா?' என்றாள்.

'சாதி எனும் ஓநாயை உலவவிட்டாய்: அஃதோ
சதைகிழித்துத் தின்கிறதே ஆட்டுமந்தை உலகை!
ஓதிவிட்டாய் சிலரை வைத்து. 'விதி' யென்ற பெயரை;
ஓதிமரத்து மனிதர்களோ சோம்பேறி யானார்!
'பூதத்தைப்' 'பேய்களின் ஆவிகளின்' உலகைப்
புரளிகளாய்க் கிளப்பிவிட்டாய்! என் சொல்வேன்? ஆகா
ஏது மெட்டா மடையருக்கோ அதுவேதான் பேச்சு!
இதுதானா உன்படைப்பின் பெருமை?' என்றேன்; பார்த்தாள்

'தரைமட்ட மாக்கிவிடு நாடுகளை எல்லாம்;
தவிடுபொடி ஆக்கிவிடு மனிதரெனும் பூண்டை!
சரிநிகராய், சமத்துவமாய் அனைவரையும் படைப்பாய்,
சண்டைகளும் பூசல்களும் இல்லாமல் ஒழிப்பாய்!

ஒரு கொடிக்கீழ் மனிதகுலம் ஓராட்சி காண,
ஒரெல்லை, ஒரு மொழியைப் படைத்திடுக! என்றேன்
'சிரிப்பலையை எழுப்பி நின்றாள்; உறக்கம் விட்டு எழுந்தேன்;
தேடி நின்றேன். அவளில்லை! சிரித்தன விண்மீன்கள்!'

இந்த என் கனவுக் கவிதை நனவாகாதா என்று இன்னமும் பெரு மூச்செறிகின்றேன்.

டாக்டர் மு.வ. அவர்களிடம் நேரில் தமிழிலக்கியப் பாடம் படிக்க வேண்டும் என்ற அவாவுடன், இலயோலாக் கல்லூரியிலிருந்து பச்சையப்பன் கல்லூரிக்கு மாறி வந்தவன் நான்.

அவர் காட்டிய தாயன்பு என்றென்றும் என்னை மெய்சிலிர்க்க வைக்கும்.

'மழலைச் சிலை' எனும் தலைப்பில் நான் எழுதிய கவிதையை எடுத்து வைத்துக் கொண்டு 'இங்கே பாருங்கள்; திருமணம் ஆகாத என் மாணவர் தான் ஓர் அன்னையாகவே மாறி எழுதிய கற்பனையைச் சுவையுங்கள்' என்று உரத்த குரலில் படித்துக் காட்டினார்.

அந்தப் பாடல்தான் இந்தப் பாடல்:

'பால்நிலவைக் கிள்ளி வந்து நெற்றி யாக்கிப்
படுவானின் குழம்பெடுத்துக் கன்ன மாக்கித்
தோல் அவிழ்ந்த மாங்கனியால் இதழை ஆக்கித்
தும்பி தந்த தந்தத்தால் கழுத்தை யாக்கிச்
சேல் விழியைப் பெயர்த்து வந்த கண்க ளாக்கிச்
செம்பொன்னின் வளர்ப்படத்தால் உடலையாக்கி
ஆல் போன்ற என் வயிற்றில் உன்னை வைத்தோன்
'யார் மகனே யார் மகனே?' தேடுகின்றேன்.

'கிம்பர்லி' வைரத்தைப் பரப்பி வைத்து
கீழ்க் கொற்கை முத்தாலே சுவரெழுப்பி
செம்பவளக் குவியலினால் கூரையிட்ட
திறந்ததொரு அரண்மனைக்குள் போவென்றாலும்
தெம்பாங்குப் பண்ணே! உன் அணைப்பை யன்றி
'சீச்சீ, தேவையில்லை' என்றே சொல்வேன்
செம்பனைய மார்பகத்துக் கலசத்தே உன்
சீரிதழ்கள் பதிந்துவிட்டால், சொர்க்கம் காண்பேன்'

அந்தப் பெருந்தகை காட்டிய தும்பை மலர் அன்பை இன்று நினைத்தாலும் நெஞ்சம் நெகிழ்ந்து போகின்றேன்.

ஒருநாள் மாலை, பல்கலைக் கழக அலுவல் முடித்தபின் எதிர்பாராத வகையில் அவர் என் இல்லம் வந்தார்.

'என்னய்யா இது?' சொல்லியிருந்தால் நானே வந்து சந்தித்திருப்பேனே! என்று சொல்லி வரவேற்றேன்.

'ஏன் உங்களுடைய அடுத்தக் கவிதைத் தொகுதியைக் கொண்டு வரவில்லை? இதை கேட்டுப் போகத்தான் வந்தேன். உங்கள் கவிதைகளையெல்லாம் தேடி ஒன்று சேருங்கள்' என்று நயமுடன் அறிவுரை கூறிய அத் தமிழ்த்தகையால் உருவானதுதான் என் 'வண்ணத்தோகை' கவிதைத் தொகுப்பு. அந்த நூலுக்குத்தான் தமிழக அரசின் பதக்கப் பரிசும், பாராட்டும் கிடைத்தன.

நான் எழுதிய 'ஆற்றின்கதை' எனும் கவிதையைத் தேர்ந்தெடுத்து 'இந்தத் தொகுதியில் கண்டிப்பாக இதைச் சேருங்கள்' என்று கட்டளையிட்டார் டாக்டர் மு.வ.

அவருக்குப் பிடித்த அந்தப் பாடல் வரிகள்தாம் இவை:

" 'மேட்டூரி'ல் பிறந்தோர்கள் 'பள்ளத்தூரை'
விழியெடுத்தும் பாராத காரணத்தால்
'ஏட்டூரி'ல் சமத்துவமும் முடங்கக் கண்டோம்!
எனவேதான் பள்ளங்கள் நிரம்புதற்குக்
'காட்டூரை'க் கடந்தே நான் நடந்து வந்தேன்;
'கழனியூர்' தாண்டியபின் கடலூர் செல்வேன்!
பாட்டூரை ஆளுகின்ற கவிஞர் கூட்டம்
பாடல்முடி அணிவித்துப் போற்றி நின்றார்!

ஒரு கவிஞர் எனைப் பார்த்தார்; வளைந்தே ஓடும்
ஒயிலான மலைப்பாம்பே!' என்றார்; பின்னர்
ஒரு புலவர் எனைக் கண்டார்; 'கொல்லன் செய்யா
ஒளிர்கின்ற நல்வெள்ளிக் கம்பி!' என்றார்
ஒரு கவிஞர் எனைப் பார்த்து, 'உவகை யூட்டும்
ஒப்பில்லா எழில்தாயே! என்ற ழைத்தார்!
இருப்பவர்கள் புகழ்ந்தாலும், இகழ்ந்திட்டாலும்
ஏகுகின்றேன், ஏகுகின்றேன்! ஓய்வா உண்டு!"

உண்மையான சமத்துவம் தழைக்க ஆற்றை வைத்து நான் எழுதிய இந்தப் பாடல் அடிகள் அந்த மாமனிதனின் நாவால் பாராட்டப்பட்டன.

பூமிப்பந்தின்மீது வாழும் பல்வேறு நாட்டு மக்களில் தமிழருக்குத் தனி மதிப்பும் பெருமையும் சேர்த்த பெருங்கவிஞருள், திருவள்ளுவரே தலைமை ஏற்கிறார் என்பது என் ஆணித்தரமான கருத்து.

எங்கெல்லாம் இயலுமோ அங்கெல்லாம் குறளாரின் புகழைப் பாடாமல் நான் விடுவதில்லை.

வள்ளுவர் வகுத்த குறள் நெறி மட்டும் வையகம் முழுதும் செழித்து தழைத்து விடுமானால் போரும் பூசலும், களவும் கயமையும் ஏது?

'குறள் தரும் குரல்' என்ற தலைப்பில் இப்படி ஒரு கவிதை இயற்றினேன்.

"எத்தனை மொழிகள் மண்ணில்!
எத்தனை மொழிகள் நாட்டில்!
அத்தனை நாட்டு மக்கள்
அரிய நூல் குறளைக் கேட்டால்
ஒத்திங்கே போற்றுவானேன்?

உலகெலாம் ஒப்புகின்ற
முத்தான குரல் கொடுத்த
முதல்வரே குறளார்தானே!

வாய்மையின் நன்மை; தீய
வறுமையின் கொடுமை; பெற்ற
தாயினைப் பெருமை! ஈகை
தருகின்ற சீர்மை; உற்ற
சேயதன் கடமை; கற்கும்
செழுங்கல்விக் கேண்மை; பற்றும்
நோய்க்காதல் அருமை கூறும்
நுட்பங்கள் ஒன்றிரண்டா?

'அறத்துப் பாலா'லே வாழ்வின்
அங்கங்கள் தம்மைச் சொன்னார்!
சிறப்பான 'பொருட்பாலா'லே
செழும் ஆட்சி விளக்கம் சொன்னார்!
இறப்பில், இன்பப் பாலால்
இல்லறக் காதல் சொன்னார்!
துறவியா குறளார்? வாழ்வைச்
சுவைத்தோர் அறிஞர் என்பேன்!

திருக்குறள் நெஞ்சில் ஏறின்
சிறைச்சாலை குறையும்! தூய
திருக்குறள் பரவு மானால்
செறுபகை உணர்வு மாயும்!
இருக்கின்ற நூல்களுக்குள்
இது ஒன்றே 'பொதுமைச் சட்டம்'
இருக்கின்ற வாழ்நா ளெல்லாம்
எழிற்குறள் பரப்பி வாழ்வோம்!"

புதுக்கவிதையில்தான் சில படிமங்களைக் காட்ட முடியும் என்பதை மாற்றி மரபுக் கவிதைகளிலும் அந்த மெருகு வேலைகளைச் செய்பவன் நான் என்று கவியரசு வைரமுத்து என் கவிதை நூல்களின் வெளியீட்டு விழாவில் பாராட்டிப் பேசினார். அதற்கு எடுத்துக்காட்டாய், 'மின்னலே, மின்னலே' என்ற என் கவிதையைக் குறிப்பிட்டார். சில நொடிகளே உருவங்காட்டி மறையும் மின்னலைப் பற்றி, அவர் நெஞ்சை விட்டு மறையாத என் கவிதை அடிகள் சில, இவை:

"மின்னலெனும் 'வால்விளக்கே!' மழைப் பிறப்பை
விளம்புகின்ற 'ஒளித் தூதே!' மேகச் சேலை
பின்னி நிற்கும் 'தங்க வண்ணக் கரையே!' நல்ல
பேரிரைச்சல் வெடி 'இடியின் திரியே!' வாடும்
அன்னை மண்ணின் உயிரெல்லாம் சிரிக்க வைக்க
ஆடி வரும் 'பேரொளியே' கவிஞர் உன்னை
'மின்னல்' என்றா அழைத்தார்கள்? உழவர் மான
'விதி' எழுத்தே நீயன்றோ? மறுப்பும் உண்டா?

எண்ணெய் இன்றி 'எரிகின்ற கயிறே' ஓடும்
எலும்பில்லா முகிலுக்கே உணர்ச்சி யூட்டி
மண்ணெல்லாம் பொன்னார்க்கும் 'காந்தப் பெண்ணே!'
மழைப் பெண்ணின் திருமணத்து 'மத்தாப்பூவே!'
கண்சிமிட்டிக் கண்சிமிட்டி மறைவதேனோ?
கருவுற்ற திருமங்கை மேக மென்னும்
பெண் அணங்கின் உடல்வடிவை முழுதும் காட்டல்
பிழை என்றா மறைக்கின்றாய்? விளக்கம் தேவை!

எட்டாத தூரத்தில் மயங்கித் தூங்கும்
எருமைகளாம் மேகத்தை எழுப்புதற்கே
நெட்டிழைபோல் வந்ததொரு 'சூட்டுக்கோலே!'
நெடும் இடிப்பெண் காற்சதங்கை 'ஒளிப்பிழம்பே!'
கட்டணமே இல்லாமல் வெளியரங்கின்
கடைவீதி எரிகின்ற 'சரவிளக்கே!'
வெட்டவெளிச் சிறையினிலே அடைந்திருக்கும்
விண்மழைப்பெண் விடுதலைக்கே 'திறவுகோல்' நீ!"

ஒரு முறை சிங்கப்பூர் சென்றிருந்தபோது. ஒரு கடையின் மேலாளருக்கு அறிமுகம் செய்யப்பட்டேன். என்னை முதன்முதலாக நேரில் பார்த்த அவர் ஆர்வம் பொங்க, "கவிஞர் ஐயாவின் கவிதைகள் எனக்கு மனப்பாடம். இதோ பாருங்கள் அவருடைய கவிதை நூலை நைந்து போகுமளவிற்குத் திரும்பத் திரும்பப் படித்திருக்கின்றேன்" என்று கூறி எனக்குச் சிலிர்ப்பூட்டினார்.

அவர் விரும்பிப் படித்த, நான் படைத்த கவிதைகள் இவை: 'வாழ்வோர் யார்?' என்ற தலைப்பில் அவற்றை எழுதியிருந்தேன்.

"எழுந்தாலும் 'நெற்கதிர்' போல் எழுதல் வேண்டும்;
எரிந்தாலும் 'விளக்கைப்' போல் எரிதல் வேண்டும்;

அழுதாலும் 'தேனடை' போல் அழுதல் வேண்டும்;
அசைந்தாலும் 'தென்றலை'ப் போல் அசைதல் வேண்டும்;
விழுந்தாலும் 'விதை'யைப் போல விழுதல் வேண்டும்;
விரைந்தாலும் 'கார்முகில்' போல் விரைதல் வேண்டும்;
விழுதுவிடும் ஆலமரம்போல் நிழலைத் தந்து
வியனுலகில் வாழ்பவரே என்றும் வாழ்வார்!

எத்தனையோ மன்னரிங்கே இருந்தார்; போனார்!
எழில் பாரி மட்டும் ஏன் நெஞ்சில் நின்றான்?
கத்தரிக்காய்த் தலையிலுள்ள காம்புக் கிரீடம்
கறிக் குழம்பில் வந்திடுமா? அதுபோல் சேர்க்கும்
சொத்தெல்லாம் உயிர்போனால் தொடர்வதேது?
தொகை தொகையாய்ச் சொன்னாலும் செல்வம்தன்னை
வைத்திருப்பார் உணர்வாரோ? நல்ல சொற்கள்
வைக்கின்ற 'நடுகல்லில்' ஏற வேண்டும்!"

அவர் திரும்பத் திரும்ப இந்த வரிகளைச் சொன்ன போது, கடல் கடந்து சென்ற தமிழர்கள் இடையேயும், கவிதையால் அல்லவா இந்த மரியாதைக் கிடைக்கிறது என்று நெஞ்சுக்குள் பூரித்தேன்.

'ஏக்கங்களின் தாக்கங்கள்', 'தூறலும் சாரலும்' ஆகிய என் இரு கவிதைத் தொகுதிகளை தலைவர் கலைஞர் வெளியிட்டுச் சிறப்புரை நிகழ்த்தினார்.

அந்த விழாவில் அவர் குறித்து வைத்துப் பாராட்டிச் சொன்ன கவிதைகள் 'மழலைகளே' என்ற தலைப்பில் என்னால் எழுதப்பட்டவை.

"அன்னையென்றும் தந்தையென்றும் இருவர் சேர்ந்தே
அல்லிரவில் எழுதிவைத்த 'கவிதை' நீங்கள்!
பின்னர் வரும் உலகத்தார் உமைப்படிக்கப்
பெருமை மிகு காவியமாய் வளரவேண்டும்!
தன்னாலே வளர்வதுதான் உடலம்; ஆனால்
சலியாத படிப்பாலே, உழைப்பினாலே
பொன்னான மூளைவளம் வளர வேண்டும்;
புவிநூல்கள் அத்தனையும் படிக்க வேண்டும்!

'மீன்குஞ்சா'ய் நீங்களெலாம் பிறந்தி ருந்தால்
வெறிப்பாம்பின் வயிற்றுக்குள் போயிருப்பீர்!
'மான்குட்டி' யாய் நீங்கள் பிறந்திட்டாலும்
வரிப்புலிக்கே இரையாகச் சென்றிருப்பீர்!

'தேனீ'க்களாய் நீங்கள் பிறந்திருந்தால்
தினம் சேர்த்து வைத்து விட்டு மாண்டிருப்பீர்
ஏனென்று பகுத்தறிவும் மரபில் வந்தீர்!
எழுதுகின்ற நடுகல்லாய் நிலைக்க வேண்டும்".

இப்படிப் புகழுரை வழங்கிய கலைஞர்தான் என் தொடக்க நாட்களில் தான் நடத்திய 'முரசொலி', 'முத்தாரம்'. 'குங்குமம்' இதழ்களில் என் கவிதைகளை வெளியிட்டு, என்னை வளர்த்து ஆளாக்கினார்கள் என்பதை நான் என்றும் மறக்க மாட்டேன்.

உவமைக் கவிஞர் சுரதா அவர்கள் என் கவிதை நூலுக்குத் தந்த முன்னுரையில், கீழ்க்காணும் கவிதை வரிகளை மிகவும் சுவைத்தாகப் பாராட்டியுள்ளார்கள்.

'வாழ்வைச் சுவைக்க வைரநகைக் கூலியா?' என்ற தலைப்பில் பாடப்பட்ட அந்தக் கவிதை இதுதான்.

"காதலினைப் பகிர்ந்து கொள்ள ஞானக்கிளியே! - நாட்டில்
காசு கேட்கும் வழக்கமுண்டா? வானக்கிளியே!
மாதவனின் மனம்சுவைக்க ஞானக்கிளியே - மனிதன்
வைரநகைக் கூலிகேட்டான் வானக் கிளியே!

தருபவரைப் பெறுபவரை ஞானக்கிளியே! - நாட்டில்
சட்டம் போட்டா தடுக்க வேண்டும்? வானக் கிளியே
இருக்கும் வாழ்வை நுகர்வதற்கு ஞானக்கிளியே
இலஞ்சம் கேட்கும் நிலை மாறாதா? வானக்கிளியே!"

இது இன்னிசைப் பாடலாகவும் வானொலியில் மிதந்து வந்தது. பிறந்த மண்ணுக்குப் பீடும் பெருமையும் தேடித் தந்த தலைவர்களை மறவாமல் போற்ற வேண்டியது நம் நன்றிக்கடன் என்று நினைப்பவன் நான்.

அந்த வகையில் தந்தை பெரியார் ஆற்றிய அற்புதப் பணிகள் கால காலத்திற்கும் மறக்கமுடியாதவை. அவரைப் பற்றிய என் எழுத்தோட்டம், இவை:

"போர்பந்தர் காந்தியிங்கே இலையென்றாலும்
போராடி விடுதலையைப் பெற்றிருப்போம்;
கார்ல்மார்க்ஸ் - 'கேபிடலே' இலையென்றாலும்
காலத்தால் பொதுவுடைமை மலர்ந்திருக்கும்!
பேர் பெற்ற 'கலிலீயோ' இலையென்றாலும்

பின்னொருவன் உலகமது உருண்டை என்பான்!
ஈரோட்டுச் சிங்கம் அய்யா! நீங்கள் இன்றேல்
ஏதிங்கே நாத்திகத்தின் பேரியக்கம்?

நீங்கள் மட்டும் இம்மண்ணில் தோன்றாவிட்டால்
நெடுஞ்சாலைக் கல்லெல்லாம் 'சாமி'யன்றோ?
நீங்கள் மட்டும் எம்மிடையே பிறக்காவிட்டால்
நீள் மயிரை ஏற்றுதற்குக் கப்பல் போதா!
நீங்கள் மட்டும் இந்நாட்டில் தோன்றாவிட்டால்
நிலம் உழுவோன் நீதிபதி ஆவதெந்நாள்?
நீங்கள் மட்டும் இந்நிலத்தில் பிறக்காவிட்டால்
நெடிஇந்தி தமிழ்முடியில் ஏறிடாதா?"

இப்படி ஈரோட்டுத் தந்தையைப் பற்றிப் பாடிய நான், அவர் கொள்கையை நாடெலாம் பரப்பிய தலைமகன் பேரறிஞர் அண்ணா அவர்களைப் பற்றியும் இப்படிப் பாடினேன்.

"நெற்றியில் அறிவைத் தேக்கி,
நெஞ்சத்தில் வீரம் தேக்கி,
வற்றாத நாவில் நாளும்
வளமுறும் கருத்தைத் தேக்கி,
கற்றாமல் சுற்றும் கண்ணில்
துடிப்பினைத் தேக்கி, மண்ணில்
கற்றவர் திகைக்கும் வண்ணம்
காண்பவர் ஒருவர் அண்ணா!

எதைச் சொல்வேன்? அறிஞர் அண்ணா
எண்ணாதத் துறையே இல்லை
கதைகளால், நாட கத்தால்
கட்டுரைத் திறத்தால் பேச்சால்
சிதை விலாக் கருத்தை ஆக்கிச்
சிந்தனை விருந்து வைக்கும்
புதையலாம் அண்ணா நாட்டின்
புதுமுறைச் சமையற் காரர்"

இப்படி நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே அறிஞர் அண்ணா அவர்களைப் பற்றி ஒரு கவிதை ஓவியம் தீட்டினேன். அவர் மறைந்து விட்டாலும் அவர் உருவாக்கிய ஆட்சி மறையாமல் தொடர்வது வரலாற்றுப் புரட்சியல்லவா?

சமுதாயச் வழக்குகளில் இன்று தலைதூக்கி நிற்பது இலஞ்சமெனும் கையூட்டே! நாட்டையே வேட்டைக் காடாக்கி விட்ட அந்தக் கையூட்டைப் பற்றி நான் கொதித்துப் பாடிய பாடல்தான் இது:

"கையூட்டே! இலஞ்சமெனும் கொடிய பேயே!
கடமையினை முடமாக்கும் நெடிய நோயே!
வையகத்தில் உன் கரங்கள் உயர்ந்த தாலே
வாழ்விழந்தே தாழ்ந்தவர்கள் ஒன்றிரண்டா!
தையலவள் கோபத்தைத் தணிப்பதற்கும்
தாபத்தைப் பெறுவதற்கும் 'பூ'வாய் ஆவாய்!
பைய உள்ளே தூங்குகின்ற 'கோப்பை' எல்லாம்
பறக்க வைக்கும் 'மந்திரக்கோல்' நீயாம்! பொய்யா?

சம்பளத்தின் பெருமையினைக் குறைக்க வந்த
சண்டாளச் சக்களத்தி நீயோ? உன் பேர்
'கிம்பள' மாம்! நீ நகைக்கும் பளபளப்பில்
கிறுகிறுத்துப் போகின்றார் நல்லோர் கூட!
அம்பாலே பறவையினை வீழ்த்துதல் போல்
அற்பர் உனை ஏவிவிட்டு வெற்றி கண்டார்!
வெம்பி நிற்கும் நெஞ்சமுடன் கெஞ்சுகின்றோம்!
விளையாட்டை நிறுத்திக் கொள்! தாங்க மாட்டோம்!"

இந்த மண்ணின் வளர்ச்சியை அழித்து, மயானமாக்கிக் கொண்டிருக்கும் 'கையூட்டை' ஒழிக்க சமுதாய விழிப்புணர்வுடன் நான் எழுதிய இக்கவிதையை, சில ஏடுகள் எடுத்து மீண்டும் அச்சிட்டுப் பாராட்டி இருந்தன.

இதேபோல் இன்றைய தமிழன் தாய்மொழி உணர்வு குன்றி, உலகை அறிமுகம் செய்த தமிழை அலட்சியப் படுத்துகிறானே என்ற குமுறல் நெஞ்சிலே எழுந்த போது, 'தமிழா! ஒரு வழக்கு' என்ற இக்கவிதையை எழுதினேன்.

"ஓ, ஓ தமிழா! ஓ, ஓ தமிழா!
வா, வா உன்மேல் வழக்கொன்றுரைப்பேன்
இமய நெற்றியில் இலச்சினை பொறித்தே
நிமிர்ந்த மறவன் உன் நெடும்புகழ்ப் பாட்டனா?
முறத்தைக் கொண்டே முரட்டுப் புலியினைத்
துரத்தி மறத்தி உன் சொந்தப் பாட்டியா?
கடாரம் வென்றவன், கங்கையைக் கொண்டவன்

அடாத சிங்களர் ஆணவம் அழித்தவன்
சாவகம், புட்பகம், நாவலந் தீவெலாம்
காவல் செய்தவன் கால்வழி உன்னதா?
ஆயிரமாயிரம் ஆண்டுமுன் இலக்கியப்
பாயிரம் படைத்தோன் பரம்பரையா நீ?
என்ன கதைக்கிறாய்? இவையெலாம் உண்மையா?
இன்றுன் நிலையினை எண்ணிடக் கேட்கிறேன்!
உலகம் முளைத்தபின் ஓங்கிக் கிளைத்தன.
'உயர்தனிச் செம்மொழி' ஒருசில! அவற்றுள்
சீரிளந் தமிழில் சிறப்பென்ன, கொஞ்சமா?
சாக்ரடீஸ் அன்று தத்துவம் வழங்கி
மாக்குரல் தந்த 'கிரேக்கம்' உள்ளதா?
சகுந்தலை பேசிய 'சமக்கிருதம்' எங்கே
புகழ்மொழி இவற்றில் பொழுதெலாம் பேசிட
அகழ்ந்தெடுத்தாலும் ஆட்களும் ஏது.
வள்ளுவர், இளங்கோ, வளமார்பாரி
தெள்ளிய கண்ணகி, சேரன் குட்டுவன்
சான்றோர் பேசிய அழியாத் தமிழிலே
இன்னமும் குப்பனும் குப்பியும் பேசுவார்!
ஆறுகண்டத்தின் ஐம்பது நாடெலாம்
தாறுமாராகத் தமிழினம் பிரிந்துளோம்!
மொத்தமாய்த் தமிழர் பத்து கோடிபேர்
இத்தரை மீதே இருக்கிறோம் கணக்கில்!
பூமியாம் பந்தின் பொந்தெலாம் ஓடி
ஆமையாய், ஊமையாய் அடிமையாய் வாழினும்
தாய்முலைப் பாலுடன் தந்ததோர் தமிழினை
வாய்மொழி பேசவும் வஞ்சகம் செய்வதா?
தமிழிலே பேசவும், தமிழிலே எழுதவும்
தயங்கியே கூசுவோன் தமிழனின் விதையா?"

இப்படி என் நெஞ்ச உணர்வுகளைக் கொட்டித் தீர்க்க கவிதைதான் வடிகாலாய்த் திகழ்கிறது.

சமுதாய நோய்களைக் களைய கவிதை வழி வகுக்கிறது என்பது ஒரு பக்க உண்மை. மறுபக்கம் என் நெஞ்சுக்கே உவகையூட்டி, கவலைகளை மறக்கடித்து, என் ஆயுளையும் பெருக்குவது தமிழ்க் கவிதை எனும் அமிழ்தமே. இதுவே நூற்றுக்கு நூறு உண்மை.

வாழிய கவிதைக் கலை



# திலகவதி

கலைகளில் தலைமை ஏற்கத் தகுதியுடையதென்று கருதப்படுகிற கவிதையை "சிறந்த எண்ணங்கள் சிறந்த வார்த்தைகளால் கோர்க்கப்படும் போது விளைவது" என்றார் 'கோலரிட்ஜ்'. அதைக் காட்டிலும் நறுக்கென்று சொன்னார் நா.பா. "மனிதனின் நாகரிகம் மொழி. மொழியின் நாகரிகம் கவிதை".

இத்தகைய கவிதையை நான் எவ்வாறு எழுதத் துணிந்தேன் என்று என்னை நானும், பிறரும் பல தடவை கேட்டுக் கொண்டதுண்டு.

பூமலரும் பொழுதைக் குறிக்க முடியாதது போலவும், கதிரவன் தோற்றமும் மறைவும் வானத்துத் திரைச்சீலையில் குழைக்கும் வண்ணங்களுக்கு விகிதம் கற்பிக்க முடியாதது போலவும், கடலலையும் காற்றும் சேர்ந்திசைக்கும் பாடலுக்கு சுரம் பிரிக்க முடியாதது போலவும், எனக்குள் சுரந்த கவிதை ஊற்றுக்கு காலம், நேரம், காரணம் ஆகியவற்றைக் கணிக்கவும் முடியாது என்று சொல்லி தப்பித்துக் கொள்வது வழக்கம்.

ஆனால், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 'நானும் என் கவிதையும்' என்று தலைப்புக் கொடுத்தப் பிறகு நானே எனக்குள் உற்று நோக்க வேண்டியதானது. அப்போது கவிதைக்கும் எனக்குமான உறவு அப்படியொன்றும் அடிமுடி அறியமுடியாத மர்மம் இல்லையென்பது தெளிவாயிற்று. சொல்லப்போனால் நான் பிறந்த ஊரும், எனக்கமைந்த உறவும் சூழலும் எவரையும் கவிதையில் ஆர்வம் ஏற்படுத்தும் என்று கூடத் தோன்றியது.

'நிகரிலிச் சோழ மண்டலம்' என்று ஒரு காலத்திலும், அதற்கு முன் சங்க இலக்கிய காலத்திலும், பின்னர் தேவாரம் திருமந்திரம் போன்ற இலக்கியங்களிலும் தகடூர் என்று பயின்று வருவதுமான தர்மபுரியே நான் பிறந்த ஊர். பூவின் புறவிதழ் போன்று சுற்றிலும் மலைப்பகுதிகளைக் கொண்ட ஊர் என்பதனாலேயே தகடூர், தகடை, தகடாபுரி, தகட்டூர் என்றெல்லாம் இவ்வூர் அழைக்கப்பட்டதாக தொல்லியல் துறையினர் கூறுகிறார்கள்.

இது 'அதியமான் நாடு' என்றும் அழைக்கப்பட்டது. இந்தப் பகுதி சங்க காலம் முழுவதும் அதிய மரபினர்களால் ஆளப்பட்டது. 'மழவர் குடித்தலைவன்' எனவும் அதியமானைச் சொல்வார்கள். இவன் எத்தகையவன்: தமிழ் வாழ, தமிழ்க்கவிதை வாழ, தமிழ்க் கவிஞர் வாழ தான் அரிதில் பெற்ற அரிது விளை நெல்லிக்கனியை ஔவை மூதாட்டிக்குத் தந்து அழியாப் புகழ் கொண்டவன்.

எங்கள் மாவட்டத்தின் காற்றோடு கலந்திருக்கும் இந்தச் செய்தி நகம் முளைக்கும்போதே இளந்தளிர்களின் மனதிலும் துளிர்விட்டு தமிழின் மேன்மையை, தமிழ்க் கவிஞரின் மேன்மையை அழுத்தந் திருத்தமாக உரத்த குரலிற் சொல்லும்.

மேலும் அதியர் நாடு முல்லை வளம் நிறைந்தது. நுளம்பர் காலத்தில் இந்நாடு 'நுளம்பபாடி' என அழைக்கப்பட்டது. 'பாடி' முல்லை நிலப் பெயராகும். இந்நாட்டில் காடு கெடுத்து, உழவு செய்ததைப் பற்றி மதுரைக் காஞ்சியும், கல்வெட்டுகளும் கூறுகின்றன. அதியமானின் முன்னோரே கரும்புப்பயிரை தமிழகத்துக்குக் கொண்டு வந்தனர் என்பதை

'அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்
அரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும்'

என்று புறநானூறு (99) கூறுகிறது.

தவிரவும், மாவட்டம் முழுவதும் சிதைந்து உருமாறிக் கிடக்கும் நூற்றுக்கணக்கான கோட்டைகளும், ஆயிரக்கணக்கான நடுகற்களும் அவ்வப்போது காற்றில் கலக்கும் பதிற்றுப்பத்தில் வரும் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை, புகழ்ச்சோழன் பற்றிச் சொல்லும் சேக்கிழார் "ஓங்கு எயில் சூழ் மலையரணத்துள்ளுறைவான்" என அதியனைக் குறித்ததுவும், அதியமன்னன் நெடுமிடல், வினைவல் அதிகன் அதியமான் நெடுமான் அஞ்சி, பொகுட்டெழினி, பொலம்பூண் எழினி வரலாற்று உணர்வையும் பெருமிதத்தையம் எவர் மனத்திலும் தோற்றுவிக்கும்.

தருமபுரி மாவட்டம் ஆதிமனித நாகரீகத் தொட்டில்களில் ஒன்று. இந்தப் பழமையை அகழ்வாராய்ச்சிகள் விளக்குவது மட்டுமல்ல, இன்றைக்கும் உலகெங்கும் வரவேற்கப்படுகிற மழமழப்பும் நிறமும் கொண்ட மெருகேற்றப்பட்ட கருங்கல்லாலும் அனைவராலும் இனங் காணப்படுவது.

ஆக. எப்புறமிருந்து பார்த்தாலும் வானத்தின் கீழ் விளிம்பில் இயற்கை எழுதிப் பழகும் வெவ்வேறு ஜியோமிதி வடிவங்களாக மலைகள், அவற்றுக்கு வண்ண பேதங்களைக் காட்டும் முல்லை நிலச் செழுமை. அவற்றுக்குப் பின்புலமாக மௌனப்புகை மயக்கமாகச் சூழும் தொல்வரலாற்றுப் பழமை ஆகியவை அவற்றைக் கருத்தில் கொள்ளும் மனங்களில் பல மாற்றங்களை விளைவித்தது.

எங்கள் வீட்டை அடுந்திருந்த புளியந்தோப்பின் எல்லையில் தோழியரோடு உட்கார்ந்து சூரிய உதயத்தையும். முடிந்தால் அஸ்தமனத்தையும். அது மலைமுகடுகளின் மேல் நிகழ்த்துகிற மாயா ஜாலங்களையும் பார்ப்பது என்னுடைய விருப்பமான விளையாட்டாக இருந்தது. அதே மலைகளில் அடிக்கடி எழும் காட்டுத்தீ தூரத்துத் தீப்பந்தமாய் எங்களுக்கு வேடிக்கைக் காட்டும். சில தினங்கள் அது ஒளிச் சுவராய் நிற்கும். சில வேளைகளில் நெருப்பாறாக வழியும். மேலும் சில சமயங்களில் கொள்ளிவாய்ப் பிசாசுகளின் கூட்டம்போல் தெரியும். காட்டுத்தீயினால் ஏற்படும் துன்பங்கள் புரியாத அந்த வயதில் அதன் காட்சி இனிமையில் மட்டும் தோய்ந்து போகும் மனது.

எங்கள் வீட்டின் பின் மதிலை அடுத்திருந்த பெரிய புளியந்தோப்பு துளிர்விடும் காலத்தில், ஒரு நாள் திடீரென்று, காலியாய்க் கிடக்கும் கருத்த கிளைகளில் செந்துளிர்கள் பளபளக்கும். இரண்டே தினங்களில் காட்சி மாறும். லட்சோப லட்சம் பச்சைக் கிளிகள் சிலிர்க்கிற சிறகுகளுடன் மரங்களில் குடியேறி விட்டது போல. புதுக்காலையில் கண்கொள்ளாக் காட்சியாகத் தோப்பு குபீரென்று கிளிப்பச்சையாகப் பொங்கி நிற்கும்.

தோழியரோடு இலையுதிர் காலத்தில் மரத்தின் கீழ் குவித்திருக்கும் சருகுகளைக் குவித்து வீடு கட்டுவது. கல்யாண உற்சவங்கள் நடத்துவது. கூட்டாஞ்சோறு சமைப்பது என்று எண்ணற்ற விளையாட்டுகளுக்கு இந்தப் புளியந்தோப்பே களமாக இருந்தது. வீட்டிலிருந்த தாம்புக் கயிறைக் கொண்டு வந்து மரக்கிளைகளில் கட்டி ஊஞ்சல் ஆடுவோம். ஒரு வேக விசிறலில் முடிச்சு அவிழ நான் போய் முட்புதருக்குள் விழுந்தது எனக்கு நினைவிருக்கிறது. வீட்டுப் பெரியவர்கள். 'புளியமர நிழல் ஆகாது' என்பார்கள். சூடு என்பார்கள். ஊரிலே இருக்கிற பேய் பிடித்ததாகச் சொல்லப்பட்ட பெண்களிடமிருந்து, ஒட்டப்பட்ட பேய்களைப் பிடித்து வந்து மரங்களில் குடியமர்த்துவதாகச் சொல்லிக் கொண்டு நாட்டுப் பூசாரிகள் அந்தப் பெண்களின் உச்சந்தலையிலிருந்து எடுத்த முடியைக் கொத்தாகக் கொண்டு வந்து

மரத்தில் இரும்பாணி வைத்து அடித்துவிட்டுப் போவார்கள். அப்படியாகப புளியமரங்களில் குடியேறிய பேய்கள் நடுச்சாம நேரத்திலும் நண்பகல் வேளையிலும் வெளியே வந்து நடமாடும் என்று எங்களைப் பயமுறுத்துவார்கள். 'அப்படி வந்து எங்களைப் புடிச்சுகிறதுன்னா இத்தனை நாட்களாக ஏன் பிடிக்கவில்லையாம்' என்று வாதம் செய்வேன் நான். மொத்தத்தில் பேய்க்கும் அஞ்சாத பிள்ளைகள் என்று எங்கள் சிறுவர் குழுவுக்குப் பெயர் கிடைத்தது.

அது மட்டுமல்ல அந்த தோப்பில் நடமாடிய குரங்குகள், பாம்புகள், தேள்கள் துவங்கி கருடன், காகம், கிளி ஈறாக அனைத்து ஜீவராசிகளும் எங்களுக்குப் பாடமாயின.

தோப்புக்கு அடுத்தபடியாக எங்களைக் கவர்ந்த இடம் கோயில்கள். வீட்டின் அருகே இருந்த சுப்பிரமணிய சுவாமி கோயில். ஓதுவார்களும், செங்குந்த மரபினரும் ஆர்வமாகப் பாடும் தேவாரப் பாக்கள் தெளிவாக மனதில் இடம் பிடித்தது இங்குதான்.

இன்னொரு கோயில் சற்றுத் தள்ளியிருந்த கோட்டைக் கோயில் எனப்படும் காமாட்சியம்மன் கோயில். இது எட்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது. ஆயிரத்தெட்டு சிவத்தலங்களுள் ஒன்று. நால்வரில் ஒருவரான சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடல் பெற்றது என்பதையெல்லாம் நான் பின்னாளில் அறிந்து கொண்டேன்.

ஆனால், அந்தக் காலத்தில் எங்களை மிகவும் ஈர்த்தது 'தொங்கல் தூண்கள்' தான். சிவன் கோயிலில் விதானத்தைத் தாங்கும் நான்கு தூண்களில் ஒன்று தொங்கும் தூண். இதே போல அம்மன் சந்நிதானத்திலும் ஒன்று உண்டு. பல வருடங்களுக்குப் பிறகே போதிகையின் மேல் துண்டுக்கல்லால் ஆன அமைப்பில் கோயிலின் முழு பாரமும் ஐந்து அடி உயரமும் இரண்டரை டன் எடையும் கொண்ட தொங்கும் தூண் மேல் சுமத்தப்பட்டுள்ளது என்பது எனக்குத் தெரிந்தது. இத்தகைய தூண் ஒன்று 'ஹசோபீட்'டில் இருப்பதாகவும், ஆனால் அதன் மேல் கோயில் கிடையாது என்றும் சொல்வார்கள். தெற்கு ஆந்திரத்தில் ஏதோ ஒரு கோயிலில் இதே போன்ற தூண் இருப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். இந்தத் தூண்தான் துளம்பபல்லவர் காலத்தின் அம்சமாகத் தெரிகிறது.

இக்கோயில் காமிக ஆகம முறைப்படி கட்டப்பட்ட கோயில். அதனால் சுவாமி சந்நிதிதான் முறைப்படி மையத்தில் இருக்க வேண்டும். ஆனால் அம்பாளை மையமாக இருத்தி ஸ்ரீசக்ர மேரு பீடத்தை ஆதாரமாக்கி பதினெட்டு கோணத்துக்கு பதினெட்டு யானைகள்

தாங்கும்படியாக அமைக்கப்பட்டுள்ளது. யானைகளுக்கு இடையே, தமிழகத்தில் வேறு எங்கும் இல்லாதபடி ராமாயணக் காட்சி முழுவதும் எதிர் கடிகாரச் சுற்றாகச் சிற்ப வடிவாக்கப்பட்டிருக்கும். ரிஷ்யசிருங்கர் ஆலோசனை முதல் லவகுசர்களின் பிறப்பு வரை சித்தரிக்கப்பட்டிருக்கும். அதிலே கைகேயி. கூனி முன்னும். ராமலட்சுமணர் விடைபெறும்போதும் உட்கார்ந்திருப்பதில் இருக்கும் கம்பீரமும் தசரதனிடம் வரம்பெறும் போது கைகட்டி வாய்பொத்தி சுமங்கலிக் கோலத்தில் இருக்கிற நிலையும் மனதை என்னவோ செய்யும். படிக்கட்டு மறைப்பில் அமைக்கப்பட்ட வாலிவதம் கருத்தைக் கவரும். சேதுபந்தனக் காட்சியில் கடல் நீரில் துள்ளும் மீன்கள் கண்ணைப் பறிக்கும். சீதையைக் கவர வரும் ராவணனின் அன்னவாகனத்தில் பல்லக்குக் கூடு இருக்கும். போர்புரியும் ராவணனின் வாகனத்தில் கூடு இராது. இந்திரஜித் மாயப் போர் புரிந்த காட்சியையும், அவன் மேகத்தினூடே இருப்பதும் மேகமண்டலங்களால் காட்டப்பட்டிருக்கும். அநுமான், வேறு பல இடங்களில் காட்டப்பட்டுள்ளது போலக் கைகளால் அன்றி தலையினால் சஞ்சீவிபர்வதத்தைச் சுமந்து வருவது போல சித்தரிக்கப்பட்டிருக்கும்.

இந்தக் கோயிலில் இப்படி மரபிலிருந்து விலகிய பல விஷயங்கள் உண்டு. என் மனதில் ஆழப்பதிந்த விஷயம் பதினெட்டாம் படி சத்தியம். குண்டு செட்டிக் குளத்தில் குளித்துப் படியேறி பதினெட்டாம் படியில் நின்று சொல்லிவிட்டால் அதில் மாற்றமுமில்லை, சந்தேகமும் இல்லை என்பது வழக்கம். இந்த முறையில் பல வழக்குகள் ஒரு காலத்தில் தீர்க்கப்பட்டிருக்கின்றனவாம்.

இவையெல்லாம் ஏற்படுத்திய மனப்பதிவுகள் என் நுகர்வு, தேர்ச்சி, குணாம்சம் ஆகியவற்றில் பெரியதொரு தாக்கத்தை ஏற்படுத்தவே செய்தன.

நாங்கள் வசித்த குமாரசாமிப் பேட்டை என்ற பகுதியும் அதிலே வாழ்ந்த தொண்ணூற்றி ஒன்பது புள்ளி ஒன்பது சதவீதமான கைத்தறி நெசவை நம்பி வாழ்ந்த செங்குந்தர் மரபு மக்களும் அவர்களுடைய வறுமையும் செம்மையும் கலந்த வாழ்வும். அவர்களுடைய தமிழ்ப் பக்தியும் என் சிந்தனையில் இடையறாத ஒளியைப் பாய்ச்சின. பல மொழிகள் பேசும் குடும்பங்களிடையே நான் பழகி வந்ததால் பின்னாளில் நான் பிற மொழிகளைக் கற்றுக் கொள்வதற்கான ஆர்வத்தை அளித்தது. மலையாளம், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளைக் கற்க முயன்றேன். ஃப்ரெஞ்சு, உருது, வங்காளமொழிகளைக் கற்கவில்லையே என்று கவலைப்பட்டேன். அதை ஒரு விதத்தில் ஈடுகட்டுவதற்காகவே மொழி மாற்று இலக்கியங்களில் அளவற்ற ஆர்வம் காட்டினேன்.

என் தாயார் பெரியாரின் மேல் பக்தியே கொண்டிருந்தார். தந்தை பக்திமான். மண்டல பூசைகளும், வியாழக்கிழமை தோறும் பஜனைகளென்றும், அணையா விளக்கென்றும் பூஜை புனஸ்காரமாக அப்பா இருப்பார். கந்தசஷ்டி கவசம் சொல்லாமல் சாப்பாடு சாப்பிட மாட்டார். அம்மாவோ இதற்கெல்லாம் எதிர்ப்பதம். மின்சார விளக்குகள் புழக்கத்துக்கு வந்த பிறகு கூட உணவுப் பொருள்களாகும், நெய், எண்ணெய் போன்றவற்றால் விளக்கை எரிப்பது தவறு என்பது அம்மாவின் கருத்து. அப்பா, வீடு முழுக்க கற்பூரமும், சாம்பிராணியும் புகை மணக்கப் பூசை செய்யும் வேளையில் அம்மா எதிர்வீட்டு வாசற்படியில் போய் உட்கார்ந்து கொள்வார். அலர்ஜியாம். புகை அடங்கிய பிறகு நான்தான் போய் அழைத்துவருவேன்.

பூசையை முடித்துக் கொண்டு சாப்பிடுவதற்காக வரும் அப்பாவின் முன்னால் கைகழுவத் தண்ணீரும் கிண்ணமும் கொண்டு வந்து அம்மா வைப்பார்கள். கண்டதையும் தொட்டுவிட்டு அப்படியே சாப்பாட்டைத் தொடுவது சுகாதாரமில்லையாம். 'கண்டதை'யும் என்பது பூசைப் பொருட்களான சாம்பிராணி, கற்பூரம், விபூதி, ஊதுபத்திகள், பூச்சரங்கள், புத்தகங்கள் ஆகியவையே.

எங்கள் ஊர்தான் காவிரி தமிழகத்துக்குள் புகும் நுழைவாயில். திரைப்பட படப்பிடிப்பு, ஆடிப்பெருக்கு, திவசம், காரியம், அமாவாசை, சனி விலக்கம், தோஷ நீக்கம் என்று ஆயிரம் காரணங்களுக்காக காவிரியில் தலை முழுகுவதும், ஒகேனக்கல் அருவியில் திளைப்பதும் எங்கள் பக்கத்தின் வழக்கம். அம்மா செய்ததேயில்லை. இதற்கு பெரியாரும் அவருடைய கொள்கையான சிக்கனத்தையும் எங்கள் அம்மா இறுகப் பிடித்துக் கொண்டிருந்ததும் முக்கியமான காரணங்கள். பெரியாரைப் போலவே அம்மாவுக்குப் பிடித்த இன்னொரு தலைவர் சுபாஷ் சந்திர போஸ். வாய்ப்பான இடங்களில் எல்லாம் சுபாஷ் சந்திர போஸின் படத்தை ஒட்டி வைப்பார்.

அம்மாவிடம் இருந்த குறிப்பிடும்படியான இன்னொரு குணம் அவருடைய நாட்டுப்பற்று. அம்மாவின் இந்தக் குணம் கல்லூரியில் நான் படித்தபோது அவர் எழுதிய கடிதங்கள் என்னுடைய தோழிகளின் கிண்டலுக்கு என்னை இலக்காக்கியது உண்டு. 'எதிர்காலத்தில் இன்றைய இளம்பெண்களான நீங்கள் நாட்டுக்கும் வீட்டுக்கும் பெருமை தர, உயர்வு தர' என்றெல்லாம் அம்மா எழுதியிருப்பதைப் படித்துத் தோழிகள் சிரிப்பார்கள். இதை அம்மாவிடம் சொல்வேன். குழப்பமும் இறுக்கமும்

அம்மாவின் முகத்தில் தெரியும். பதில் வராது. அடுத்து அம்மாவிடமிருந்து வரும் கடிதமும் நாடு பற்றிப் பேசும். இன்றைய வரையில் அம்மாவின் கடிதங்கள் அப்படித்தான் இருந்து கொண்டிருக்கின்றன.

தேசம் பற்றிய அம்மாவின் கவலை வெறும் வார்த்தைகளோடு நிற்கிற ஒன்றில்லை. சீனப்படையெடுப்பின் போது அம்மா வேதனைப்பட்டது; நேரு இறந்த போது காட்டிய வருத்தம், ரேஷனில் அரிசிக்கும் சர்க்கரைக்கும் மக்கள் அலைந்ததைக் கண்டு வருத்தங் கொண்டது ஆகியவற்றையெல்லாம் நினைத்துக் கொள்கிறேன். இப்படியான விஷயங்களிலெல்லாம் பிரக்ஞையுடைய அம்மாக்கள் எத்தனைப் பேருக்குக் கிடைத்துவிடும் என்பது தெரியவில்லை.

இது தவிரவும் அம்மா எனக்குள் படிய வைத்த நம்பிக்கைகள் சில உண்டு. உழைப்பினால் கிடைக்கிற வருமானம் தவிர வேறு வகையான வரவு எதுவும் நஷ்டமே என்பது அம்மாவின் திடமான நம்பிக்கை. நடைபாதையில் கிடைக்கிற ஒத்தைப் பைசாவைக் கூட சொந்த உபயோகத்துக்கு எடுத்துக் கொள்ளக்கூடாது என்பது அம்மாவின் கொள்கை.

இத்தகைய பிண்ணனியே வாழ்வு மற்றும் கவிதை பற்றிய எனது கோட்பாடுகளின் அடித்தளமாயிற்று.

இவ்வாறே என் நினைவுகளை வடிவமைத்ததில் பெரும்பங்கு வகித்தவர் என் அப்பா. என் வாழ்க்கையின் முதல் நினைவே ஆங்கிலேயர் பாணியில் சூட்டும், பூட்சும், தொப்பியும், கூலிங்கிளாசும் அணிந்தபடி நிற்கிற அவருடைய புகைப்படமே. ஆறடிக்கும் சற்று அதிகமான உயரமும், பாந்தமான உடலும், அமெரிக்கன் கிராப்பும், பார்த்தவுடன் மதிப்பைத் தோற்றுவிக்கிற ஒரு கண்ணியம் மிக்க கம்பீர வாகும் கொண்டவர் அவர். மரபுத் தளைகளில் சிக்கிக் கொள்ளாத சுதந்திர சிந்தனையும் தொலைநோக்கும் எதிர் வருங்காலங்களில் நங்கூரம் கொண்டு நிற்கிறப் போக்கும் அவரை இன்றுவரை ஒரு வித்தியாச மனிதராக விசேஷப் பிறவியாகவே வைத்திருக்கிறது. கனத்த, கடினமான ஆங்கில நூல்களைத் தமிழைப் படிப்பது போலவே இலகுவாக வாசிக்கும் பொழுதெல்லாம் நான் அப்பாவை நன்றியுடன் நினைத்துக் கொள்கிறேன். பள்ளிக் கல்வியைத் தமிழ்ப் போதனா மொழியின் மூலமாக மட்டுமே படித்த எனக்கு இதைச் சாத்தியமாக்கியது, அவருடைய அக்கறையும், கவனமும், தீர்க்க தரிசனமுமே. பொம்மைகளை வைத்து நான் விளையாடும் விவரமறியாத பருவத்திலேயே வண்ண வண்ணப் படங்கள் அச்சிட்ட ஆங்கில சோவியத் சிறுவர் இலக்கியங்களையும், 'சோவியத்

நாடு' இதழ்களையும் வாங்கித் தருவது அவர் வழக்கம். எட்டு, ஒன்பது வயதுப் பெண்ணாக இருந்தபோது 'இல்லஸ்டிரேடட் வீக்லி'யைக் கொடுத்து அதில் வந்த கட்டுரைகளைப் படித்துப் பொருள் சொல்லச் சொன்னது ஞாபகம் வருகிறது. டிக்ஷனரியும் கையுமாக அலைவேன். என்.சி.பி.ஹெச். நிறுவனத்தாரின் புத்தகக் கண்காட்சிக்கு அழைத்துப் போய் கட்டுக்கட்டாக புத்தகங்கள் வாங்கித் தருவார்.

எங்கள் ஊர் தீர்த்தகிரி திடலில் நடக்கும் அரசியல் கூட்டங்களுக்கு என்னை அவர் அழைத்துப் போவார். தந்தைப் பெரியாரும், பெருந்தலைவர் காமராசும், அறிஞர் அண்ணாவும், வேறுபல கழகப் பேச்சாளர்களின் பேச்சையும் பத்துப் பதினோறு வயதில் கேட்டிருக்கிறேன். கர்நாடக இசைக் கச்சேரிகள், வாரியாரின் பிரசங்கங்கள், மகாபாரத கதா காலட்சேபங்கள் ஆகியவற்றுக்கும் அப்பா என்னை அழைத்துப் போயிருக்கிறார். அப்பா கலப்புத் திருமணம் செய்து கொண்டவர். ஆகவே எங்களுக்கு உறவென்று சொந்தங் கொண்டாட முன் வந்தவர்கள் அதிகமில்லை. சாதியை விட்டு கல்யாணம் பண்ணிகிட்டா வெலக்கிடுவாங்களாம். 'இவங்க என்ன ஒதுக்கிறதுன்று நானே அவங்களை ஒதுக்கிட்டேன்' என்பார் அப்பா.

இதன் காரணமாக எங்கள் குடும்பம் ஒரு தனித் தீவாக இயங்கிக் கொண்டிருந்தது. பெரும்பாலான வேளைகளில் எனது துணையும் பொழுதுபோக்கும் புத்தகங்களாகவே இருந்தன. போதாக்குறைக்கு நான் கல்வி பயின்ற தர்மபுரி அரசு பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் ஒரு அபூர்வ வழக்கம் கடைப்பிடிக்கப்பட்டது.

பள்ளி இறுதித் தேர்வுக்குப் பின்னால் ஒரு வாரம் அல்லது பத்து நாட்கள் நாங்கள் பள்ளிக்குச் செல்ல வேண்டும். அடடா! அவை எப்பேர்ப்பட்ட நாட்கள், பாடங்கள் கிடையாது. வகுப்புகள் கிடையாது. வீட்டுப் பாடங்கள் கிடையாது. திடீர்த் தேர்வுகள் என்ற தொல்லைகள் கிடையாது. ஆசிரியைகள் கூட தங்கள் வழக்கமான கண்டிப்பை ஒதுக்கி வைத்து விட்டுத் தாராளமாகப் பழகுவார்கள்.

அங்குதான் பறக்கும் கம்பளத்தில் பயணம் போகும் பனைமர உயர மனிதன், துப்பறியும் கத்தரிக்காய், மற்றும் எண்ணற்ற தேவதைக் கதைகள், பேய்க் கதைகள் ஆகியவை எனக்கு அறிமுகமாயின.

வீட்டைப் பொறுத்தவரையில் அப்பாவுக்கு நான் பாடப் புத்தகங்களைத் தவிர மற்றவற்றைப் படிப்பது குற்றம். அம்மா, பள்ளி ஆசிரியை என்பதாலோ என்னவோ அவரை விட இன்னும் ஒரு படி

அதிகம். கதை படிப்பது பாவம் என்பது அம்மாவின் நினைப்பு. இந்த விஷயத்தில் அப்பாவாவது எனக்கு ஒரு சலுகை காட்டினார். அப்பா என்.சி.பி.ஹெச். புத்தகக் கண்காட்சியில் வாங்கித் தந்த சோவியத் இலக்கியங்கள், பாரதியும் ஷெல்லியும், நாலாயிரம் வயது மனிதன் போன்றவற்றைப் படிக்க என்னை அனுமதித்திருந்தார்.

பள்ளிப் பருவத்தில்தான் பொருள் தெரியாமலேயே ஏராளமான திருக்குறள்களையும், பைபிள் வாசகங்களையும், திருப்பாவை, நளவெண்பா ஆகியவற்றையும் எண்ணற்ற பக்திப் பாடல்களையும் நான் மனப்பாடம் செய்தேன். அந்தச் சமயத்தில்தான் அம்மாவுடைய பள்ளிக்கூட லைப்ரரியிலிருந்து பாரதியார் பாடல்களை அம்மா எனக்குப் படிக்கக் கொடுத்தது. அம்மாவாக படிக்கக் கொடுத்த நூல்களில் நானாக ஆர்வம் காட்டிப் படித்தது பாரதி பாடல்களை மட்டும்தான். பாரதியை எனக்கு அப்படிப் பிடித்துப் போனது. என்னுடைய படைப்பாக்க ஆர்வத்துக்கு தளமிட்ட அற்புதம் பாரதிதான்.

பாரதியைத் தொடர்ந்து எனக்கு பாரதிதாசனும் அறிமுகமானார். எங்கள் வீட்டுக்கு அருகே குடியிருந்த ஆசிரியர் ரங்கசாமி, பாரதிதாசனில் தோய்ந்தவர். அவரே 'கவிஞர் பூங்குன்றனார்' என்ற பெயரில் கவிதைகள் எழுதுவார்.

> 'பூங்குன்றனார்தாம் புனைபாடல் தீஞ்சுவையே
> தேங்கும் செந்தமிழ்தாம் தேர்.'

என்று பாரதிதாசனே அவர் கவிதையைப் பாராட்டியிருந்தார். பாரதிதாசனின் 'குயில்' பத்திரிகையை எனது ஆசிரியர் தவறாமல் படிப்பார். பாரதிதாசன் மறைந்த போது,

> 'பூங்குயிலும் கூடு விட்டுப் போனதந்தோ
> பொங்கி யெழும் பண்ணினியும் பாடிடாதோ
> தேங்கமழும் தமிழ்த்தென்றல் ஓய்ந்ததம்மா
> தெள்ளுதமிழ் மணங்கலந்து வீசிடாதோ
> ஏங்கியழும் தமிழ் நெஞ்சம்! இனிய தாயாம்
> எந்தமிழும் ஏங்குகிறாள்! இளையோர் நெஞ்சம்
> பாங்கினிலே தமிழ் காக்கும் பணிக்கே வாழ்ந்த
> பாவேந்தைப் பறித்தனையே பாழும் சாவே!'

என்று அவர் மனமுருகிப் பாடியது நினைவிலிருக்கிறது.

ஆசிரியர் ரங்கசாமி, தமிழில் மட்டுமல்லாது, ஆங்கிலத்திலும் மிகுந்த தேர்ச்சிப் பெற்றவராக விளங்கினார். ஆகவே, என்னை ஆங்கிலத்தில் நெறிப்படுத்தவும், வழி நடத்தவும் அவரை எனக்குத் தனிப் பயிற்சி ஆசிரியராக என் அப்பா நியமித்தார். இது அவரது குடும்பத்தோடான எனது நெருக்கத்தை அதிகரித்தது. ஆசிரியருக்கு வீடு நிறையக் குழந்தைகள். ஆறு பெண்கள், மூன்று ஆண்கள். இவர்கள் அனைவரும் எனது உயிர்த் தோழர்கள். தூங்குவதற்கு சொந்த வீடும், வாழ்வது ஆசிரியர் வீடும் எனச் சில வருடங்கள் கழிந்தன. ஆசிரியர் தாம் வேலைபார்த்த பள்ளிக்கூடத்தின் நூலகர் பொறுப்பினையும் சிலகாலம் ஏற்றுக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் புத்தகங்களைப் பட்டியலிடுவற்தகாக, எண்கள் இட்டு கணக்கு வைப்பதற்காக என்று பல காரணங்களுக்காக கட்டுக்கட்டாக நூல்கள் அவருடைய இல்லத்துக்கு வரும். அவை என்னுடைய புத்தகப்பசிக்கு நல்ல தீனியாக அமைந்தது. எனக்கு எங்கள் ஊர் பொது நூலகத்தை அறிமுகப்படுத்தியவரும் அவர்தான்.

பல தருணங்களில் ஆசிரியர் கண் மூடிச் சாய்வு நாற்காலியில் சாய்ந்திருக்க நான் திண்ணையில் அமர்ந்து அவர் காதுபட நூல்களை உரக்க வாசிப்பேன். இப்படியாக திருக்குறளையும், உரையையும் படித்தது நினைவில் இருக்கிறது.

நயமிக்கப் பகுதிகளை மீண்டும், மீண்டும் படிக்கும்படி ஆசிரியர் சொல்வார். கவிதையினிமையிலும், நூல் இன்பத்திலும் தோய்வார். விளக்குவார், எடுத்துச் சொல்வார். விவாதிப்பார். அவர் எழுதிய கவிதைகளின் முதல் வாசகியும், விமர்சகியுமாகக் கூட நான் இருந்தேன். ஆசிரியரின் வீட்டில் குடியிருந்த வறுமையைப் பொருட்படுத்தாமல் நல்லதமிழ் உணர்வு ஒரு புறமும் நகைச்சுவையுணர்வு மறுபுறமும் நாட்டுணர்வு இன்னொரு புறமும் கைகோர்த்து விளையாடின. விளையாட்டும், வேடிக்கையும் கூட கவிதையாகவும், சிலேடையாகவும் நயமான தமிழ்ப் பேச்சாகவுமே பரிணமிக்கும்.

அந்தக் கால கட்டத்தில் நாங்கள் அறிந்திருந்த வேடிக்கை இதுதான். பிரபலமான திரைப்பட மெட்டுக்களை நாங்கள் ஓரிருவரிகள் பாடுவோம். அதே மெட்டின் ஆசிரியர் வேறு வார்த்தைகளால், பாட்டுக்கு வேறு கண்ணியமான முகத்தைப் பொருத்திக் காட்டுவார். இப்படியாக,

'கடவுள் ஏன் கல்லானான்'

என்ற பாடலை நாங்கள் தொடங்கியதும்,

'மனிதன் ஏன் மண்ணானான் - தன்
மண்ணாய்ப் போன மடமையினாலே'

என்றதுவும்,

'ஓராயிரம் பார்வையிலே'

என்ற பாடலை

'ஓராயிரம் மாந்தரிலே - ஒரு
தோழனை நான் அடைந்தேன்
நான் மூழ்கிடும் வேளையிலே
ஒரு கோணியைப் போல வந்தான்.'

என்றும், 'மன்னவன் வந்தானடி' பாடலை 'பல்லவன் வந்தானடி' என்றும் ஆரம்பித்து,

'தித்திக்கும் அவன் செங்கனிக் கொத்து
தித்தித் தாவிடும் தென்கடல்முத்து
சித்தத்தால் தமிழ் நாடிதன் சொத்து
வெற்றிக்கே விளைவாகிய முத்து'

என்று கடகடவெனச் சொல்லியது, எங்கள் அனைவரையும் வியப்பிலும் சிரிப்பிலும் ஆழ்த்தியது இன்னும் பசுமையாக நினைவில் இருக்கிறது.

இது போலவே என் வாழ்வில், இலக்கியப்படைப்புகளில் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியவர்கள் இன்னும் சிலரும் உண்டு. அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் என் அம்மாவுடன் பணி புரிந்த திரு. பால சுப்பிரமணியனும், திரு. தட்சிணாமூர்த்தியும் ஆவார்கள். இலக்கியங்களின் ஈவு இரக்கமற்ற விமர்சகர்களாகவும், அன்று வரை தமிழகத்தின் அரசியல் போக்குகளில் முக்கிய புள்ளிகளின் நடுநிலை விமர்சகர்களாகவும் இவர்கள் இருந்தார்கள். எங்கள் வீட்டுத் திண்ணையில் அவர்கள் புரிந்த வாதங்கள் எனக்குப் புதியதோர் உலகத்தைத் திறந்தது காட்டின.

ஆனாலும் கவிதையும் கற்பனையும் சார்ந்த ஒரு உலகத்துக்கு எனக்கு ராஜபாட்டையில் நடை பழக்கித் தந்தவர் என் பெரியம்மா. சமீபத்தில் தனது எண்பத்தியேழாம் வயதில் என்னை அவர் பிரிந்து போகிறவரை எனக்கு ஒரு அதிர்வுக் காப்பாளராக இருந்தவர் என் பாட்டி அமிர்தம்மாள். மகாபாரதம், இராமாயணம், விக்கிரமாதித்தன் கதைகள், ஆயிரத்தொரு அராபிய இரவுகள், மதனகாமராஜன் கதை, பக்த விஜயம், வடுவூரார் நாவல்கள், ரங்கராஜ் நாவல்களிலிருந்து நம்

கி.ராஜநாராயணனுக்குக் கூடத் தெரியாத நாட்டுப்புறக் கதைகளும் நாட்டார் பாடல்களும் அத்தனையும் அவருக்கு அத்துபடி. அவர் மூலம் அவையும் எனக்குத் தலைகீழ்ப் பாடம்.

'வலையன் சிவப்புடையான் மன்னன் தலையாரி
அவனுடைய காவல்தனை அன்பாகச் சொல்லுகிறோம்
சிட்டு பறவாது சிறு குருவி நாடாது
வக்கா பறவாது வனக்குருவி நாடாது
பறவை பறவாது பட்சிகள் நாடாது
குண்டுத் தப்பிப் போனாலும் குறி தப்பிப் போகாது
உண்டை தப்பிப் போனாலும் ஊர்க்குருவி தப்பாது
மருந்து தப்பிப் போனாலும் மன்னர் தப்பிப் போறதில்லை.

என்று இசையோடு பாடிச் சொல்லும் காத்தவராயன் கதையும், காத்தவராயன் தன் தாய் காமாட்சியம்மனை வணங்கி விடைபெற்றதை ஒரு இசைநாடகமாகவே கண்முன் நிறுத்திச் சொல்லுவது இன்னமும், காதுக்குள் ஒலிக்கிறது. இவ்வாறே, அல்லியரசாணி கதை, புலேந்திரன் களவு, பாண்டவர் வனவாசம், பவளக்கொடி, சுபத்திரா கல்யாணம், சிறுத்தொண்டர் நாயனார் கதை என்று எண்ணற்ற கதைகளையும், ஸ்பெஷல் நாடகங்களையும், ரயில் சிந்து, சேவல்பாட்டு, ஏசல் பாட்டு போன்ற பலவற்றையும் அவர் எனக்குச் சொல்லியிருக்கிறார். அவை கவிதை, கதை, இலக்கியம், பொழுதுபோக்கு என்று தள்ளி நின்றுவிடாமல் வாழ்க்கையையே வழி நடத்திச் செல்லும் ஒரு இயக்க சக்தியாக இருக்கிறது.

ஆரம்ப நாட்களில் ஆங்கிலப் புத்தகங்களை மிக மெதுவாகத் தான் படிக்க முடிந்தது. 'டிக்ஷனரி'யைப் புரட்டி அர்த்தம் பார்ப்பதற்குள் கதையில் சுவாரஸ்யம் அற்றுப் போனது. கடினமான வார்த்தைகளை அடையாளப்படுத்தி தனியே குறித்து வைத்துக் கொள்ள ஒரு தடவையும், தமிழில் பொருள் தெரிந்து கொண்ட பிறகு ஒரு தடவையுமாக சில நூல்களை இரண்டு தடவை படிக்க வேண்டியதாக இருந்தது. சலிப்பாக இருந்தது. இருந்தும் படித்தேன்.

அப்படித்தான் தாகூரையும், பெர்ள்.எஸ். பக்கையையும், டால்ஸ்டாய், துர்கனேவ், கார்க்கி, மாப்பசான் ஆகியோரைப் படித்தேன். பாரதிதாசன் நூல்கள் அனைத்தையும் எங்கள் ஊர் பொது நூலகம்தான் எனக்கு அறிமுகப்படுத்தியது.

பள்ளி நாட்களில் நான் எனக்கு ஒரு சிநேகிதியைத் தேடிக் கொண்டேன் என்றால் அதற்கு அவர்கள் வீட்டில் புத்தகப் பழக்கம் அதிகமாக இருப்பது ஒன்றே காரணமாக இருக்கும்.

கல்லூரி வாழ்க்கை எனக்குப் பரந்த இலக்கிய உலகத்தை அறியும் வாய்ப்பை அளித்தது. நவீன தமிழ்க் கவிதைகளையும் ஆங்கில இலக்கியத்தையும் ஒரு தீராத தேடுதல் வேட்கையோடு நான் அறிந்து கொண்டேன். பல இலக்கிய மேதைகள் என்னை பிரமிக்க வைத்ததும் அப்போதுதான். உலக இலக்கியத்தின் சிகரங்களைத் தொட்ட பல படைப்பிலக்கிய வாதிகளை நான் பரிச்சயப்படுத்திக் கொண்டேன். அதன் பிறகு கிடைப்பதையெல்லாம் படிப்பது என்ற நிலையை மாற்றித் தேர்ந்தெடுத்த சிலவற்றை மட்டும் படிப்பது என்ற பழக்கத்தைக் கைக் கொள்ளத் தொடங்கினேன்.

கவிதை எழுதுவதென்பது பள்ளிப் பருவத்தில் நான் தொடங்கிய பயிற்சி. ஆனால், அவற்றைக் கவிதைகள் என்று சொல்ல எனக்குத் தயக்கமாக இருந்தது. ஆகவே அவைகளை ரகசியமாக ஒதுக்கியும் பதுக்கியும் வைத்துக் கொண்டேன். சம வயது, சமகால எழுத்தாளர்களின் அறிமுகம் இருந்திருந்தால் ஒரு வேளை நான் அவர்களுடன் என் படைப்புகளைப் பகிர்ந்து கொண்டிருக்கக் கூடும். அப்படியான ஒரு வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை. எங்கள் வீட்டுக்கு அருகே குடியிருந்த ஆசிரியர் ரங்கசாமி வீட்டினர் சற்றுத் தொலைவில் இருந்த வீட்டுக்குக் குடிபெயர்ந்து போயிருந்தனர். அங்கு செல்லவும் எனக்கு அனுமதி மறுக்கப்பட்டது. நான் வளர்ந்துவிட்ட பெண்ணாகக் கருதப்பட்டதால் அதிகமான கட்டுப்பாடுகளுக்கு ஆளானேன். வீட்டுக்குள்ளேயே முடங்கிக் கிடக்க வேண்டியதாயிற்று.

இந்தச் சூழ்நிலையை நீங்கள் பொதுவாக ஆண் படைப்பாளர் களின் நிலையோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். எனக்கு முன் இந்தக் கருத்தரங்களில் பேசிய பதினோறு ஆண் கவிஞர்களில் ஒன்பது பேருடைய பேச்சை நான் கேட்டேன். கிட்டதட்ட ஒவ்வொருவருமே வளர்ந்து புகழ் பரப்பிய எழுத்தாளர்கள் அல்லது கவிஞர்களை அடுத்தே இருந்து வளர்ந்திருக்கிறார்கள். குறைந்தபட்சம் அப்படிப்பட்டவர்களுடன் தொடர்பு கொள்ளும் வாய்ப்பையாவது பெற்றிருந்தார்கள். சிலர் அரசியல்வாதிகளுடன் பழகியிருந்தார்கள். அரசியல் அல்லது அரசியல் சார்ந்த இயக்கங்களில் பங்கு பெற்றவர்களாக இருந்தார்கள். அத்தகைய வாய்ப்புகள் பெண்களுக்கு கிடைப்பது என்பது நினைத்துக்கூட பார்க்க முடியாத ஒன்றாக இருக்கிறது.

நான் வளர்ந்த காலத்தில் நான் பங்கு கொள்ள முடியவில்லையே என்று என்னைக் கவலை கொள்ள வைத்த நிகழ்வுகள் ஏராளம். நான் சந்திக்க முடியவில்லையே என்று என்னை வருத்தப்பட வைத்தவர்கள் நல்லவர்கள் அதை விட ஏராளம்.

பெண்கள் வாழ்வும், சமூகம் திணிக்கும் கட்டுப்பாடுகளும் விசித்திரமானவை. பள்ளியில் பிரிவுபசாரம், திருமணம் ஆகியவற்றில் நான் எழுதிய உரைவீச்சுகள் கவிதையென அரங்கேறியிருக்கின்றன. மணமகளான எங்கள் ஆசிரியை அதை மிக மெச்சி கண்ணாடிச் சட்டமிட்டு தன் வீட்டில் மாட்டி வைத்திருந்ததும் நினைவிருக்கிறது. பள்ளியில் கொண்டாடப்படும் விழாக்களுக்கு, நடனங்களுக்கு பாட்டெழுதியதும், நாடகங்கள் எழுதியதும் உண்டு. கல்லூரியிலும் அப்படித்தான்.

ஆனால், நான் பயின்ற கல்லூரியில் ஒரு விநோத வழக்கம். கிறிஸ்துவக் கன்னிமார்கள் நடத்திய அந்தக் கல்லூரியில் நடைமுறையில் மட்டுமல்ல, நாடகத்திலே கூட ஆண்வாடை அடிக்கலாகாது என்பதில் அவர்கள் தீவிரம் காட்டினார்கள். ஆகவே கோவலன் இல்லாமல் சிலம்பும், இராமன் இல்லாத இராமாயணமும் தான் அங்கே அரங்கேற முடியும். நெருக்கடி நிலையில் எழுத்தாளர்கள் பட்டதாகச் சொல்லிக் கொள்ளும், அல்லது சொல்லிக்கொள்வது போன்றதொரு நெருக்கடி நிலையில் அங்கே வெற்றிகரமாக நாடகங்களை மேடையேற்றினேன்.

முதுகலைப்பட்டம் படிப்பு பயின்று கொண்டிருந்த போதுதான் என் கவிதைகளை ஒளித்து வைக்காமல் இருக்கும் துணிவு வந்தது. அவற்றை வெளிப்படையாக, தைரியமாக, டைரிகளில் கூட குறித்து வைத்துக் கொண்டேன். விடுதியில் தங்கியிருந்த தோழிகளில் சிலர் அதைப் படிக்கவும் படித்தார்கள். கவிதைகளைப் பாராட்டுகிற விதத்தில் அடிக்கடி அவை எழுதப்பட்டிருந்த நோட்டுகளும், டைரிகளும் காணாமல் போயின. அந்த வேளையில்தான் புதுமணமான ஒரு சகோதரியை ஆடிக்கு அவளுடைய தாய்வீட்டார் அழைத்துப் போக அவளைப் பிரிந்த தன் அக்காள் புருஷன் மனநிலையைக் கவிதையில் தரும்படி எனக்கு ஒரு தோழி உத்தரவிட்டாள். கண்ணாடி, காற்றாடி, வாயாடி, நீயாடி என்றெல்லாம் ஈற்றசைகள் வருமாறு வைத்து பூவாடி, புலனாடி, கலனாடி, வருவாய் நீ என நானும் காத்திருந்தேன் என்றெல்லாம் வார்த்தைகள் பயின்று வரும் ஒரு உரைவீச்சை நான் எழுதிக் கொடுத்ததும், இது தோழியர் குழுவிடையே மிகவும் பிரபலம் ஆனதும் நினைவிருக்கிறது.

இப்படியாக எழுதிய பலவற்றைத் தொகுத்து வைத்திருந்த எனது குறிப்பேட்டைத் தற்செயலாகப் பார்த்த ஒரு கவியரசர் அவை அச்சேற வேண்டியதின் அவசியத்தை என்னிடம் வலியுறுத்தினார். அதே கருத்தை 'அமுதசுரபி' ஆசிரியர் விக்கிரமன் அவர்களிடமும் சொல்லி வைத்தார். விளைவாக அந்த ஆண்டு அமுதசுரபியின் தீபாவளி மலரில், 'தனிமை' என்ற என்னுடைய கவிதை வெளி வந்தது.

'உயிரும் உணர்வும் கரைந்து கரைந்து
காற்றாய் அருவமாய்
சுருதியில் உயர்வில் ஒன்றி
மருவி விட மாட்டேனா?'

என்று தனிமைக்கான என் ஏக்கத்தைச் சொன்னது அக்கவிதை.

புதுக்கவிதை என்பது ஏற்கத்தக்கதா, இல்லையா, அதைத் தமிழில் முதலில் கொண்டு வந்தவர் யார் என்பது போன்ற விவாதங்கள் எல்லாம் இன்று ஒளியிழந்து, பொருளிழந்து போய் விட்டன. புதுக்கவிதை வரவு ஒரு வரலாற்று நிகழ்வு. அது தமிழ்மொழியின் தேவையாயிருந்தது. எனவே தோன்றி வளர்ந்தது. வரலாறு என்பது பொங்கிப் பிரவகித்துச் செல்லும் நதி. நதிகள் பின்னோக்கி ஓடுவதில்லை.

கவிதை என்பதை வெறுங்கனவாக என்னால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. கவிதை என்பது வாழ்க்கை. அதுவும் உன்னதத்துக்கும், சிந்தனை மிக்கச் செயற்பாட்டுக்கும், மனித குலத்தைக் கைப்பிடித்து அழைத்துச் செல்கிற வாழ்க்கை.

சொல்வித்தைகளிலும் மரபுத்தளைகளிலும் சிக்குண்டிருந்த தமிழ்ச் செய்யுளை சமுதாயப் பிரக்ஞையுள்ள கவிதையின் தளத்துக்கு பாரதி அழைத்து வந்தான். மரபுக் கவிதைகளுக்கு எதிராகப் போர்குரல் கொடுத்து எழுந்த புதுக்கவிதைகள் முற்றிலும் சமுதாய பிரக்ஞையோடு வடிவமெடுக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டன. ஆனால் அந்த எதிர்பார்ப்பை அது முழுவதுமாக நிறைவேற்றவில்லை.

தனிமனிதப் புலம்பலானது புதுக்கவிதை. இதை எதிர்த்து 'வானம்பாடி' இயக்கத்தினர் சமகாலச் சிக்கல்களை பிரக்ஞை பூர்வமாக எதிரொலித்தனர். சர்வதேச நோக்கில் மானுடம் பாடினர். மானுட நேயத்தை உரத்துச் சொன்னார்கள். அவர்களில் 'தமிழ்நாடன்' பேசிய சர்வ தேசீயம் என்னை வெகுவாக ஈர்த்தது. சர்வ தேசீயம் சார்ந்த என் உணர்வுகளின் வெளிப்பாடே 'ஒன்றே உலகம்' எனும் கவிதையானது.

'உலகம் ஒரு நாள் ஒன்றுபடும்
கிரகங்கள் அவ்வுலகின் வெளிநாடு
மனிதநேயம் அரசனாய் ஆளும்
மௌனப் பிடியிட்ட உணர்வுக் கத்தி
மொழிகளையெல்லாம் கொன்று புதைக்கும்
அன்பு நீரால் நிறத்தை அழிக்கும்
மானுடமெனும் ஒரே வண்ணத்தைப் பூசும்
மானுஷிகம் எனும் ஒரே மொழியையே பேசும்
அங்கு
குளங்களே கிணறுகள்
கடல்களோ குளங்கள்
பாலங்கள் இணைப்புகள்
வானம் பாதை'

புதுக்கவிதை மட்டுமல்ல, இன்றைய மனித நேயம் கொண்ட எல்லா அமைப்புகளுக்கும் பெண்ணுரிமையையும் பெண் விடுதலையையும் ஆதரித்து நிற்க வேண்டிய கடப்பாடு உள்ளது. அதை ஒரு ஃபேஷனாகவோ, வெற்றுக் கோஷமாகவோ ஆக்குகிற பொய்ப் புலம்பல்களை என்னால் சகிக்கமுடியவில்லை. எனது கவிதைகளிலும் பெண்களின் நிலை எதிரொலிக்கிறது. அவற்றில் சிலவற்றுள் விரக்தி தொனிப்பதாகக் கூடப் படலாம். நான்கு சுவர்களுக்கு இடையேயான அழுத்தங்களில் சிக்குண்டு நொறுங்கும் ஆயிரமாயிரம் பெண்களின் ஓலக்குரலே அது. வெள்ளைச் சுவர்களின் உள்ளே ரத்தம் சிந்திக் கொண்டிருக்கிற பெண்ணின் உணர்வுகள் எந்நேரமும் அறிவு பூர்வமான சீறுதல்களாக மட்டுமே இருந்து விடுவதில்லை. உணர்ச்சிகள் கொந்தளிப்பில் சிக்குண்டு அவதிப்படும் போது அவளுடைய குரல் தளதளத்தலும் இயல்பே. இந்த இரு வேறு குருல்களின் வெளிப்பாடாக என்னுடைய இரண்டு கவிதை நறுக்குகளை தரலாம் என்று எண்ணுகிறேன்.

'என்னடா மனிதன் நீயோர்
ஏந்திழை இன்கை பற்றப்
பொன் பொருள் மெத்தை பீரோ
பூந்துகில் ஆடை கட்டில்
இன்னமும் பாத்திரங்கள்
ஏதேதோ வேண்டுமென்பாய்
கன்னலைச் சுவைப்பதற்கும்
கைக்கூலி கேட்கின்றாயே!
சிலைநிகர் வடிவினாளை
திருமண மாலை சூட்ட

விலை வேண்டி நிற்கின்றாயே
விலைமகன் ஆயினாயே?'

ஒரு நிகழ்வின் அனுபவத்தை கவிஞன் அனுபவித்து எழுதுவது கவிதை. எனக்கு நேர்ந்த அனுபவங்கள், நான் சந்தித்த மனிதர்களின் அனுபவங்கள் பலவும் கவிதையாக எழுதியிருக்கிறேன். ஒரு பெண் காதல் தோல்வியால் தீயிட்டு தற்கொலை செய்து கொண்டாள். சவப் பரிதோதனைக்காக நான் அங்குச் சென்றபோது அவள் தொடையில் தன் காதலனின் பெயரை தீயால் எழுதியிருந்ததைக் கவனித்தேன். இந்த அனுபவத்தை 'தீ மலர்' என்ற தலைப்பில் கவிதையாக்கினேன்.

'அடடா!
யார் இந்த தாமரையில் சூடிட்டது?
யார் இந்தப் பஞ்சில் தீயால் எழுதியது?
இதயத்தில் மலராய்ச் சூட வேண்டிய பெயர்
சவத்தின் தசையில் தழும்பானதே! ஏன்?
தனது எலும்புகளிலே உளி கொண்டு கூட
அவன் பெயரைச் செதுக்க
சம்மதித்திருப்பாள் அவள்!
இதழில் ஏக்கம் -
இதயத்தில் காயம் -
கன்னங்களிலோ கண்ணீரின் ரேகை!
தொடையில் தீயால் பொறித்த
காதலன் விலாசம்!
இத்துடன் -
வாடிய தாமரைகள் கூட
சிரிக்கின்ற மடுவிலே -
இந்த வண்ணப் புதுமலர்
கவிழ்ந்ததேன் நடுவிலே?
தன்னை
விட்டுவிட்டுப் பறப்பதற்கே
அந்த வண்டிற்குச் சிறகுகள்
இருந்தனவேயன்றி
தன்னை
நோக்கிப் பறக்க அல்ல
என்கிற
சரியான விடையை எழுதாமல்
வாழ்வுத் தேர்விலே

தோற்றதற்கு
தண்டனையாய்தான்
அந்தச் சின்னத் தாமரை
சேற்றிலே புதைந்து
சிதைந்து போனதா?
அடி பெண்ணே!
நீ உன்
ஆயுளை மட்டுமல்ல
வாழ்வின் அர்த்தத்தையே
அநியாயமாய்
சுருக்கிவிட்டாய்..........
போ!'

என் கவிதை இப்படியான அனுபவத்தில் பிறந்ததே.

இன்றைக்குப் பெண்ணின் மனத்திலே மூண்டெரிவது காதல் நெருப்பு அல்ல. அங்கே கனன்று கொண்டிருப்பது வேதனையின் நெருப்பு. அடிமையாய் நுகத்தடியில் சுழன்று நொந்து கிடக்கும் தன்னை விடுவிப்பதற்காய் கனன்று களைத்து எரிந்து கொண்டிருக்கற நெருப்பு. அந்த நெருப்பு புதுக்கவிதைகளில் எதிரொலித்தால் அதுவும் அவளின் விடுதலையைப் பிரச்சாரப்படுத்தும். கவித்துவத்தை பிரகாசப்படுத்தும். மெய்யான நெருப்பில் எரிந்து முடிகிற எத்தனையோ பெண்களின் மரணத்தை நிறுத்த அது ஒரு துரும்பையாவது எடுத்துப்போடும். அதற்காக எழுதுகோல் எடுப்பதே இன்று காலம் கவிஞனுக்கு இடும் மகோன்னதமானக் கட்டளை!

பெண் பலவிதமான கொடுமைகளுக்கும் இன்னல்களுக்கும் ஆளானபோதும் அவள் தன்னைச் சுதாரித்து மறுகணமே தீக்கொழுந்தாய் சுடர்வாள். எப்போதோ முனகுகின்ற விரக்தியான அவள் குரலின் அடிநாதமாக அவளின் போர்க்குரல் நிறைந்திருப்பதை அக்கவிதையில் ஆழ்ந்து போகையில் படிப்பவரின் மனதினால் உணரமுடியும் என நான் எண்ணுகிறேன்.

புதுக்கவிதைக்கு மட்டுமல்ல. இன்றைய மானிடநேயம் கொண்ட எல்லா அமைப்புகளுக்கும் பெண்ணுரிமையையும் பெண் விடுதலையையும் ஆதரித்து நிற்க வேண்டிய கடப்பாடு உள்ளதென்று நான் நம்புகிறேன்; ஒரு ஃபாஷனாகவோ அல்லது கோஷமாகவோ பெண்களைப்பற்றி எடுத்துச் சொல்லப்படுவதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அல்லது, 'பாவம் - மென்மை உணர்வுகள் கொண்ட பெண்

பேதை' என்ற கழிவிரக்கத்தோடு எழுப்பப்படுகிற அனுதாபக் குரலினை என்னால் அங்கீகரிக்க இயலவில்லை. 'என் மனைவி, என் சகோதரி, என் தாய், என் மகள் ஒரு பெண்ணாகையால் பெண் விடுதலையை நான் பரிவோடு உணர்கிறேன்' என்று பொய்ப் புலம்பலை என்னால் சகிக்க முடியவில்லை. மானிடவர்க்கத்தில் சரிபாதியினரான பெண்கள் அநீதியான முறையில் அடிமைகளினும் கீழாக நசுக்கி வைக்கப்பட்டிருப்பதை என்னால் ஒரு கணமும் அனுமதிக்க முடியாது என்று தீர்க்கமாகச் சொல்கிற மனிதனை அல்லது மனுஷியை நான் இதயபூர்வமான மரியாதையோடு வரவேற்கின்றேன். அந்தக் குரலினை புதுக்கவிதையில் கொண்டு வருகிற, அந்தரங்கச் சுத்தியோடு வழிமொழிந்து எழுதுகின்ற புதுக்கவிதையாளர்களை பெண் குலத்தின் சார்பில் நான் போற்றி வரவேற்கின்றேன்.

எங்கும் [illegible] திசையில் நோக்கினாலும் பெண் கொச்சைப்படுத்தப்படுகிற காலம் இது. இந்த அவமதிப்புகள், அல்லல்களுக்கு எதிராகப் பெண் இயக்கங்கள், பெண் விடுதலைக் கருத்துகள் தோன்றுவது காலத்தின் தேவையே. இது எங்கோ ஒரு மூலையில் கனலும் சிறுபொறி நெருப்பல்ல. உலக முழுவதும் பற்றி எரிந்து கொண்டிருக்கிற மூங்கில் காட்டு நெருப்பு. இந்தப் பெரு நெருப்பிலே தமிழ்ப் புதுக்கவிதையும் தன்னைப் புடமிட்டு, ஆன்மசுத்தி அடைந்து தானும் தீப்பிழம்பாக தீவிரமாகப் பற்றிப் படர்ந்து எரிய வேண்டும்.

புதுக்கவிதைத் துறைக்கு நிறையவே பெண்கள் வரவேண்டும். அஸ்ஸாமிய **நிர்மல் பிரபா பர்டோலாய்**; வங்காளத்து சவிதா சின்ஹா; மராத்தியின் **இந்திரா பத்மா**; இந்தியின் **மம்தா**; இந்து **ஜெயின்**; மலையாளத்தில் **சுகத குமாரி** போல நமது மொழிக்கும், நமது பெண்களுக்கும் கலாச்சார அணி ஒன்றே அவசியப்படுகிறது.

நம் எதிரே மாபெரும் உலகக் கவிக்குரல் ஒலித்த பாப்லோ நெரூடாவும், மாயாகாவ்ஸ்கியும் அங்கே இருக்கிறார்கள். அலிஸ்வாக்கர், **பலேகா கோயிட் சைல்** போன்ற பெண்களின் சினந்த குரல் நமக்கு அருகே கேட்கிறது. பாரதி நம்மை வழிமொழிந்து உற்சாகம் தருகின்றான். **எரிக்கா ஹக்கீன்சின்** வீரக்குரல் நமது இதயத்தை தொடுகின்றது. ஈரானியப் பெண்ணான **ஃபரூக் ஃபரோக்சாத்** தனது கவிதைகளால் மானுடத்தின் மனசாட்சியைத் தட்டிக் கேட்கிறார். இவர்களின் குரலோடு நமது குரலும் கலக்கட்டும், மானுட விடுதலையை சாத்தியமாக்கும் பெண் விடுதலைக்காக சேர்ந்து போராட சித்தங் கொள்ளட்டும்.



